உ

ஸ்ரீ ராமஜெயம்

# ஸ்ரீமத் வால்மீகி ராமாயணம்

## ஸுந்தர காண்டம்

(தமிழ் வசனம்)



By

D. S. ராகவன்
Editorial Staff, 'The Hindu' (Retd.)

1973

RAMAYANA PUBLISHING HOUSE

MYLAPORE : : MADRAS-4

Price Rs. 6-00

# ஸுந்தரகாண்டம்

## அட்டவணை

## மூன்ரும் பதிப்பு

## முகவுரை

பகுத்தறிவு அடைந்த பின் ஜீவன் உயர்நிலை எய்த ஸ்ரீ வால்மீகி ராமாயணம் ஓர் ஒப்பற்ற ஊன்றுகோல், என்று இந்நூலின் முதற்பதிப்பு சிறப்புற்ற சான்று காட்டிற்று. ஒரே மாதத்தில் ஆயிரம் காப்பிகளும் (ஸுந்தரகாண்டம்) சிலவாகிவிட்டன. மிக்கப் பிரயாசையுடன் வெளி வந்த இரண்டாம் பதிப்பு அதுவும் முழுவதும் வாசகர்கள் கையேறிவிட்டது அச்சான்றுக்கு அத்தாட்சியாய் விளங்கிற்று. மூன்ரும் பதிப்பின் தேவை எழுந்து பெருகும் வேளை, காகிதவிலை, அச்சுக்கூலி, 'பைண்டிங் சார்ஜ்' முதலியன உச்சநிலை எய்தி இந்நூல் தடை நின்ற வேளை, ஸ்ரீ ராமாயண பதிப்பகத்தார் அத்தேவையை பூர்த்தி செய்ய முன் வந்தது. தமிழ்மொழிக்குத் தொண்டாற்றல் மட்டுமின்றி இறைவனுக்குச் செய்யும திருப்பணியாகும் என்று கொள்வது மிகையாகாது. ஆண்மீகத் துறையில் செல்ல ஆர்வங்கொண்ட ஆன்மாக்களனைவரும் ஆண்டவன் அடைய உதவும் இப்பதிப்பையும் பயன்படுத்திக்கொண்டு அச்சான்றை நிலை நாட்டுவார்களாக !

இந்த ஸ்ரீமத் வால்மீகி ராமாயண ஸுந்தரகாண்டம் மூன்ரும் பதிப்பு வெளிவர காரண பூதராயிருந்து ஊக்கம் அளித்தவரும் இப் பதிந்பு அச்சாகுங்கால் அதனை பார்வையிட்டுப் பிழைதிருத்திச் செம்மையுற ஆக்கியவரும்; எனது கல்லூரி தோழனுன ஆபத நண்பன், சென்னை R. ஸ்ரீனிவாஸன் B. A. ஆவர். ஆகவே அவருக்கு எனது மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்கி றேன்.

ஆசிரியர்

## ஸுந்தர காண்ட மகிமை

ஸ்ரீ உமா ஸம்ஹிதை எனும் புராணத்தில் ஸ்ரீ வால்மீகி ராமாயணம் ஸுந்தர காண்ட மகிமையைப் பற்றி பரமேச்வரர் பார்வதிக்கு விளக்கிய வசனங்களின் சாராம்சம் பின்வருமாறு:—

"ஹே! கிரிஜே! ஸுந்தர காண்டத்தைப் பற்றிக் கேட்கிருய். இதன் மகிமை அபாரம். அதைச் சற்று சொல்கிறேன் கேள். இதன் ரகசியம் முற்றும் அறிய வல்லவன் அந்த ரகுநாதன் தான். தேவர்களுக்கெல்லாம் உத்தமன் அந்த ஸீதாபதி. விருட்சங்களுள் உத்தமமானது கல்பக விருட்சம்; ரத்தினங்களுக்குள் உத்தமமானது கௌஸ்துபம்; அவ்வாறே ராமாயணத்தில் உத்தமமானது ஸுந்தர காண்டம். இதைப் படித்தாலும் கேட்டாலும். பிரவசனஞ் செய்தாலும் மனத்தில் கோரிய எண்ணங்கள்பலிக்கும். தரித்திரம் தொலைந்துபோம், உரோகங்கள் ஒழிந்துபோம், ஸ்ரீ ஜானகி—ரகுநாதர்களின் அருள் சுரக்கும், தீராத நோயாளிகளுக்கும், இது ஓர் பரமௌஷதம்.

அறுபத்தெட்டு நாட்களில் 68 தடவை ஸுந்தர காண்டம் பாராயணம் செய்து முடிக்கப்படுமாகில், அவ்விடத்தில் ஸ்ரீராகவன், ஸீதா சமேதராய் லட்சுமண, பரத, சத்துருக்ன, ஆஞ்சநேயர்களுடன் ஸ்திரவாசஞ் செய்வார். ராம பக்தியும், ராமானுக்கிரகமும் ஒருவனுக்கு ஏற்பட்டு விட்டால் அவன் எதைத்தான் சாதிக்க இயலாது?

"மேலும், ஸ்ரீ ராமானுக்கிரகம், என்ற சக்தி ராமாயணத்தை தூஷிக்கும் மகா அபராதிகளிடம் உண்டான அசுரத் தன்மையை விலக்கி. அவர்களுக்கு மனச் சாந்தியளித்து வேதாந்த அறிவைக் கொடுக்கும். அவர்களை சமுதாயம் முன்னேற உழைக்கும். பரம பாகவதர்களான தொண்டர்களாக்கி வைக்கும். ஸ்ரீவால்மீகி ராமாயணத்தை பக்தியுடனும், நம்பிக்கையுடனும் படிக்க வேண்டும். தினமும் சர்க்கரை கலந்த பாலையும் பழங்களையும் ஸ்ரீராமபத்ரனுக்கும் ஸீதாபிராட்டிக்கும் கண்டருளப்பண்ணி, பின்பு அதை அவர்கள் நிர்வாக அதிகாரியான ஆஞ்சநேயனுக்கு ராமப் பிரசாதமென்று நிவேதனஞ் செய்ய வேண்டும். அநந்தரம் அவர்களுக்கு மனப் பூர்வமாய் ப்ரணாமங்கள் செய்ய வேண்டும். அப்போது 'எனக்கு இது வேண்டும், அது வேண்டும்' என்று வேண்டாதிருப்பது உத்தமமான பகவத் சேவையாகும் இப்படி ஸுந்தர காண்டபடன விரதத்தை முடித்தால் இக பர பலன்கள் தாமாக வந்தடையும். இவைகள் காணும் வரை நம்பிக்கையுடன் ஸுந்தர காண்டத்தையும் ஸ்ரீ ராமபட்டபிஷேக ஸர்க்கத்தையும் மனந்தளருது படித்துக் கொண்டிருக்கவேண்டும்.

எனினும் குறிப்பிட்ட பலனை [அதாவது தரித்திரம் தவிர்தல், வியாதி நீங்குதல் முதலியவையை] கோருகிறவன், ஒரு வெள்ளிக் கிழமை ஸுந்தர காண்டத்தைத் தொடங்கி, தினம் ஒன்பது ஸர்க்கம் வீதம் பாராயணஞ் செய்து அடுத்த வெள்ளியன்று மிச்சமான ஐந்து ஸர்க்கங்களையும் பட்டாபிஷேக ஸர்க்கத்தையும் படித்து முடிக்க வேண்டும்.

## சப்த ஸர்க்க பாராயணம்

இப்போது ஸுந்தர காண்டம் சப்த ஸர்க்க பாராயணத்தைப்பற்றி பார்வதி பரமேச்வரரை விபரமாகச் சொல்லும்படி வேண்ட, அவர் சொல்கிருர்:—

தர்மார்த்த காமங்களை விரும்புகிறவனும், ஆபத்து நீங்க வேண்டுபவனும் சப்த ஸர்க்க பாராயணஞ் செய்தால் சித்தி பெறுவான். பாவங்கள் மறையும், கிரக பீடைகள் கழியும். உலகமியக்கும் சக்தி அவனிடத்தில் உணர்ச்சி எழும், எல்லா உற்பாதங்களும் அகன்றுபோம், எவனெவன் எதையெதை விரும்புகிருனே அதையதையே அடையச் சிறந்த வழி இச் சப்த ஸர்க்க பாராயண முறை.

ஸ்ரீராமனை மனத்திலிருத்தித் தியானம் செய்து ஸ்ரீராகவன் தன்முன் லட்சுமணர், வைதேகியுடன் பிரசன்னராயிருக்கிறார் என்று ஒரு ஆசன மண்டபத்தில் ஆவாகனஞ் செய்ய வேண்டும். பின்பு இடது புறத்தில் இன்னொரு ஆசனம்—ஓர் சுத்தஞ் செய்யப் பட்ட மணை இட வேண்டும். அதில் ஆஞ்சநேயர் அமர்ந்து பாராயணஞ் செய்வதைக் கேட்டுக் கொண்டிருப்பர். இந்த ஆசனத்தை பாராயணஞ் செய்யும் போது சிறிதும் நகர்த்தவும் கூடாது; அதை வேறு எவர்க்கும் வழங்கவும் கூடாது. பாராயணஞ் செய்யும் போது எத்தகைய பெரியோர் வரினும் அவர்க்கு உயர்ந்த ஆசனமளிப்பது தகாது. பாராயணம் முடியும் வரை எக்காரணம் பொருட்டும் ஸ்தானத்தை விட்டெழக் கூடாது. பாராயணம் முடியும் வரை எவ்வித அசம்பாவிதமும் ஏற்படாது, இது பிரமாணம், இப்படி விதிப்படி ஒரு நல்ல நாளில் சப்த ஸர்க்க பாராயணம் துவக்கவேண்டும். ஒவ்வொரு நாளிலும் பயபக்தியாய் நம்பிக்கையுடன் ஏழு ஸர்க்கங்கள் படித்து முடிக்க வேண்டும், இப்படி இக் காண்டத்தைத் திரும்பித் திரும்பி ஏழு, ஏழு ஸர்க்கம் படித்தால், அறுபத்தெட்டாவது தினத்தில் 68வது ஸர்க்கம்—கடைசி ஸர்க்கம் அன்று ஏழாவது ஸர்க்கமாக முடியும். அன்றுதான் பாராயணமும் முடிவடையும். பட்டாபிஷேக ஸர்க்கமும் வாசித்து, ரகுவீரன் திருமாமணி மண்டபத்தில், ஸீதா பிராட்டியுடன் விற்றிருந்து கேட்டருளியதாக, மனத்தில் கொண்டு, பின்பு சகல மரியாதைகளுடனும் வெகு சம்பிரமமாகவும் பட்டாபிஷேகங் கொண்டு திவ்விய மங்கள ரூபராய் காட்சியளிப்பதாக நினைத்து சகல நிவேதனங்களையும் ஸமர்பிக்க வேண்டும். உடனிருப்பவர்களுக்கு நைவேதயப் பிரசாதங்கள் வழங்கி, அன்னதானஞ் செய்ய வேண்டும், பார்வதி! இவ்வாறு பாராயணஞ் செய்து முடிப்பவன் மகா பாக்கிய சாலியாவான். ராமன் திருவருள் பெற்று உயர்வான். பின்னர் அவனுக்கு வேண்டியதொன்றுமில்லை.

சுருங்கச் சொல்லில். இச் ஸுந்தரகாண்டம் ஓர் கற்பக விருட்சமே! கனிகள் செறிந்த அமிர்த மரம் அது. ஒவ்வொர் கனியும் ஒவ்வோர் பலனை அளிக்க வல்ல தென்பது இதனால் விளங்கும்:—

1 ஸர்க்கம்—சம்சாரக் கடலைத் தாண்டுவான்;
3 ,, —பேய், பூதம், பில்லி, சூனியம், முதலிய தடைகள் தவிர்ந்துபோம்.
7,8,9,10,11 பரஸ்திரீ மோகம் களைந்து பரிசுத்தம் உருவாகும்.
13 —புத்திக் குறைவு நீங்கும்
15 — தாரித்திர நாசமும், தன விருத்தியும் கிடைக்கும்;
20 — நல்லெண்ணம். பாரமார்த்திக உணர்வு, ஆத்ம பரிசுத்தி வாழ்க்கை லட்சியம் உதயம்.
26 — இறைவனிச்சை, உயரிய உணர்ச்சி ஆத்மசக்தி முயற்சியுண்டாகும்.
35—39 — மனப் போக்கு மாறுபட்டு பிரிந்த கணவன் மனைவி ஒன்று சேறுவர்.
40—48 — விரோதிகள் நண்பராவார்.
52 — எதிர்பாராத துணை வந்துசேரும்.
53 — இறைவன் அருள் சுரக்கும் உணர்ச்சி காணும்.
57 — பிரிந்தவர்கள் கூட, சிறை நீங்க
61—62 — மனச்சோர்வு நீங்கும், உற்சாகம் பெருகும்.
65—68 — வாழ்க்கை இலட்சியம் ஈடேறும், இறைவனைத் துதி செய்து களிப்புற வைக்கும், பணித்துரைகள் தோன்றும்

மங்களம்

## பிரார்த்தனை

கற்பா ரிராம பிரானையல் லால்மற்றுங் கற்பாரே
புற்பா முதலாப் புல்லெறும் பாதியொன் றின்றியே
நற்பா லயோத்தியில் வாழுஞ் சராசரம் முற்றவும்
நற்பாலுக் குய்த்தன னன்முக னர்பெற்ற நாட்டுளே

—நம்மாழ்வார்

—:o:—

நாடிய பொருள் கைகூடும்
ஞானமும் புகழுமுண்டாம்
வீடியல் வழிய தாக்கும்
வேரியங் கமலை நோக்கும்
நீடிய வரக்கர் சேனை
நீறு பட்டழிய வாகை
சூடிய சிலையி ராமன்
தோள்வலி கூறுவார்க்கே.

நன்மையும் செல்வமும் நாளும் நல்குமே
தின்மையும் பாவமும் சிதைந்து தேயுமே
சென்மமும் மரணமும் இன்றித் தீருமே
இம்மையே ராமவென் றிரண் டெழுத்தினால்

—ஸ்ரீ கம்பநாட்டாழ்வார்

மூவுலகும் ஈரடியால் முறைநிரம்பா வகைமுடியத்
தாவிய சேவடி சேப்பத் தம்பியோடும் கான்போந்து
சோவரனும் போர்மடியத் தொல்லிலங்கை கட்டழித்த
சேவகன்சீர் கேளாத செவியென்ன செவியே?
திருமால்சீர் கேளாத செவியென்ன செவியே?

—சிலப்பதிகாரம்

—o—

திருமகளெம் பெருமாட்டி மகிழும் வண்ணச்
செழுங்கனியே கொழும்பாகே தேனே தெய்வத்
தருமனைக் காத்தருளாக் கரத்தே வென்றித்
தனுவெடுத்த வொருமுதலே தருமப் பேறே
இருமையு மென் னுளத்தமர்ந்த ராம நாமத்
தென்னரசே யென்னமுதே யென் தாயே நின்
மருமலர்ப் பொன்னடி வழுத்துஞ் சிறியேன் அந்தோ
மனந்தளர்ந்தேன் அறிந்தும் அருள் வழங்கி லாயே.

அறம்பழுக்குந் தருவே யென் குருவே யென்றன்
ஆருயிருக் கொருதுணையே யரசே பூவை
நிறம்பழுக்க அழகொழுகும் வடிவக் குன்றே
நெடுங்கடலுக் கணையளித்த நிலையே வெய்ய
மறம்பழுக்கும் இலங்கையி ராவணனைப் பண்டோர்
வாளியினற் பணிகொண்ட மணியே வாய்மைத்
திறம்பழுக்கும் ஸ்ரீராம வள்ளலே நின்
திருவருளே யன்றி மற்றோர்செயலி லேனே.

—திருவருட் பிரகாச வள்ளலார்

## ராமாயண பாராயண தியானம்

சுக்லாம்பரதரம் விஷ்ணும் சசிவர்ணம் சதுர்புஜம்
பிரஸன்ன வதனம் த்யாயேத் ஸர்வ விக்னோப சாந்தயே!
சகல இடையூறுகளையும் எக்காலத்துப் தவிர்க்கும் கஜானனையும் வணங்குகிறேன்.

---

## வால்மீகி வணக்கம்

கவிதைக் கொம்பின் உச்சியினின்று இனிய குரலில் அதிமதுரமாய் ராமா ராமா, வென்று கூவியழைக்கும் வான்மீகி கோகிலமே உமக்கு பிரணாமங்கள்.

கவிதையெனும் கானகத்தில் கம்பீரமாய்க் கவி பாடும் வால்மீகி முனி சிங்கமே!

இனிதிலும் இனிதான ராம கதை எனும் உமது கர்ஜனை ஒலிக்க,
அதைக் கேட்கும் எந்த ஸம்ஸார வனசாரிதான் உயர் கதி யடை யாதிருப் பன்?

எவர் ராம சரிதம் எனும் அளவிலா ஆரமுதக் கடலை அனவரதம் பருகியும்
பின்பு மற்றொன்றும் வேண்டாரோ, அப்பெருதவியாளருக்கு பிராசசேதஸ் என்பவர்க்கு எல்லா எனது நமஸ்காரம்

## ஆஞ்ஜநேயர் வணக்கம்

குளம்படியாய்க் கடல் கடந்து, அரக்கரை கொசுவாய் நசுக்கி ராமாயண மகா மாலையில் மணி ரத்னமாயமைந்த வாயுகுமரனே அடி பணிகிறேன்!

ஜானகியின் சோகம் தீர்த்த ஐயனே! அஞ்சனைச் செல்வனே வீரனே!
அக்ஷனை யழித்த அரக்கர் நகர் பயங்கரனே! மனோவேகம், வாயுவேகங் கொண்டவனே! புலன்களை வென்ற கலைஞனே!
வானர யூத முக்யனே, ஸ்ரீ ராம தூதனே, உன் திருவடிகளில் என் தலை அணியாகட்டும்

களியாட்டாய்க் கடல்தாவி, மைதிலியை யடிபணிந்து, அன்னையைக் குளிர வைத்து அவள் சோகத் தீயை எடுத்து அதனால் இலங்கையைச் சுட்டெரித்த சுடர்க் கொடியே, என் அஞ்சலிகள் பல.

'ஆஞ்சநேய, ஆஞ்சநேய' வென், றன்பழைப்பு பெற்றவனே! பொன்மலை யொத்த திருமேனியனே.

பாரிஜாத மரத்தடியில் பய பக்தியாய்த்·தவங்கிடக்கும் தனித்தொண்டனே.
உன் சேவடி செவ்வி திருக்காப்பு!

எங்கெங்கு ரகுநாத கீர்த்தனமோ, அங்கங்கு சிரமேற்கரங் குவித்து,
மனமுருகி, நீர்சொரிந்து

ஆநந்தத்தில் மூழ்கிக் கேட்கும் பரிபூரண பக்தனே ! பணிகிறேன்
பன்முறை.

## இராமாயணச் சிறப்பு

வேத வேதாந்த பரம்பொருள், தயரதன் தனயனாய்த் தோன்றியபின்
அச்சீரிய மறையின் செம்பொருளும் இராமயண தத்துவமாய்
உதித்தது காண் !

விண்ணவர்க்கும் விருந்தளிக்கும் இனிய கவி இசை யமுது,
சந்தியுடன் சமமான, செவிக்கினிய செஞ் சொற்கள்,
இலக்கண உறுப்புடன் நம் வினையகலத்துணை புரியும்.
தலை சிறந்த காவியமாம் ஸ்ரீராம சரிதம், உலகீர், செவிமடுத்துக் கேளுங்
கள்

## இறைவன் துதி

ஸ்ரீராகவ! தாசரதி! அளவிடற்கரிய அன்பனே! சீதாபதி ரகுகுல ரத்ன
தீபனே!
ஆஜானுபாகுவே! தாமரை தடங் கண்ணனே!
அரக்க குண மனைத்தும் முற்றும் அழிப்பவனே!
ஐயனே! அப்பனே! சரணம்! சரணம்!

ஸீதா பிராட்டியுடன், கற்பக மரத் தடியில், செழும்பொன் மண்டபத்தில்,
வைரமணியிழைத்த மலர் கமளும் பூங்கொடிப் பந்தலடியில்,
வெற்றி புகழ் திகழ வீர விலாசத்தில், அருள் பொழிய வீற்றிருக்கும் வீர
ராகவ!
பரத சத்ருக்கனர், பரம யோகிகள் புடை சூழ புனிதமான அரசவை முன்
னிலையில்
ராமகானமுதம் கேட்க தித்திக்கும் அருள் சுவையை எஎலோர்க்கும் பரி
சளிக்கும் மேகச்யாமளனே! தெண்டன் சமர்ப்பித்த விண்ணப்பம்!
பலகோடி நமஸ்காரம் ராமனுக்கும், தம்பிக்கும்;
வைதேகி தேவியார்க்கும் நமஸ்காரம்!
ருத்திர தேவருக்கும், தேவேந்திரனுக்கும், யமனுக்கும், வாயுவிற்கும் சூரிய
சந்திரருக்கும் நமஸ்காரம்;
சர்வ மருத்கணங்களுக்கும் என் மனப்பூர்வ நமஸ்காரம்!

# ஸ்ரீமத் வால்மீகி ராமாயணம்

## ஸுந்தர காண்டம்

---

காண்டத்தின் தனிச் சிறப்பு

இதற்கு முன்னுள்ள காண்டங்களுக்கும், பின்வரும் யுத்த காண்டத்திற்கும் ஸ்ரீ ராகவ சரித்திரத்தின் பிரதான விஷயத்தைக் குறிக்கும் வசனங்களால் ஸ்ரீவால்மீகி மகரிஷி அந்தந்தக் கருத்துக்களை வெளியிடும் பெயர்களை அமைத்துச் சென்றார், ராமசந்திரனின் குழந்தைப் பருவ நிகழ்ச்சிகளை வருணிப்பது பாலகாண்டம், அவன் வாலிப பருவ நிகழ்ச்சிகளையும் பட்டாபிஷேக முயற்சியையும் அதன் சூழ்ச்சியையும், வீழ்ச்சியையும் அவன் சிறிதும் மனந்தளராது கானகம் புகுவதுவரைப் படம் பிடிப்பது அயோத்தியா காண்டமாகும். ஆரணிய காண்டம் தண்டகவன சம்பவங்களையும் அன்னை வைதேஹி அரக்கரசனால் அபகரிக்கப்படுவதையும்சித் தரிக்கின்றது. கிஷ்கிந்தையில் நடந்தேறிய ஸுக்ரீவ சக்யம், வாலிவதம் முதலிய அனுபவங்களை விவரிப்பது கிஷ்கிந்தா காண்டமாகும். இதே போல், ராம ராவண யுத்தத்தையும் அதன் விளைவுகளையும் கண் முன் பதிய வைக்கின்றது யுத்த காண்டம் ஆனால் லங்கையில் நிகழ்ந்த மகத்தான செயல்களைச் சொல்லியிருக்கும் இக்காண்டத்திற்கு லங்கா காண்டம் எனப் பெயரிடாமல் ஸுந்தரகாண்டம் எனவழங்குவது ஏன்? ஸுந்தரம் என்பது எழிலின் சிறப்பைக் குறிப்பதாகும். அவ்வக்காலங்களில் விளைந்த வரலாறுகளை விவரித்துச் சொல்லும் மற்ற காண்டங்கள் அழகில்—இலக்கியத்தின்சுவையில்—குறைந்தனவல்லவே! எனினும் இக்காண்டத்தை மாத்திரம்குறிப்பிட்டு ஸுந்தர காண்டம் என்றழைப்பதின் காரனமென்ன? சரித்திர ரூபமாய்ச்சித்தரித்துக் கொண்டு போகும் ராமகதையில் இக்காண்டத்தை பொன்னேடுகள் கொண்டு திகழ்கின்றன என்பது நன்கு தெளிவாகிறது. இதன் காரணம் சற்று பரிசீலனைக்குரியதாகுமல்லவா?

முதல் முதலாக, மானிட பகுத்தறிவில் சில எண்ணங்கள் எழாமலில்லை, அதாவது, 'அமாநுஷ்ய' சக்தி—மானிட சுபாவத்தைவிட அதிகம் சக்தி வாய்ந்த ஓர் மானிடன் தன் தூய வாழ்க்கையாலும் செயலாற்றலாலும் நம் சமுதாயத்தையே மேம்படச் செய்கிறான். இன்னொரு உயர்தர ஜீவன்—அவளும் மானிட பெண்ணாகவே—வளர்ந்து வாழ்ந்து பதிபக்தியெனும் வாழ்க்கைத்தத்துவத்தை நிலை நிறுத்தி, சத்தியம், தருமம் என்ற ஜீவிய அரங்கத்தில் நம் கலாசார பண்பாட்டின் உயர் நிலையை நிரூபித்து சமூகத்தின் சுடர்க் கொடியாய் விளங்கித் திகழ்கிறாள்.

தருமத்திற்கும் சத்தியத்திற்கும் அக்கினி, வாயு முதலிய பஞ்ச பூதங்களும் எல்லா உலகும் கட்டுப் பட்டவைகள்தான் என்று நிதரிசனமாகக் காட்டுகிறாள். ஆபத்தான நெருக்கடியில் பதியிடமிருந்து தன்னைக்காணவந்த தூதனுக்குதவ தன் புண்ணிய பலனைத் தியாகஞ் செய்து அக்கினியைக் குளிர வைக்கிறாள். சத்தியம், தருமம் எனும் குண விசேஷங்களின் பலனைப் பணயம் வைக்கிறாள். இவைகள் உண்மை வலிவு கொண்டன என்று நிரூபிக்கத் தன் உயிரையே மாய்த்துக் கொள்ளும்

திட நம்பிக்கை கொண்டு இவள் பின்னர்த் தீக்குளிக்கப் போகிருள். இவள் பதிவிரதா தர்மம் இக்காண்டத்தில் விளங்கிப் பரிமளிக்கிறது ஓர் ஸௌந்தர முறையில்.

மேலும் வெகு ஸௌந்தரமாகவே அக்காலத்துக் கலாசார பண்பை அழியாச் சிற்பமாகச் செதுக்கி வைப்பது இக்காண்டத்தில்தான். ஒரு குலமாது அன்னிய புருஷனை நேர் முகமாக உரையாடுவதில்லை என்பது இன்னும் நம் நாட்டுப் பழக்கம் நடைமுறையிலிருந்து வருவது கண்கூடு. ராவணன் ஸீதா தேவியிடம் நேரில் வந்து உரையாட விரும்புகிருன். அவன் எண்ணம் பலிதமாவதில்லை. அவளோ ஒரு துரும்பைக் கிள்ளி எதிரே கிடத்தி அதைநோக்கின வண்ணம் பதிலளிக்கிருள். அன்னியன் ஓர் துரும்புக்குச் சமானம். அதிலும் கெட்ட எண்ணம் கொண்டவன் புல்லறிவாளன். எனினும் ஓர் சிறு துரும்பும் சமயத்திற்கு உதவும். இதை யொட்டி அம்மதிவீனனுக்கு புத்தி புகட்டுகிருள்.

மேலும் காவிய இலக்கிய முறையிலும் இக்காண்டத்தில் எழும் உணர்ச்சிகள் ஸௌந்தரமாகவே அமையப் பெறுகின்றன. சிருங்கார ரசமென்பது காவியத்தின் எல்லாச் சுவைகளிலும் சிறந்ததென்பது மொழிப் புலவர்களின் சித்தாந்தம், சுவையணிகளின் ஒன்ருன 'விப்ரலம்ப சிருங்காரம்'—தலைவன் தலைவி பிரிவாற்ருமையில் எழும் உணர்ச்சித்ததும்புதல் இக்காவியத்திற்குமிக்க சுவையூட்டும் லக்ஷணமாகக் கொண்டது என்பார்கள். இச்சுவையுணர்ச்சி தேள்ளென விளக்கி படிப்போர், கேட்போர் மனத்தை உருக்கிப் பிணிப்பதும் இக்காண்டத்திலேதான். அரக்கிகளின் மனவோட்டங்களும் பாவனைகளும் பேச்சு வார்த்தைகளும் நகைச்சுவையை எழுப்பாமலில்லை. பெருமிதங் கொண்ட அரக்கர்களின் தற்புகழ்ச்சிகள், பின்பு அவர்களின் அலங்கோல முடிவுகள், இவைகளே இச்சுவையுணர்ச்சிக்குச் சான்று. மேலும் பழுதை, படிந்தாம்பு முதலிய கயிறு கொண்டு பிணிக்கப்பட்டு நாட்டிற் புகுந்த அந்நிய நாட்டுத்தூதனைக் கட்டி இழுத்திடத் தெரு வழியே ஆரவாரிக்கிருர்கள் அரக்க மக்கள். ஸூக்ஷ்மமான பிரும்மாஸ்திரம் என்ற விலங்கில் கட்டுண்ட அநுமன் வேறுகயிறுகளால் கட்டப்பட்டபோது உண்மையில் கட்டு தளர்ந்தவனுகிருன். எனினும் அதை வெளிக் காட்டாது இன்னும் கட்டிலிருப்பவன் போல் நடிக்கிருன். இது ஓர் ஆச்சரியத்தை எழுப்புகிறது. இதே போல் மற்ற சுவைகளும் மலிந்து கிடக்கின்றன. பொருட் சுவையும் கலைச் சுவையும் கலந்து வீரத்தைக் கிளப்பி வெற்றி காண அமைகின்றன இக்காண்டத்து உயிரோவியங்கள். சோக நிலையில் வாடி வெதும்பி மனமுடைந்த ஸீதா பிராட்டி காற்றின் வழியே வரும் அமுதூட்டும் இன்னிசை கேட்டு மனம் தேறுகிருள் உண்டு, எத்தகைய வருத்தத்திலும் ஓர் ஜீவனுக்கு மீட்சி உண்டு என்ற வாழ்க்கையில் ஓர் நம்பிக்கை உதயமாகின்றது. ஆற்றலுடன் பணி செய்யும் ஊக்கமும் ஊற்றெடுக்கின்றது.

தவிர, ஆகாய மார்க்க வர்ணனை, இலங்கை நகரமைப்பு, மாட மாளிகையின் தோற்றச் சிறப்பு, சிங்காரத் தோட்டங்களின் வனப்பு, புஷ்பக விமான வர்ணிப்பின் கீதம், அரண்மனை மகளிரின் மனப்பான்மைச் சித்திரங்கள், பலாத்கார சாத்வீக வசனங்களின் போர், அநுமனின் அறப்போர், ஆற்றல்கள், ராவண தர்பார், நெருக்கடியில் தோன்றும் அக்காலத்து அரசியல் முறை, நகரம் தீக்கிரையானமை முதலிய காட்சிகளின் அமைப்பு ஓர் பிரத்தியேக ஸௌந்தர அமைப்பென்பதை மறுக்க முடியுமா?

மேலும், ஸ்ரீ ராம சரிதையை அங்க ரூபமாகக் கருதுங்கால், பாலகாண்டம் பாதங்களாகவும், அயோத்திய காண்டம் இடையாகவும், ஆரணிய காண்டம் மார்பாகவும், கிஷ்கிந்தா காண்டம் புஜங்களாகவும், யுத்த காண்டம் முகமாகவும் அமையப்

பெறின், இவ்வுயர் திரு சிற்பத்திற்கு ஸுந்தர காண்டம் உயிர் நாடி என்பது மிகை யாகுமோ ?

தவிர, வாழ்க்கைத் தத்த்வ பரிசீலனையில் இன்னொருஸுந்தரமான படிப்பினையை இக்காண்டம் தீட்டித் தருவதையுங் காணலாம். உலகில் மானிட வாழ்வில், நீடித்த துன்பமும் இன்பமும், வாழ்வும் தாழ்வும், செம்மையும் வறுமையும் தனியே மாறாது நின்று விடும் தன்மையுடையனவல்ல. அடங்காத் துயருக்கும் மீட்சி உண்டு. மதப் பெரியார்கள் தெளிவாக்குவது போல் இறைவன் கருணை எந்த மனிதனுக்கும் உண்டு. எனினும் அக் கருணையடையும் தசை எய்தல் வேண்டும் எதிர் பாராத இடர்பாடுகளில் நசுக்குண்டு எங்கும் எவராலும் மீட்சி காணாது இன்னலுரும் சூழ் நிலையில், தன் சக்தி குன்றித் தவித்துத் தத்தளிக்குங்கால், "ஐயனே! நீயே கதி" என்று இறைவன் பாதங்களில் தஞ்சமடையும் ஜீவன் எதிர் பாராத உதவி காண்பது சகஜமன்றோ! "ஆகிஞ்சினியம்" "அனன்னிய கதித்துவம்" என்று இந்நிலையைக் கூறுகிறார்கள். அப்பொழுதுதான் "ஜாயமான கடாக்ஷம்" இறைவனருள் சித்திக்கும் என்கிறார்கள். அதாவது சரணாகதி எனும் தத்துவம் நிருபணமாகின்றது.

இக்காண்டத்தில் இது பரிமளித்து மிளிர்ந்து மலிவதைக் காணலாம். மனமுடைந்து பிராயோபவேசஞ் செய்யும் வானரர்கள் கடற்கரையில் மாருதியை நோக்கி "நீயே எங்களுக்கு மீட்சி கொணர்வாய்" என்கிறார்கள். அவர்களுக்கு அபயமளித்து உற்சாகங் கொண்டு வானில் விரைகிறான் ஆஞ்ஜனேயன். லங்கையில் இறங்கினதும் அதைக்காத்து வரும் லங்கணி எனும் கோர அரக்கி நகர்வாயில்முன் தடை செய்கிறாள். அநுமனுடன் கை கலக்கிறாள் அடிபட்டு கீழேவிழுந்ததும் அவள் சுய அறிவு பெறுகிறாள். சாபத்தால் நேர்ந்த அரக்கத் தன்மையை உணர்கிறாள். தான் ஒரு தேவதை, இப்பொழுது விடுதலை யடைந்து விட்டதையும் உணர்ந்து வாயு குமாரனை வாழ்த்தித் தன் வழியே தேவலோகம் செல்கிறாள். பின்பு மாருதி லங்கை நுழைந்து அன்னை ஜானகியைத் தேடுகிறான். எங்கும் துருவித் துருவி தேடியாய் விட்டது. மனமுடைந்து கையைப் பிசைகிறான். "ஐயோ! என் செய்வேன். முயற்சி வீணானதே! ஐயனே நீயே கதி" என்று ராம நாமத்தை ஜபிக்கிறான். உடனே அசோகவனம் காண்கிறான் ! அதே ராம நாமத்தால் அன்னையருள் பெறுகின்றான். வெற்றி வீரனாய் துலங்குகிறான். சரணாகதி தத்துவத்திற்குக் கை விளக்காகிறான்.

இதே வாய்ப்பில் துயர் கடலில் மூழ்கி உயிர் மாய்க்கவிருக்கும் மிதிலைச் செல்வி, காற்று வாக்கில் வந்த ராம கீதத்தைக் கேட்டு நிமிர்ந்து நின்று கரை சேருகிறாள் ஐயனிடமிருந்து வந்த தூதனைக் கண்டு மனந்தேறுகிறாள். இப்படி வாழ்வின் கடைத் துறையிலிருப்போர்க்கு கடைத் தேறுவது நிச்சயமென்று விளக்குகின்றன இக் காண்டத்தின் நிகழ்ச்சிகள்.

கேவலம் ஒரு மாயக் காக்கை—இந்திரனின் மகன் அன்னையின்மார்பெழிலில் மதி மயங்கி அவள் ஸ்தனத்தைத் தீண்டியது. குருதிச்சொட்டில் கண்விழிக்கிறான் கோசலேந்திரன் ராஜ குமாரனான ராகவேந்திரனும் மிதிலாபுரி இளவரசியான வைதேகியும் யௌவனத்தைத் தனியே காட்டில் ஓர் பர்ணசாலையில் சுவைத்து இன்புறும் காலம் அது. சீறி எழுந்த கோசலேந்திரன் ஓர் தர்பைப் புல்லைக் கிள்ளி பொல்லாக் காக்கையை நோக்கி எறிகிறான். அது அக் காக்கையை மூவுலகிலும் கதறவடிக்கிறது. ஓர் இடத்திலும் காப்பு காணாது கதிகலங்கிக் கடைசியில் "காகுஸ்தனே தஞ்சம்" என்று அவன் காலிலேயே வந்து விழுகின்றது. ஐயனும் அபயமளிக்கின்றான். தனது துஷ்டப்பார்வைக்காக ஒரு கண்ணைத் தண்டனையாகக் கொடுத்து விட்டு

அது உயிரை மீட்டுக் கொள்கிறது. இத்தகைய சரணாகதி சம்பவத்தை தேவி நலை னுக்குத்தூதுச்செய்தியாகச் சொல்லி அனுப்புகிறாள். இந்நிகழ்ச்சி ஸீதாபிராட்டியின் சொல்லோவியத்தில் வெகு ஸுந்தரமாக தீட்டப்பட்டிருக்கிறதென்பதற்கு ஐய முண்டோ ?

இதே போல், ஆஞ்சநேயன் தேவியிடம் இசைத்த ஸுக்கிரீவ சரணாகதியும் இச் சித்திரசாலையில் புதுவர்ணமிட்டு திகழ்கின்றது. மேலும் உண்மையுணர்ந்த திரிஜடை எனும் அரக்கியும் அவளைச் சார்ந்தோரும் அன்னை ஜானகியை சரணமடைகிறார்கள் இக்காண்டத்தில். அரக்கி தான் கண்டகனவைச் சித்தரிக்கையில் பின் நடக்கவிருக்கும் விபீஷண சரணாகதியையும் பல வர்ண ரூபமாகப்படமெடுத்துக் காட்டுகிறாள்.

இதே வர்ண ஜாலத்தில் போய்க் கொண்டிருக்கிறது! இக்காண்டத்தின் ஸுந் தரமானநடை. "பாதகா! உன் தீவினையும் தவிர்ந்து போம். தாசரதியைத் தஞ்சமடை" என்று அரக்கரசனை எச்சரிக்கிறாள் பிராட்டி.

"சர்வலோக சரணியனான ஸ்ரீராகவனின் ஸுந்தரப் பாதங்கள் எவ்வுலகோர்க் கும் புகலிடம். உன் நன்னகரையும், கீர்த்தியையும், மக்களையும், உன் உயிரையுமே நாசமாக்கி விடாதே, அழிந்து போவாய். அன்னையை அழைத்துச் சென்று அண்ண லிடம் அடைக்கலம் அடை" என்று சரணாகதி மார்க்கத்தை அரக்க சபையில் ஆஞ்ஜ நேயன் அரசன் மனக்கண்ணிற்குத் திறந்து வைக்கிறான்.

ஆகவே, ஸ்ரீ மத் வால்மீகி ராமாயணம் முழுவதும் ஓர் தனிப்பெரும் சரணாகதி சாஸ்திரமாகக் கருதப்படின், இக்காண்டம் அதற்கு உயிர் நாடியாகச் சிறப்புற் றோங்குவது ஓர் ஸுந்தரத் தன்மையல்லவா ?

இனி, சரித்திர முறையிலும் இக்காண்டம் ஸுந்தரமாய் அமையப் பெற்றிருப் பதும் புலனாகின்றது. வரலாற்றைவரையும் வல்லாளர் வால்மீகி ஸ்ரீ ராம சரிதையை எவ்வாறு சரித்திர முறையில் இக்காண்டத்தில் கையாளுகிறார் என்பது மதிப்பிடற் பாலது. லங்கை நகரமைப்பு, புஷ்பக விமான மேன்மை, அரசனது ஆளும் திறனும், சேனையின் அணிவகுப்பும் வித வித அரண்களும் அதற்கேற்ப இயந்திர சாலைகளும் ஓர் தனிச் சகாப்தத்தில் நாகரீகம் முதிர்ந்த ஒரு திவ்விய காட்சியில் கொண்டு போய் சேர்க்கிறது. எதேச்சாதிகாரியாயினும் மந்திராலோசனை செய்கிறான் பலாத்காரமாக அன்னிய மங்கையை அபகரித்து வருகிறான். அவளைத் தனியிடத்தில் சிறை வைக்கிறான். எனினும் அவளை பலாத்காரமாக இம்சிப்பதில்லை. எதேச்சாதி காரத்திலும் எல்லையுண்டு போலும் ! தேவதைகளும் அவன் ஆட்சிக்கு அடி பணிந்து வந்த காலம் அது. எனினும் வைதேகி அக்கினி தேவனை பதி பக்தி எனும் தருமத்தில் ஆணையிட்டு சுடாமல் மாத்திரமல்ல ; பனிக்கட்டி போல் குளிர்ந்திருக்கவும், ஆக்கினை விடுக்கிறாள். அரக்கரசனுக்கு உட்பணிந்தவன்தான், ஆனால் அதைப் புறக்கணித்து தருமத்தில் நிற்கிறான் அவ்வக்கினி தேவன்.

அரச சபையில் ஆஞ்சநேயன் நிற்கிறான். வேறு கயிற்றினால் கட்டப்பட்டதால் அவனை முன்பு பிணித்த பிரும்மாஸ்திரம் விலகிச் சென்றது. இதை அறிந்து தானிருக்கிறான் அரக்கரசனின் மகன் இந்திரஜித். எனினும் சபைமுன் இதை தெரி விப்பதில்லை. அமைச்சர்களமர்ந்த சபையினோரின் பண்பு போலும் !

அரச சபையில் மாருதியின் முகவுரை அக்காலத்து கலாசாரப் பண்பைத் தெளி வாக்குகிறது. அரசியல் முறை, அதாவது அரசனே எதிரில் பேசாது மற்றவரைக் கொண்டு தூதனை விசாரித்தல் ; தூதர்கள் பணியாற்றும் வகை ; (அதாவது எதிரி யின் பலாத்காரத்தைத் தந்திரமாக அறிந்து கொள்ளல்), சமரசப் பேச்சு வார்த்தைக்

காக வந்த தூதர்களுக்கு மரண தண்டனை தகாதென்று ஓர் சபையினர் எடுத்துரைப்பது, அவ்வநுபோகத்தை அரசன் அங்கீகரிப்பது முதலிய காட்சிகள் ஓர் தனிச்சிறப்புற்றோங்கித் திகழ்கின்றன.

மற்றொரு ஸுந்தரமான அம்சமும் இக்காண்டத்தில் இலக்கிய முறையில் நன்கு அமையப் பெற்றிருப்பதைக் காணலாம். கதாபாத்திரங்கள் தங்கள் தங்கள் போக்குகளில் செயலாற்றுகிறார்கள். ஆனால் இவர்கள் எல்லோரும் தங்களாலியன்றவரை முன் ஏற்பாடின்றி இவ்விராம கதையை மேலும் மேலும் மெருகூட்டுகிறார்கள். உதாரணமாக, கடலரசன் மைனாகத்தை எழுப்பும் முன்னுரை, இந்திரனது புகழுரை, திரிஜடையின் கனவுரை, லங்கணியின் எச்சரிக்கை, '' அற்ப மானிடன் '' என்று ராவணன் ராகவனை இகழ்தல், அவனுக்கு அன்னையின் மதியுரை, ஆஞ்ஜநேயன் தேவியிடம் வர்ணிக்கும் ராம கதை, அதில் கோடிட்ட இடங்களைப் பூர்த்தி செய்யும் வைதேகியின் நினைவுரை, ''இவள் அற்ப மானிடப் பெண். இவளால் உங்களுக்காக வேண்டியதென்ன'' வென்று ஸீதையிடமிருந்து ராவணனைத் திருப்பி அழைத்துப் போகும் தானியமாலினி என்பவளின் காதற் சொற்கள்—இவைகள் ஒவ்வொன்றும் பராம கதையைப் பற்றியவையே எனினும் ஒன்றுக்கொன்று முரண்பாடின்றியும் திருப்பித் திருப்பிச் சொல்லும் பழங்கதை போலிராமலும், நம் கவனத்தை இழுத்து, வித வித அம்சங்களை விளக்கித் தந்து கண் முன் ஊற்றுவித்த ஓவியத்தை நாலா பக்கத்திலிருந்தும் காண்பதற்குப் பேருதவிசெய்யும் அமைப்பு ஸுந்தர அமைப்பின்றி வேறாகுமோ ? ஒரே கதைக் கருத்தைப்பற்றி வெவ்வேறு பாத்திரங்கள் விதவிதமாக வர்ணமிட்டு எல்லா வர்ணங்களும் ஒருங்கே சேர்ந்து அவ்வோவியத்திற்கு மென்மையூட்டும் வன்மை ஸுந்தரமானதே என்பதை யார் மறுக்க முடியும் ?

இவை தவிர, இக்காண்டம் வெகு ஸுந்தரமான காண்டம் தான் என்று வலியுறுத்த இதில் சில தத்துவங்கள் ஆதரவளிக்கின்றன. முதலில் வாயு குமரன் ஆற்றல் கொண்டு வானில் பாய்ந்து விரைகிறான். உணர்ச்சி உச்ச நிலையடைந்தால் எதையும் சாதிக்கலாமென்ற உண்மைக்கு ஹநுமானின் கடல் கடத்தல் சிறந்த ஒரு அத்தாட்சி. யோகப் பயிற்சியில் சித்தியடைந்த தனிப்பெரும் யோகி மூச்சையடைத்து உடலை இலேசாக்கிக் காற்று வேகம் பறக்கிறான். இதைக் கவனிக்கும் ஒவ்வொருவரின் கவனமும் மாருதியின் வேகத்தில் கலந்து கொள்ள ஆசை கொள்கிறது. உணர்ச்சி தானாகவே உயரக் கிளம்புகிறது. மனோநிலை ஜடவஸ்துவை விட்டு மேலெழுந்து பாய்ந்து செல்லும் ஓர் அதிசய நிகழ்ச்சி. அசாதாரணம்தான், எனினும் அணிமா, மகிமா பயிற்சியில் சித்தி பெற்றவர்க்கு அசாத்தியம் என்பதில்லை. எனவே உயரிய உணர்ச்சி மேலிடில் எவ்விதமான காரியமும் எளிதாகி விடும் என்று நிதரிசனமாகிறது.

பின்பு மாருதி லங்கையடைந்து தேவியைத் தேடுகிறான். பலனில்லை எனினும் முயற்சியை விடுவதில்லை. முயற்சி திருவினையாக்கு மென்பதை நிலை நிறுத்துகிறான். தன் கடமையைச் சரிவரச்செய்யின் பலன் தானாக சித்திக்கும் என்பதும் தெளிவாகிறது. நுண்ணறிவும் ஆணவமும் தன்னம்பிக்கையும் ஒன்று கலந்த ஆஞ்சநேயனின் ஆற்றல்கள் அநேகபடிப்பினைகளை வலியுறுத்தாமலில்லை.

மதியின் வலியால் மனத்தைக்கட்டி அறிவின் மேதையில் ஆபத்தை அகற்றுகிறாள் ஓர் அரக்கி, தன்னுடனிருக்கும் போது, தன்னைவிட்டு, தன் கண்முன்னேயே இன்னொரு பெண்ணை இச்சித்து இச்சகம்பாடும் கணவனை அவன் மனைவி தன் உணர்ச்சிகளையடிக்கி அவனைத் தன்னுடன் அழைத்துச் செல்கிறாள் தானியமாலினி.

எத்தனை விதமான மனவேதனைகள், மனவோட்டங்கள்! வாழ்க்கைக்கு அறிவே பிரதானம். அறிவினால் அனைத்தையும் உணர்ந்து உள்ளிருளைப் போக்கி கடவுள் ஜோதியைக் காண்கிறாள் திரிஜடை என்னும் இன்னோர் அரக்கி.

இவனுக்கு மரணமென்பது கிடையாது என்று முதல் முதல் இந்திரஜித் வாயு குமாரனை கண்ணுற்ற போதே உணர்ந்து விடுகிறான். அப்போதே அரக்க குலத்திற்கு விநாச காலம் கிட்டி விட்டதென்று உணராமலிருப்பவனா? எனினும், இதை அரசனுக்குத் தெரிவிப்பதில்லை. அசோக வனம் அழிந்து விட்ட தென்று அரசனிடம் ஓடோடியும் வந்து செய்தி சொல்கிறார்கள். அப்பொழுதே இடி விழுந்தவன் போலாகிறான் தசகண்டன். அவன் மன நிலையை அவன் சொற்களாலேயே வெகு அழகாக சித்தரிக்கிறார் ஆதிகவி வால்மீகி. எனினும் அவன் தன் பிடிவாதத்தை விடுகிற தில்லை. அற்ப மானிடனால் ஆவதென்ன வென்று வாளாவிருக்கிறானா? இத்தகைய சிந்தனைக் கிளர்ச்சிகளை உணர்கிறோம்.

ஆகவே, இக்கதையின் தலைவியால் கற்பின் சக்தியும், ஹநுமான் நடத்திய உயர்தர ஆராய்ச்சிகளால் எல்லையற்ற வலிவுடையரேனும் ஒழுக்கம் தவறின ஒருவன் தன் தவறாலேயே அவ்வலிவிற்கு எல்லை தேடிக் கொள்கிறான் என்பதும், ஒவ்வாத காம இச்சை ஆத்ம பலத்தையும் அழிக்கவல்லது என்பதும், கதாநாயகனின் நாமோச்சாரணம் ஒன்றாலேயே அநுமன் சகலத்தையும் சாதிக்கிறான் என்பதால் கதாநாயகன் உலக முதல்வன், ஆதியஞ்சோதியை அங்கு வைத்து தசரதன் மகனாய் தரையில் வந்து நம்முள் ஒருவனானான் என்பதும், ஏனைய பல்வேறு வாழ்க்கை உண்மைகளும், நுட்பமான மனோதத்துவங்களும் தெள்ளென தெளிவாக்குகின்றன இக்காண்டத்தில். எனவே இச்சுந்தர காண்டம் இதர காண்டங்களுக்கு நாயக மணியாய் விளங்குகிறது என்றால் மிகையாகாது.

மற்றும், ஸுந்தர காண்டம் என்பதற்கு, ஸுந்தரன் என்று ஆஞ்ஜநேயனுக்கு பெயருள்ளமையால், அவன் செயலாற்றல்களை விவரிக்கும் பாகம் ஸுந்தர காண்டம் என்றும் பொருளுரைப்பார் ஆன்றோர்.

————

பகுதி 1

# அனுமனின் கடல் கடத்தல்

''ஸ்ரீ ராமச்சந்திரனின் பணியில் ஈடுபட்டு அவன் உத்திரவை முடித்து வைப்பதே நம் வாழ்க்கையின் குறிக்கோள்; அதுவே அவனை யடையும் வழி; அதுவே அவன் மனத்தை களிப்புறச் செய்யும் நன்மருந்து; அதுவே உயிரை விடத்துணிந்து மனம் சோர்ந்து செயலற்றுக் கிடக்கும் வானரர்களுக்குப் புத்துயிரளித்துப் புகழரங்கில் நிறுத்தச் செய்யும் கருவி. அநுமன்! நீர் ஒருவரே கடலைக் கடக்கவல்லீர்; உம் வலிவை அளவிறந்தது எழுங்கள்!'' என ஜாம்பவான் விளக்க உரைதந்து—அனுமனின் அளவற்ற சக்தியை உன்னத நிலைக்கு எழுப்பினான். அதை செவிமடுத்துக் கேட்டதும் ஆஞ்ஜநேயன் தன் உடலும் உள்ளமும் ஆற்றலும் ஒன்றித்து உயரெழும்புவதை உணர்கின்றான். வானவரது வான் வழியில் தன் ஒப்பற்ற வேகத்தைச் செலுத்தி லங்கையையடைந்து ராகவன் மனைவியைத் தேடிவருவதில் முழு கவனத்தையும் செலுத்துகிறான். செயற்கரிய செயலாற்றத் துணிந்த அப்பெரியோன் தன் தலையையும் கழுத்தையும் உயர்த்தி கடுமுழக்கம் புரியும் காளமேகமெனத் திகழ்ந்தனன். அவனது தாமரை முகம் ஸுந்தரமாய்த் துலங்கியது. பரந்து கிடந்த அவன் மார்பகங்கள் வீர விலாசத்துக்கு விளக்கம் தந்தன. அவன் தன் மார்பகத்தினால் தன் வழிக்குத் தடையாகவுள்ளவற்றை தகர்த்தெறிகின்றான். மரங்கள் 'கிடு கிடு' என அசைந்தாடின. பறவைகள் பறந்து வட்டமிட்டோடின. காட்டில் தனியரசு புரியும் ஆண் சிங்கமென மகேந்திர மலையின் மீது தாவி நின்றான்.

அன்று அம்முகடு புத்தொளிபெற்றுத் திகழ்ந்தது. விதவித வண்ண மலர்கள் மலர்ந்து குலுங்க, பலவிதம் பசுங்கொடிகள் கற்களுக்கிடையே காட்சியளிக்க, கின்னர, கிம்புருட, கந்தர்வர் செல்லும் ககனமும் கவிந்து நிற்க, ஓராழ்ந்தத் தாமரை யோடையில் இருக்கும் மதயானையென மாருதி மாண்புறத் திகழ்ந்தான். அது ஒப்புயர்வற்றச் ஸுந்தரக் காட்சியாக விளங்கியது.

உடனே அனுமன் முறையாக ஸூர்யன், இந்திரன், வாயு, பிரும்மன் மற்றுமுள்ள தேவர்களுக்கும் வணக்கம் செலுத்தி வானர வீரர்களைப் பார்த்து நீவிர் இங்கயே இருங்கள் என்று கூறிவிட்டு தெற்கு நோக்கிச் செல்ல ஆயத்தமாகிறான்.

(அனுமன் தானறிந்தபடி தேவர்களுக்கு வணக்கம் செலுத்துகிறான் போலும்! பிறந்தவுடன் ஸூர்யனைப் பழமென பறித்துண்ணச் சென்றதும், இந்திரன் வஜ்ஜிரா

யுதம் கொண்டு தாக்கியதும், வாயு புத்திரனுக்கு இழைத்த கொடுமையைக் கண்டு வெகுண்டு மறைவதும், பிருமன் தோன்றி வரமளித்தலும் நினைக்கற்பாலவை.)

அனுமன் உடலில் ஒரு புத்துணர்ச்சிப் புலப்படுகின்றது. "இது ராம காரிய சித்தியின் முன்னறிவிப்பு" என்னும் தன்னம்பிக்கை யொளி உடல் முழுவதும் பரவி முறுக்கேறியது. ஸ்ரீ ராகவனை மனத்தில் நினைத்தான். வானரோத்தமர் பார்த்துக் கொண்டிருக்கும் போதே மாருதியின் உடல் காற்றைப் போன்று வானெங்கும் வளர்ந்து பரவிற்று.

(அனுமனே ஒரு உண்மை பிரும்மச்சாரி. யோக வலிமை நிறைந்தவன் ஆத்ம சக்தி பிரகிருதியை விட்டு தனித் தெழும்படிச் செய்யும் வன்மை பெற்றவன். உண்மை உணர்வு கொண்ட மெய் ஞானி. ஸ்ரீராம பக்தியாலும் அதில் தனக்குண் டான நன்னம்பிக்கையாலும் யோக சித்தி எய்துகிறான்).

புது வீரியம் பெற்று முன்கால்களை நீட்டி, லங்கையைத் தன்குறிக் கோளாக்கி கடலை எளிதில் கடக்கத் தன் உடலை இலேசாக்கித் தன் வலிமையின் திறமையைத் தானுணறக் கால்களால் மலையை ஊன்றி அமுக்குகிறான், அவ்வளவுதான்! மலைகள் கிடுகிடுத்தன. மலையின் மரங்கள் அசைந்தன. அதன் பூக்கள் பல பலவென உதிர்ந்தன. மலைபிளவுகளினின் றும் நீர்க்கால்கள் ஒலித்த வண்ணம் வழிந்துப் பெருகின; கற்பாறைகள் உருண்டோடின. விலங்கினங்கள் வீறிட்டலறிப் புடைத்து பயந்தோடின. கொடிய கருநாகங்கள் சீறிச்சென்றோடி மறைந்தன. "என்ன இது? பூதம் மலையைப் பிளக்கின்றதோ"? என முனிவர்களும் வித்யாதரர்களும் எண்ணி வெளியேறினர். சிலர் மதிமயங்கி கதிகலங்கி நின்றனர். பிறகு உண்மை யறிந்து உவகைக்கடலில் திளைத்தனர். "ஆம்; ராம காரியம் இவ்வெளிய உவர்க்கடலை மட்டுமோ கடக்கவல்லது, என்றும் வற்ரு பிறப்பு இறப்பு எனும் அலை வீசும் ஸம்சாரக் கடலையே கடக்கும் வன்மை பெற்றதாயிற்றே!" என்று அவர்கள் நினைத்தனர்போலும்! அனைவரும் ஒருங்கே அனுமனை நோக்கி நின்றனர். அவனைக் கூர்ந்து கவனிக்கின்றனர். அவன் வாய் ராம ஜபம் செய்வதைக் கண்டு அவர்கள் வாய்களும் தாரகத்தை முணு முணுக் கின்றன.

அனுமன் தன் தந்தையை தியானிக்கின்றான். கடலைக் கடக்க ஆயத்தமாகின்றான். வெற்றி முழக்கமிட்டு மயிர் சிலிர்க்க மிகக் கூர்மையான மயிர்கள் செறிந்த நீண்ட தன் வாலைக் கருடன் பாம்பைச் சுழற்றுவது போலச் சுழற்றினான். உடல் வலிவையும் ஆத்ம வலிமையையும் ஒருங்கே திரட்டிக் கைகளைப் பாறையில் உறுதியாக ஊன்றினான். இடையைச் சுருக்கி வயிற்றை மடித்துக் குடலைங் சுருக்கி நீண்டதோர் மூச்சிழுத்து யோகமுறை யைக் கையாண்டான், "எப்படி ராமன் விடுத்தவாளி விரைவாகச் சீறிப் பாய்ந்து பறந்து செல்லுமோ, அப்படியே ராம காரியத்தில் ஈடுபட்ட இவ் வுடல் தாவிப் பறந்து செல்லும். இமைப் பொழுதில் லங்கையையடை வேன். ஸீதையைத் தேடுவேன். காணாவிடின் தேவருலகம் புகுந்து பார்ப்

யேன். அங்குமில்லையெனின் மீண்டும் லங்கையடைந்து ராவணனைக்கட்டி இழுத்துவந்து கிடத்துவேன். கவலைவிடுக. ராமன் பணி வெற்றியெய்தும்; பணிமுடித்து வெற்றியுடன் திரும்புபவனாகவே என்னைக் காண்பீர். ஏன் ? லங்கையையே பெயர்த்துப்பிடுங்கிக் கொணர்ந்து வீழ்த்துவேன்'' என்று வீர உரை நிகழ்த்தி, கருடனைப் போன்று வான்வழி புகுந்தான் வாயுவின் வீரப்புதல்வன் !

மாருதி கிளம்பிய வேகத்தால் மரங்கள் வேருடன் மேலெழுந்து சாடி வீழ்ந்தன. ஹனுமான் புறப்பாடு ஒரு ஒப்புயர்வற்ற பேரானந்தக் காட்சியாகத் திகழ்ந்தது. ஹனுமானின் துடைகளின் வேகத்தால் மரம் முதலிய தாவர இனங்கள் சிறிது பின்சென்று பிறகு கீழே விழுந்தன. இரு கைகளையும் நீட்டி நீந்தும் பாய்ச்சலின் விசை, கடலையும் ஆகாயத்தையும் விழுங்குவதைப்போல் காணப்பட்டது. பூமியிலுள்ளவர் இதைக் கண்டு வியந்தனர். அவன் உடலது பாய்ச்சல் வானில் சூரியமண்டலம் வரைச்சென்று பாய்ந்து பறப்பதைச் சித்தரித்தது. வால் வெற்றிக் கொடி காட்டி வானோங்கிப் பறந்தது. மேலே செல்லும் அவன் வேகம் கடலைப் பொங்கச் செய்தது. பத்து யோசனை அகலமும் முப்பது யோசனை நீளமும் உள்ள அவன் நிழல் கரும் பெரும் நீரைக் குடை பிடித்துக்கொண்டு விரைவதுப்போல் தோன்றிற்று. தேஜஸ்வியும், பேருடல் பெற்றவனும், மகாகவியுமான அவ்வீரன் நிர்மலமான வாயு மார்க்கத்தில் சிறகை விரித்துச் செல்லும் மலைபோல் விளங்கினான். அவ்வேகம் உயரப் பறக்கும் பக்ஷிகளையும் மேகங்களையும் இழுத்துக் கொண்டு சென்றது.

இக் காட்சியைக் கண்ட தேவர்கள் பூமாரி பொழிந்தனர். ஸ்ரீராமஜயம் என்று வானெழுக் தெழுத, கதிரவனும் வெப்பத்தைத் தணித்தான், காற்று குளிர்ந்து வீசிற்று. முனிவர்களும் தேவர்களும் மாருதியை மனமாரப் புகழ்ந்து மேலும் உற்சாக மூட்டினர்.

இவ்வாறு அதிவேகமாய் ஒவ்வொரு யோஜனையாய் தாவிக் கடந்து செல்லுங்கால் கடலரசன் தானும் இப்புனிதப் பணியில் பங்கெடுத்துக் கொள்ள எண்ணினான். ''இத்தொண்டில் உதவி புரியாது நின்றிட்டால் செய்நன்றி மறந்தவனாவேன்'' என்று உணர்ந்து, தான்தோன்றக் காரணமாக இருந்த ஸகரனை நினைத்து அர்குலத்தோன்றலாம் தாசரதிக்குத் தொண்டாற்ற விரைந்தான். ஒரேமூச்சாய்ச் செல்லும் இவன் சிறிது இளைப்பாறிச்செல்லுதல் நலமென நினைத்து தன்னுள் மூழ்கி மறைந்து கிடக்கும் மைநாகம் என்ற மலையை வெளியே வரும்படி அழைத்தான். ''பர்வதோத்தம! பாதாளத்திலுள்ள அசுரர்களுக்குத் தடையாக நீ தேவராஜனால் நியமிக்கப்பட்டுள்ளாய். அசுரர்கள் மேலே வர இயலாது பாதாள வாயிலைத் தடுத்து நிற்கின்றாய். அத்தகைய பேருதவிபுரியும் செல்வனே ! உனது சக்தியை நினைவூட்டுகிறேன். ஹனுமான் ராம காரியத்தின் பொருட்டு அதிவேகமாக விரைந்து செல்லுகின்றார். இதோ உனக்கு மேலே அவர் வந்து கொண்டிருக்கிறார். அவருக்கு உதவவேண்டியது உன் கடமை'' என்று கூறினான்.

(தன் கருமமே கண்ணாகி தன்னம்பிக்கையில் திளைத்து, தந்தையின் தன்மையைத் தனதாக்கி எல்லாவற்றையும் ராம காரியம் என்ற உயரிய உணர்வில்

பிணைத்து, பிரும்மசரிய வலிமையைக் கொண்டு வானெழும்பி விரைந்து செல்கிறான் ஆஞ்ஜநேயன். அவன் வேறு உதவியை விரும்பினானல்லன். எனினும், வெற்றியை மனக்கண் முன் நிறுத்தி வீரியத்துடன் வேகம் கொண்டு பாய்கின்ற அவனுக்கு உதவி செய்ய வேண்டியது தனது கடமை என்று கடலரசன் வெளியிடுகின்றான். கற்பாறை வடிவமான மலையரசனான மைநாகத்தை அழைக்கின்றான். வானில் வாயு, வையத்தில் நீர், பிருதிவியாகிய மலை, ஆகாயத்தில் விண் மீன்,வை வயோனின் அக்னித் தன்மை, ஆகியஐம்பெரும் பூதங்களும் ராம காரியத்திற்கு உதவிபுரிய முன் வருகின்றன போலும்! இது தவிர, தற்கால அறிவு உயர்ச்சியில் பௌதிகமே நாகரிகமாகவும் கலாசார அளவுகோலாகவும் அமையப்பெறுவது உலகப் பண்பாடு என்ற முறையில், இந்நிகழ்ச்சி சில அரிய சிந்தனைகளை எழுப்பாமலில்லை. ஆகாய மண்டலத்தில் வரையறுக்கப்பட்ட எல்லையை அதாவது: சந்திரமண்டலம், பூமி, பரிமாணவாயு இவைகளை விட்டு ஏதேனும் ஒரு வஸ்து மீறிவிட்டால், உடனே அதைக் தரைக்கு இழுக்கும் ஆகர்ஷண சக்தி அதனிடத்திருலிந்து போய்விடும். பின்பு அது பூமிக்குத் திரும்பாது. ஆகாயமார்க்கத்திலேயே மற்ற மண்டலங்களைப் போல் சுற்றிச் சுற்றி வந்துகொண்டேயிருக்குமே தவிர, பூமிக்கு வரவே வராது.

அதேபோல், ஹனுமானே ஆகாய மார்க்கத்தில் புகுந்து விண் கதிர்கள் ஒலி செய்ய, விரைந்து பிரயாணம் செய்கிறான். பூமியின் ஆகர்ஷண சக்தியை விட்டு அப்பால் செல்ல உடல் தன் பளுவை விட்டுக் காற்றுடிபோல் இலேசாகப் பறந்து போகின்றது. இதைத் திரும்பவும் அடிக்கடிப் பூமியின் ஆகர்ஷண சக்திக்கு உட்படுத்தினபோதுதான் அவன் எளிதில் தரையில் இறங்கமுடியும். ஆகவேதான் ஒன்றிரண்டல்ல: மூன்று தடைகள் குறுக்கிட்டு வாயு குமாரன் வேகத்தையும் உடலையும் பற்றிக் கீழ் இழுத்து இவ்வாகர்ஷணசக்திக்கு உட்படுத்துகின்றன. கடைசியில் எளிதாக இலங்கைத் தரையில் மாருதி இறங்குவதற்கு இத்தகைய தடைகள் இன்றியமையாதனவாகவும் பேருதவி புரிவனவாகவும் அமைந்தன. சமுத்திரராஜன் மொழிகளே இதற்குச் சிறந்த சான்றாகும்.)

கடலரசன் மேலும் கூறுகிறான் :- "பருவதராஜனே! நமக்கு நன்மையைச் செய்வாயாக. ஆகையால் இவ்வஞ்ஜனைச் சிறுவன் உன்னாலும் என்னாலும் பூஜிக்கத் தக்கவன், ஆகையால் கடலினின்று மேலே எழுந்திரு. பாய்ந்து செல்பவர்களுக்குள் சிறந்தவரும், நமக்கு அதிதியும், பூஜ்யருமான இந்த ஆஞ்ஜநேயர் உன்னிடத்தில் கொஞ்சம் தங்கிச் செல்லட்டும். தேவ கந்தர்வர்கள் இருக்கும் புனிதமான இடம் உனது சிகரம் அவர் அதில் சற்று இளைப்பாறிச் செல்லட்டும் இக் காரியம் உன்னால் செய்யப்பட வேண்டியதே. ஸ்ரீ ராகவனுடைய பரிசுத்த தன்மையை நினைப்பாயாக. அவர் தேவியார் மைதிலி வேறொருவரிடத்திலிருப்பதையும் அவளிடம் ஸ்ரீராம காரியமாக மாருதி செல்வதையும் நினைப்பாயாக அவர் காரியம் கைகூடுவதற்கும், உன்னிடம் இவ்வானரேந்திரர் இளைப்பாறுவதற்கும் நீ மேலெழுவதற்குக் கடமைப்பட்டவனாகிறாய்" என்றான்.

கடலரசன் சொற்களைக்கேட்ட மைநாகம் உடனே கடல்நீரை பிளந்து கொண்டு மேலெழுந்து, வரவரப் பெரிதாகி பொன்முடியுடைய சிகரத்துடன் வானளாவி உயர்ந்தது. அதன் சிகரமும், அதனிடமுள்ள செடி கொடிகளும் சூரிய கிரணங்களைப்போல் ஜொலித்தன. நறுமணங்கமழும்

மலர்ச்செடிகளுடன் மலை வெகுதூரம் மேலெழவே மேகங்கள் அதை உராய்ந்து சென்றன. வெண்புகை தீட்டிய அம்மலைச் சிகரம் கண்ணைக்கவரும் காட்சியளித்தது !

உயர உயர கிளம்பி பொன்மயமாய் விளங்கிக்கொண்டிருந்த மலைச் சிகரத்தை மாருதி கண்ணுற்றான். அது தன் வழியை மறைத்து குறுக்கே நிற்பதைக் கவனித்து, அது தனக்கு இடையூறு இழைப்பதாகக் கருதி, ஒரே பாய்ச்சலாய் அதைத் தன் மார்பினால் மோதித்தள்ளினான். மலை கீழே ஆழ்ந்து அமுங்கியது! மைநாகம் அமுக்கப்பட்டதும் அது ''நல்லது நம் ஆகர்ஷணசக்தி இவரைத் தொட்டுவிட்டது'' என்று திருப்தியடைந்தாற் போல மகிழ்ச்சியடைந்து மானிட உருவம் கொண்டு வெளித்தோன்றி மாருதியை நோக்கி ''மகானுபாவரே! மகத்தான செயலை மேற்கொண்டு அதை முடித்துவைக்க முனைந்திருக்கிறீர். ஆகையால் என் சிகரத்தில் சிறிது நேரம் தங்கி இளைப்பாறிப் பின்பு செல்லலாம். எனது பூஜைக்குரிய பெரியவரே ! என் விண்ணப்பத்திற்குச் சற்றுச் செவிசாய்க்க வேண்டும். ஸ்ரீராமனுடைய மூதாதையர் சமுத்திரம் உண்டானதற்கு மூலகாரணமாவர். கடலரசர் நன்றி பாராட்டி நம் ஸ்ரீ ரகுநாதனைப் பூஜை செய்ய எண்ணி உம்மைக் கௌரவிக்க எண்ணுகிறார். நன்றியைத் தெரிவித்துக் கொள்வதே ஸநாதன தருமம். ஆகையால் எம்மரசரது கௌரவத்தை ஏற்றுக்கொள்ளத் தக்கவராகிறீர். 'இவ்வானரவீரர் நூறு யோஜனை தாண்டி வருகிறார். உன்னிடம் சற்று இளைப்பாறிச் செல்லட்டும்' என்று என்னை அவர் ஏவியிருக்கிறார். ஆகையால் கவிச்சிங்கமே! சற்று என்மேல் தங்கி, எங்கள் விருந்தோம்பலை ஏற்றுச் செல்வீராக! நறுமணமும் இன்சுவையுங்கொண்ட கந்த மூலபலங்களைச் சமர்ப்பிக்கிறேன். அமர்ந்து அமுது செய்தருள்வீராக. கவிவீரரே! மற்றொன்று கேளும். சிறந்த குணசாலிகளான உம் போன்ற அதிதிகளை அழைத்து பூஜை செய்ய வேண்டுமென்பது மூவுலகிலும் நடைமுறை நியதியன்றோ? மேலும், பிரத்யேகமாக உம்மை நான் கௌரவிக்க வேண்டிய காரணமும் ஒன்றுண்டு. அதைக் கேட்பீராக. வாயு குமார! தருமமறிந்த விவேகி, தன்னிடம் வந்த ஓர் அதிதி சாமானியமானவனாயினும் அவனுக்கு மரியாதை செய்யவேண்டியது கடமை. உம்மைப் போன்ற மகனீயரை அதிதியாயடைந்தால் அந்தப் பாக்கியத்தைச் சொல்லவும் வேண்டுமா ? கவி சிரோமணியே ! தேவர்களுள் சிறந்த வாயுவின் புத்திரர் நீர். வேகத்தில் அவரையே ஒப்பவர். தருமமுணர்ந்தவரே ! உம்மை பூஜிப்பது வாயு தேவரை பூஜிப்பது ஒக்கும். மேலும், அப்பனே ! முன்பு கிருத யுகத்தில் மலைகள், பறவைகள் போல் இருபுறத்தும் சிறகுகள் உடையனவாயிருந்தன. அவற்றால் பூமியினின்று ஆகாயத்தில் எழுந்து பறந்து திரிந்து, தாம் நினைத்த விடங்களில் உட்கார்ந்து பலவிடங்களையும் பாழாக்கி வந்தன. அதனை முனிவர்களாலறிந்த திரிலோகாதிபதியான தேவேந்திரன் சினந்து தன் வஜ்ராயுதத்தால் அவைகளின் சிறகுகளை அறுத்துத்தள்ளலானான். அப்போது அவன் என்னை நெருங்குவதைக் கவனித்த உமது தந்தையான வாயுதேவர், என்னை உடனே இக்கடலினடியில் கொண்டு சேர்த்தார். இதனால் இந்திரனது வஜ்ராயுதத்திலிருந்து தப்பினேன். ஆகையால் நான் அவரை என்றென்றும் பூஜிக்கக் கடமைப்பட்டுள்ளேன். அவருடைய அருமை புத்திரராகிய உம்மை நான் பூஜித்தால் அவருக்குத் திருப்தி அல்லவா ? ஆதலின் உம்மை பூஜிக்கிறேன். என் பூஜையை ஏற்றுக்கொண்டு

சற்று இளைப்பாறி கடலரசனையும் என்னையும் அனுக்கிரகம் செய்ய வேண்டும்'' என்று விண்ணப்பித்தான்.

இதைக்கேட்ட மாருதி சற்று நிதானித்தான்.

(இந்த இடைவேளை போதுமல்லவா பூமியின் ஆகர்ஷண சக்தியைப் பரப்புவதற்கு ? என்ற பிரச்னையை மைநாகம் மனதிற்கொண்டதுபோலும் !)

மிக்க பெருந்தன்மைகொண்ட மொழியில் ஆஞ்ஜநேயன் மைநாகத்தை நோக்கி, ''மலையரசே ! உங்கள் மரியாதையால் நான் மிகவும் கௌரவிக்கப்பட்டவனாகிறேன். உங்களுடையதும் சமுத்திர ராஜருடையதுமான கௌரவத்தைப் பெற்றேன்; களிப்புறுகிறேன். ஆகையால் உங்கள் அதிதி பூஜை சபலமாயிற்று. இளைப்பாறி போகாததால் அதிருப்தியடைய வேண்டாம். ஸ்ரீ ராம காரியமாகச் செல்கின்ற நான் சிறிதும் தங்குவதற்கில்லை. கால தாமதம் செய்தால், பகல் கழிந்துபோம். அதற்குமுன் நான் உங்கள் ஆசியுடன் விடைபெற்றுச் செல்கிறேன்; வருத்தம் வேண்டாம்'' என்று ஹனுமான் உரைத்துவிட்டு ஒரு கையினால் மலையைப் பிடித்துக் கொண்டு புன்சிரிப்புடன் மறுபடியும் ஆகாயத்தை யடைந்து பிரயாணமானான்.

ஹனுமான் முன்னினும் உயரக் கிளம்பித் தன் தந்தையின் மார்க்கத்தையடைந்து நிர்மலமான ஆகாயத்தில் செல்லவே, அங்குள்ள தேவகணங்கள் ஹனுமானைப் புகழ்ந்தனர். இந்திரனும் இந்நிகழ்ச்சியைக் கண்டு தன் வஜ்ராயுதத்துக்குத் தப்பி மைநாகம் கடலில் ஒளிந்து கொண்டதைப் பற்றிச் சினம் கொள்ளாது, களிப்பு கொண்டு மைநாகத்தை நோக்கி ''அப்பா! உன் குண விசேஷங்களைக் கண்டு மகிழ்ந்தேன். உனக்கு ஒரு வரமளிக்கிறேன் ! நீ இனி எனக்காக அஞ்சி கடலுள் மறைந்து கிடப்பதை விட்டு, உன் இஷ்டம் போல் சஞ்சரித்துக்கொண்டு சுகமாயிரு. ஸ்ரீ ராம காரியத்தில் ராமதூதராகச் செல்லும் மாருதிக்கு நீ செய்த உபகாரம் மகத்தானது'' என்று வாழ்த்திப்போனான்.

பின்பு ஆகாயமார்க்கத்தில் அதிவேகமாய்ச் சென்றுகொண்டிருக்கும் ஹனுமானை தேவர்கள் கவனித்தார்கள். (அங்குள்ள தேவர்களும், ஸித்தர்களும், அதிக உயரத்திலேயே சென்றுக்கொண்டிருந்தால் ஹனுமான் பூமியின் தன்மையை விட்டொழிந்தவனாவான்; பின்பு அவன் தரைக்குத் திரும்புவது சந்தேகந்தானென்று விஞ்ஞான முறையை உணர்ந்தனரோ என்னவோ !) அவர்கள் ''இவன் இலங்கைக்குச் சென்று பிராட்டியைத் தேடி வெற்றியுடன் திரும்புவானா? ராக்ஷஸர்களுக்குப்பயந்து பின் வாங்குவானா ? அல்லது அவர்களுக்கு இரையாய் விடுவானா?'' இதைமுன்னதாக பரிசோதித்தறியவேண்டுமென்று, பேரொளி படைத்தவளும் நாகங்களின் மாதாவுமான 'சுரசை' என்பவளை நோக்கி, ''விசும்பினூடே வந்து கொண்டிருக்கும் வாயுகுமாரனுக்குச் சற்று இடையூறு செய்'' என்று ஏவினார்கள். அவளும் இசைந்து அரக்க உருவம் கொண்டு கடலின் மத்தியில் நின்றுகொண்டு (அதாவது: பிருதிவியின் ஆகர்ஷண சக்தியைத் தன்னுள் இழுத்து ஹனுமானிடம் புகுத்தவோ என்னவோ !) பறந்து விரைந்து வரும் வானரவீரனை எதிர்த்துப்பேச ஆரம்பித்தாள்:- ''வானர காளமேகமே ! தில். தேவர்களால் நீ எனக்கு இரையாகப் படைக்கப்பட்டிருக்

கிருய். இதோ இந்த என் வாய்க்குள் புகு; உன்னைத் தின்பதாக இருக்கிறேன்'' என்று வாயைத்திறந்து கொண்டு ஹனுமானை விழுங்க வந்தாள்.

“இதென்ன தடை? வையத்தார் வானிற் சென்ருலும் விக்கினம்! இதுவும் ஓர் சோதனை போலும்!'' என்று எண்ணமிட்டுக்கொண்டே சுரசையை நோக்கி, ''அம்மணீ! தசரத சக்ரவர்த்தி குமாரன் ஸ்ரீ ராகவன் தமது பத்தினியுடனும், தம் தம்பியுடனும் தண்டகவத்தில் தங்கியிருந்தார். ஒருநாள் அவர்கள் வெளியில் சென்றிருக்கையில் அரக்கனுன ராவணன் நற்குண நிதியும் பேரெழிலும் படைத்த அவர் மனைவி வைதேகியாரைப் பலாத்காரமாக அபகரித்துக்கொண்டு போய்விட்டான். ஸ்ரீ ராமனுடைய ஆக்கினையின் பேரில் நான் ஸ்ரீ ஸீதாதேவியிருக்குமிடம் தேடச் செல்கிறேன். நீ ராம ராஜ்யத்தில் வசிப்பவளாகையால் தருமப்படி ராகவன் விஷயத்தில் உபகாரம் செய்யக் கடமைப்பட்டவள். அவர் தூதனுன என் விஷயத்தில் நீ விரோதம் செய்யாமலாவது இருத்தல் வேண்டும். நிச்சயமாக ஒன்று சொல்லுகிறேன் கேள். மைதிலியைக் கண்டு, பின்பு ஸ்ரீ ராகவனிடம் சென்று செய்தி சொல்லிவிட்டு நானே உன் வாயில் புகுந்து உனக்கு இரையாய் விடுகிறேன், இது உண்மை; சற்று அதுவரை ஆறியிரு'' என்ருன்.

அவள் அதற்கு இசைவளா? ''யாரும் என்னைக் கடந்து செல்லக் கூடாது. என் வாய்க்குள் நுழைந்தேதான் போகவேண்டும். இது எனக்குப் பிரமதேவர் அருளிய வரம்'' என்றுரைத்துத் தன் வாயை மிகப் பெரிதாய்த்திறந்து கொண்டு நின்ருள்.

மாருதிக்குக் கோபம் வந்து விட்டது. 'என்னை விழுங்குவதுதான் அவள் கருத்து போலும்!' என்று கருதி அவளைப் பார்த்து, ''அப்படியா? சரி; என்னை விழுங்குமளவு உன் வாயைப் பெருக்கிக் கொள்'' என்று கர்ச்சனையிட்டான். உடலையும் பத்து யோஜனை பெரிதாக்கிக் கொண்டான். உடனே சுரசை தன் வாயை இருபது யோஜனை திறந்து கொண்டாள். மாருதி முப்பது யோஜனை யாஞன். அவள் நாற்பது யோஜனை அளவு வாயைத் திறந்தாள். இப்படி சுரசையும் ஹனுமானும் நூறு யோஜனை வரை முறையே தம் வாயையும் உடலையும் பெருக்கிக் கொண்டனர். அத்தருணம் அந்த நுண்ணறிவாளியான ஹனுமந்தன், மிக்க கோரமானதும், நரகக் குழியை யொத்ததுமான அவள் வாய்க் குகையைக் கண்டு கணத்தில் கட்டை விரலளவாகத் தன் உடலைச் சுருக்கிக் கொண்டு அவள் வாய்க் குகையில் பாய்ந்து காதின் வழி வெளிக்கிளம்பி மறுபடியும் ஆகாயமார்க்கம் வந்தடைந்தான்! பின்பு ஹனுமான் சுரசையே நோக்கி, ''தாக்ஷாயணீ! உனக்கு நன்றி செலுத்துகிறேன். உன் இஷ்டம் பூர்த்தியாயிற்றென்று நினைக்கிறேன். இனி வைதேகியினிடம் செல்வேன்'' என்ருன்.

சுரசா தேவியும் தன் சுயரூபமடைந்து, இராகுவின் வாயிலிருந்து விடுபட்ட சந்திரனைப்போல் பிரகாசிக்கும் ஆஞ்ஜநேயனைப் பார்த்துக் களித்து ஆசி கூறி, “வீரரே! வானரோத்தம! காரியம் கைகூடினவனுக உன் இஷ்டம் போல் சென்றுவா. மகாத்மாவான ஸ்ரீ ராகவரிடம் வைதேகியைச் சேர்த்து வைப்பாயாக!” என்று அருள் மொழிகளைக் கூறி அனுக்கிரகித்

தான். முதலில் ஹனுமான் கடல் கடக்க மேலெழும்புதல், இரண்டாவது மைநாக பருவதத்தை ஆழ்த்தியது, மூன்ருவது சுரசையை உபாயத்தால் வென்றது ஆகிய இவற்றைக் கண்டு விண்ணேர் பெரிதும் வியந்து கொண்டாடினர்.

பின்பு ஆஞ்ஜநேயன் கருடவேகத்தில் செல்ல ஆயத்தமானுன். இனி இடையூறு காணுமல் செல்ல வேண்டுமென்று எண்ணமெழுந்ததோ என்னவோ, ஆகாயமண்டலத்தை விட்டு, இன்னும் உயர்ந்த வாயு மார்க்கத்தை எட்டினுன். அது ஒரு தனிப்பட்ட மகிமை வாய்ந்த மண்டலமென்பது புலனுயிற்று. தும்புறு என்ற புனிதமான தேவாத்துமாக்களிருப்பிடம்! பெரியோர்கள் சுயம்பிரகாசத்தையும் புண்ணிய ஒளியையுங் கொண்டு தங்க, இந்திரன், அக்கினி, சந்திரன், சூரியன் முதலிய தேவதைகள் வந்து செல்லும் திவ்வியப் பிரதேசம் அது. ஆத்துமச் சுடர்களின் இயற்கை யொளியை விண் கதிர்கள் எப்பொழும் பிரகாசிப்பித்தது. மாருதியின் வேகம் மேகக் கூட்டங்களை இழுத்துச் சென்றது. இப்படி இவ்வுயர் கதியில் விரைந்து சென்ற வாயுபுத்திரனைத் திரும்பவும் பூமிக்கு இழுத்துவைக்கவோ என்னவோ, அப்பொழுது கீழே கடல் நீரிலிருந்த 'ஸிம்ஹிகை' என்ற ராக்ஷஸி மிகுந்த வேகங்கொண்டெழுந்தாள். தனக்கு மேலே பறக்கும் பக்ஷிகளின் நிழலைப் பிடித்திழுத்து அவைகளைக் கொன்று தின்று வாழ்வது அவள் ஜீவியம்.

[கோர அரக்கி; எனினும் ஓர் உருவத்தின் நிழலைப் பற்றி இழுக்கும் சக்தி அவளிடம் இருந்தது. ஓர் அற்புதமான சக்தி; எனினும் அச்சக்தி தீமை புரிவதற்குச் சாதகமாயமைந்தது. அதாவது, எவ்வளவு நுட்பமாகவும் நயமாகவும் மந்திரசக்தி வன்மை கொண்டதோ அவ்வளவுக்கவ்வளவு தீமை பயக்கும் தந்திரசக்தியும் மாந்திரீக முறையில் ஏவல் செய்யும் சக்தியும் இருந்து வருவது தெளிவாகிறது.]

மாலைக்கதிரவன் கிரணங்கள் வானில் பாய்ந்துசெல்லும் மாருதியின் நிழலை மேலும் நீண்டதாகச் செய்யவே, ஸிம்ஹிகை என்ற அரக்கிக்கு அதைப்பற்றி இழுக்க எளிதாயிற்றுபோலும்! அநேக குன்றுகள் கொண்டு ஓர் பெரிய மலைபோல் அந்நிழல் பறந்து செல்வதைக் கவனித்தாள் அவள். உடனே எண்ணமிடுகிருள்:—"வெகு காலமாக போதுமான உணவின்றிப் பசியால் வாடியிருக்கிறேன். இன்றே அக்குறை தீர்ப்பேன். இம்மாபெரும் பூதம் என் வசமாகப்போகிறது, அப்பா! என்ன விருந்து!" என்று பெரும் பேராசையுடன் தன் சக்தியைக் கைக்கொண்டு ஆஞ்ஜநேயனின் நிழலைப் பற்றி இழுத்தாள்.

மேலே கிறுகிறுவென்று கருடவேகமாய் சென்று கொண்டிருந்த வாயு குமரன் சடக்கென்று ஓர் தடை நேருவதாக உணர்ந்தான். 'என்ன இது? ஏன் என் வேகம் குறைகிறது? எதிரே ஒன்றுங் காணேம். ஆனல், எதிர்க் காற்றிலகப்பட்ட மரக்கலம் எங்ஙனம் தடைபடுமோ அவ்வாறு நான் செல்லும் வேகத்தில் ஓர் தடை காண்கிறது. இது என்ன காரணம்?' என்று சிந்தனையுற்றவனுகி அங்குமிங்கும் கவனத்துடன் உற்று நோக்கினுன். பின்பு, கீழே நோக்கிக் கடலைக் கண்ணுற்ருன். தன் நிழலைப் பிடித்து எழும் ஓர் பெரும உருவத்தைக் கண்டான். உடனே வானரச் சேனை தென் திசை நோக்கிப் புறப்படும்போது சுக்ரீவன் எச்சரித்தது, வாதாத்மஜனின் நினை

விற்கு வந்தது. தென் கடலில், எல்லையின் அருகில் ஓர் பெரும் பூதம் உளது. மகா சக்தி வாய்ந்தது. மிகக் குரூர சுபாவமும் முக விகாரமும் கொண்டது; நிழலைப் பிடித்திழுத்து அதன் உடலை முழுங்கும் பேய்த்தன்மையுற்றது. ஆம்! மன்னவன் எச்சரித்த அந்த "சாயாக்ராகி" என்னும் அரக்கபூதம்தான் இது என்று அறிந்து கொண்டான். உடனே அப்பேரறிவாளி தன் உடலைப் பெருக்கிக் கொண்டான். அணிமா, மகிமா என்னும் கலைகளில் சித்திபெற்ற கலைஞனன்றோ ஆஞ்ஜநேயன்! இதைக் கண்டாள் பேயரக்கி; "இப்பெரும் உடலை அப்படியே விழுங்கி விடவேண்டும், அப்போதுதான் என் வெகுநாள் பட்டினி நோய் தீரும்" என்று எண்ணி தன் உடலை இன்னும் பெருக்கிக் கொணடாள். அசுரத்தன்மையின் இயல்பு அது. அவள் வாய் மாத்திரம் பாதாளமும் ஆகாயமும் அளாவி பிளந்து நின்ற பெருங்குகை போல் இருள் பரவிக் காட்சியளித்தது. அப்பூத வடிவமான வாயென்னும் கருமேகம் தன்னை மூடிவிட எதிரிடுவதுபோல் உணர்ந்தான் ஹனுமான்.

மாருதி கவனிக்கிறன். அவள் பருத்த உடலையும் உலகையே விழுங்கி விடும் வாய்க்குகையையும் கண்டான். அவள் உயிர் நிலைகளான இருதயத்தையும் தெள்ளெனக் கண்டு கொண்டான். உடனே சடக்கென்று தன் உருவத்தை அணுவாக மாற்றிக் கொண்டு அவ்வாய்க் குகையில் பாம்பு போல் பாய்ந்தான், ஆகா! என்ன தீரச்செயல்! என்ன ஆச்சரியம்! என்று வானவர்களும் தேவர்களும் வாய் புதைத்து நின்றனர். ஆஞ்ஜநேயன் அக்கோர குகைக்குள் புகுந்தது அவர்கள் மனத்தில் இந்திரனின் வஜ்ராயுதத்தின் பாய்ச்சலை ஒத்திருந்தது. வானில் கதிரவன் கிரணங்களில் பறக்கும் மற்றொரு சூரியன் போல் பிரகாசித்துச் சென்றுகொண்டிருந்த வாயுகுமாரன் அரக்கிவாயில் நுழைந்து மறைந்தபோது பூரணசந்திரன் ராகுவின் பிடியால் பற்றப் பட்டு அக்காலம் இருளடைவது போல் கண்டார்கள் அவர்கள்.

ஒரு நிமிஷம். மறு நிமிஷம் கட கட வென்று பெரும் மரம் முறிந்து சாயும் சப்தம் கேட்டது! பேயரக்கியின் உயிர் நிலையைக் கிழித்தெறிந்து சீறிக் கொண்டு வெளிக் கிளப்புகிறன் வீரியனான வானரோத்தமன். ஏதோ ஓர் பேராபத்தில் சிக்கி அதினின்று விடுபட்டதான பயம்நீங்கிய நிலையை ஒத்திருக்கவில்லை அவன் வெளி வந்தது. அனுயாசமாய் வெளிக் கிளம்பும் போது அறிவு, தைரியம், வலிமை, இவைகள் பொலிந்த வீரன் வெற்றி விலாசத்திலும் தன் சுய எளிமை, சுய நம்பிக்கையோடு சாதாரணமாகவே தோன்றுவது போலவே அங்கிருந்த வானோர்கள் கண்டார்கள். மாருதி முன்போல் வாயுவேகங்கொண்டு மேலெழுகிறன். மார்பு கிழிக்கப்பட்ட அரக்கியோ உவர் கடலில் மாண்டு வீழ்ந்தாள்! அப்பா! இன்று துலைந்தாள் இம்மாயப் பேய். இவள் அழிவிற்காகவோ இம்மாருதி உவரில் தோன்றிய காரணம் என்று எண்ணினர்கள் வானோர்கள். ஸிம்ஹிகை மாண்டு மூழ்கினதைக்கண்டு பேரானந்தமடைந்தார்கள் அவர்கள்.

"வானரச்ரேஷ்ட! மகத்தான செயல் புரிந்தீர்! இக்கொடிய பூதத்தை அழித்து ஒழித்தீர். நீர் எடுத்த கருமத்தைச் செய்து முடிப்பீர். ஐயமில்லை. நிகரற்ற ஆற்றலும் அறிவும் பராக்கிரமும் விடாமுயற்சியும் கொண்டவர் நீர். இவைகளால் எதையும் சாதிக்க வல்லீர். இத்தகையோருக்கு இடை

யூறு என்பதேது! ஆகவே, வெற்றி உமக்கே'' என்று அவர்கள் ஹனுமானைப் புகழ்ந்து கௌரவித்துக் கொண்டாடினர்.

வாயுகுமாரனே தன் கருமமே கண்ணாகி மறுபடியும் வான் கிளம்பி பறந்து சென்றான். முன்னிருந்ததைவிட அதிக வேகங்கொண்டு இவன் கருடனேவென்று எண்ணும்படி பாய்ந்து விரைந்தான். சிறிது நேரத்திற்குள் கடலின் நடுவில் நான்குபுறமும் வனவரிசைகளுடன் விளங்கிய ஒரு நிலப்பரப்பு அவன் கண்ணிற்பட்டது, மேற்செல்லவே, அது பலவித மரங்கள் கொண்ட மலையையும் குன்றுகளையும் உடைத்தான லங்கைத்தீவு எனத் தெளிந்து தோன்றியது. கடற்கரையின் வனப்பும், தீவின் இயற்கை அமைப்பும் ஆங்காங்கு நதிகள் கடலைக் கூடும் ரம்மியமான தீவுகளும் ஹனுமானின் முழு கவனத்தையும் இழுத்தன. பீம உருவத்துடன் வாயு வேகமாய் வந்துகொண்டிருந்த அவன் சிந்திக்கலானான். 'இவ்விலங்கையின் ராட்சதர்கள் என்னுடைய பெரும் உருவத்தையும் வேகத்தையும் கண்ணுற்றுக் கலவரஞ்செய்யத் துவக்குவது நிச்சயம். இது விரும்பத்தக்கதல்ல என்று தன்லட்சியத்தை மனத்தில் கொண்டு. உண்மை உணர்வு கண்ட ஒரு மெய் ஞானிபோல், பெரிய உருவத்தைச் சுருக்கித் தன் சுய உருவங்கொண்டான். முன்பு வாமனும் உலகனைத்தும் மூவடியாய் அளந்த திருவிக்ரமனும் தங்கள் உருவத்தை மாற்றிக்கொண்டது போலிருந்தது, இப்பொழுது மாருதி தன் பேருருவத்தைச் சுருக்கியபோது !

எந்த உருவத்தையும் எடுக்கவல்லவனான அஞ்ஜனைப் புதல்வன் கடற்கரையை அடைந்தான். சூழ்நிலையைக் கவனிக்கிறான். அதற்குத் தக்கவாறு உருவமடைந்து இனிச் செய்யவேண்டிய கருமத்தில் சிந்தை செலுத்தினான். உடனே வேகத்தையடக்கி எளிதாக, லம்பமலை என்ற மலையின் சிகரத்தின் மேல் செடி கொடிகளின் நடுவே வந்திறங்கி நின்றான். எனினும் அவன் வந்திறங்கிய வேகம் அச்சிகரத்தை கிடுகிடுக்கவைத்தது. மரங்கள் கனிகளையும் பூமலர்களையும் சொரிந்தன. அங்கிருந்த பிராணிகள் அச்சமுற்று கதிகலங்கின. குதித்து நின்றவுடன் முகமுயர்த்தி அவ்வீரிய மூர்த்தி உற்று நோக்கினான். அமராவதிபோல் லங்கைநகர் காட்சியளித்து விளங்கிற்று!

## 2. மாருதியின் லங்கைப் பிரவேசம்

ஹனுமான் வந்திறங்கிய மலைச் சிகரம் மிகவும் உன்னதமானது. அது திரிகூடமலை எனப்படும். அங்குநின்று தலைநிமிர்ந்து உற்றுநோக்கினான். லங்கைநகர் அமராவதிபோல திகழ்ந்து துலங்குவதைக் கண்டான். என்ன ஆச்சர்யமான நகரம்! சற்றுநேரஞ் சென்றது. தன் கவனம் வந்தது. ''இவ்வளவு தூரம் தாண்டிவந்த எனக்கு இளைப்பில்லை, களைப்பில்லை. ஆம், கொஞ்சமும் ஆயாசமில்லை. கடல்தாண்டியது பெருங் காரியமா? மனவலிவிருந்தால் எதையும் செய்துமுடிக்கலாம். இத்திடநம்பிக்கையே பெருஞ்சாதனையாயமைந்ததன்றோ! ஊம்!—நூறு யோஜனை என்ன? எத்தனை நூறுயோஜனைகள் வேண்டுமானாலும் எளிதில் தாண்டலாம். இக்கடல் கடப்பது எம்மாத்திரம்? இது எனக்கு ஒரு மான் குளம்படிதானே! எம்முயற்சியும், புனிதமானதும் தெய்வ காரியமாயுமிருப்பின் வெற்றிபெறுவது நிச்சயமே'' என்ற வார்த்தைகள் வந்தன.

பின்பு நிதானித்து நாலா பக்கமும் கூர்ந்து கவனித்துக் கீழிறங்கினுன். எங்கும் மணஞ்செறிந்த மலர் மரங்கள். அஞ்ஜனைப் புதல்வன் அடியில் வர, நல்வரவாகுக என்பன போல் அவை அவன் மேல் மலர் மாரி பொழிந்தன. இது வெற்றியின் அறிகுறியென்று உள்ளம் மகிழ்ந்தான் மாருதி. எங்கு காணினும் இன்பமளிக்கும் வனப்பு வாய்ந்த பச்சிளஞ் சோலைகள், விதவிதத் தோற்றமான தெண்ணீர்த் தடாகங்கள், கூவியழைத்து விருந்தளிக்கும் கனி வளங்கள், உண்டு களித்து உற்சாகங் கொள்ள மிருதுவான சாய்வு மேடைகள், பொன்னெளி வீசும் பசுமைப் புல் விரிப்புகள், மெருகிட்ட உலோகங்களின் பட்டைகள் பொதிந்த வானளாவிய மதிற்சுவர்கள்! என்ன இது! இந்திர கந்தர்வ உலகமா? அல்லது கொடிய அரக்கர்களின் இலங்கைத் தீவுதானு? மலை உயரத்திலிருந்து ஹநுமானின் பார்வை சோபையுற்று விளங்கும் வெண்ணிறமான மாளிகைகள் அமைந்த விண்ணரசர் போன்ற லங்கை நகரின் மேற் சென்றது.

மெதுவாக அவன் இன்னும் கீழிறங்கினுன். அப்பொழுது பிரும்மாண்டமான கோட்டைச் சுவர்களைக் கண்டான். அவற்றின் அமைப்புதான் என்னே! அவற்றின் திண்மையும் வனப்பும் விசுவகர்மாவின் திறனைப் பிரகடனஞ் செய்தன. ஆகா! இத்தகைய கோட்டையையும் அதனுள்ளமையப் பெற்ற நகரத்தையும் அதனையணிசெய்யும் அரண்மனையையும் இவற்றை முற்றும் அரண் செய்யும் கடலையும், மாய சக்தி வாய்ந்த காப்பாளர்களையும் கேவலம் மரம் தாவும் குரங்குகள் வெற்றியுடன் கைப்பற்றவா! அவர்கள் இங்கு வந்து புகுவது சாத்தியமாமோ? எனினும் இங்கல்லவோ நம் கருமம் கடைத்தேற வேண்டும். அதுவும் ஸ்ரீ ராம காரியப் பிரபாவம் போலும்'' என்று எண்ணங்கள் அவனுள் எழுந்தன. ஒரு முகூர்த்த காலம் அங்கே சிந்தனையிலாழ்ந்தான் மாருதி.

பின்பு ஓர் முடிவு புலனுயிற்று. ''கொடிய அரக்கர் கோட்டை வாயிலில் காவலிருக்கிறுர்கள். அவர்கள் கல்நெஞ்சர்கள். காலனை ஒத்தவர்கள். இவர்களோடு போர் புரிய இது சமயமல்ல. இவர்களை வஞ்சித்து பிராட்டியைத் தேட வேண்டும். இது சூரியன் மறையும் வேளை: இவர்களுக்குப் புலனுகாது சிறிய உருவத்தில் உட்புகுந்து அன்னையைத் தனியே காண வேண்டும். எடுத்த கருமம் இனிது முடிந்ததாக வேண்டும். கடல் கடந்து வந்தது பயனுற்றதாக ஆகவேண்டும்'' என்று ஆலோசனை செய்து தனக்கியல்பான உருவமடைந்து அதைச் சுருக்கி இரவில் இலங்கையில் புகக்காத்திருந்தான் அஞ்ஜனைச்செல்வன்.

கதிரவனும் மறைந்தான். மாருதி தன் உருவத்தைப் பூனையளவு சிறிதாக்கிக் கொண்டு அடிவாரத்தை விட்டு நகரில் நுழைந்தான் என்ன அற்புதக் காட்சி அது! வண்ணமணிகளிழைத்து நிழலெழும் நெடுமாடங்கள். விசித்திர வீதிவரிசைகள்! இந்நேர்த்தியைக் கண்டு மிக்க வியப்புற்ருன் மாருதி!

---

## 3. ஹனுமான் லங்கா தேவியை ஜெயித்தது

நகரமுற்றும் எங்கும் அணிவகுத்த அரக்கப் படைகள், நிலவெரிக்க, மந்த மாருதம் வீச, வாத்திய இன்னிசை முழங்க, பல பல களியாட்டங்கள் நடைபெற, இவைகளைப் பார்த்துக்கொண்டே வானர வீரன் மதில் சுவரில் தாவிக் குதித்தான். அங்குக்கண்ட காட்சி ஹனுமான் கண்ணைக் கவர்ந்தது. தங்கமிழைத்த தோரண வாயில்கள், மணிவேதிகைகள், வான் வழியைத் தொட்டெழும் கோபுரங்கள், செம்பொன்னை உருக்கி வார்த்த படிவரிசைகள், நீர்நிலயங்களை எழில் பெறச் செய்யும் அரச வன்னங்கள், இடையிடையே வாத்திய கீத விநோதங்கள், ஆகிய இவை லங்காபுரியின் வனப்பைச் சிறப்புறச் செய்தன. மதிநலம் படைத்த மாருதி எண்ணமிடுகிறான்:— குமுதன், அங்கதன், சுசேஷணன், மைந்தன், துவிதன், சுக்கிரீவன் முதலிய வானரத் தலைவர்களும் நானும் இந்நகரத்தில் பிரவேசிக்கத்தக்கவர்களேயன்றி மற்ற வானரர்க்கு இயலாது. சிறிது நேரம் ராமத்தியானம் செய்தான். பின்பு எண்ணமிடுகிறான்:— "ஸ்ரீ ராகவன் தசரதனின் திருக்குமாரர்; அப்ரமேயர்; ஸீதாபதி; ரகுகுல ரத்தின தீபம்; வீரபாகு; கருணைபொழியுங் கமலக் கண்ணன்; அறப் போரிட்டு அரக்கரை அழிக்கும் ஆற்றலுடையோன்; அண்ணலின் அடியையே அணிகலமாகக் கொண்ட இளையவன் இலக்குவன். தனது உடல், பொருள், ஆவிகளை அண்ணனுக்குக்கென்றே அர்ப்பணஞ் செய்த பாக்யவான். இவர்கள் இருவரையும் நினைத்தான் உண்மைப் பக்தன் ஆஞ்ஜநேயன். உடனே புது உணர்ச்சி கொண்டான். ஆம்; அவன் காரியமல்லவா இது ? என்று நினைத்து அகமகிழ்ந்தான், தன் கடமையை உணர்ந்தான். உடனே கீழே தாவிக் கோட்டை மதிலைக் கடக்க எண்ணினான்.

அப்போது ஹனுமான் திடீரென்று எதிரே ஒரு பேயுருவம் நிற்கக் கண்டான். பார்ப்பதற்கரிய விகார அரக்க ரூபம். 'என்ன இது'? என்று பிரமித்துக் கொண்டிருக்கையில், இடி முழக்கம் போன்றதொரு கர்ஜனையைக் கேட்டான். "குரங்கே! யார் நீ? இங்கு ஏன் வந்தாய்? நீ உயிருடன் இருக்க விரும்பினால் உண்மையைச் சொல். ஏ! வானரா! இந்த லங்காபுரி பெரும் புகழ்படைத்த ராவண சைனியத்தால் காத்துவரப் படுவதை அறியாயா? என்றது அவ்வுருவம்.

இப்பயங்கர ரூபம் பெண்ணுருவங் கொண்டு வானளாவி நிற்பதைக் கண்ட வாயுகுமாரன் சற்று மனந்தளர்ந்து "உண்மையைச் சொல்லுகிறேன்; நீ யார்? ஏன் இத்தகைய கோரப்பார்வையால் என்னை பயமுறுத்துகிறாய்? ஏன் கோட்டை வாயிலில் நிற்கிறாய்?" என்று கேட்டான்.

கடுஞ்சினங் கொண்டாள் அக்கோர அரக்கி. "அடே! நான்தான் இந்த நகரைக் காக்கும் தேவதை; ஒருவராலும் வெல்ல முடியாதவள். என்னைக் கடந்து நீ நகரில் உட்புகுவது இயலாது. இதோ என்னால் உயிர் மாய்க்கப் பட்டுப் பெருந்துயில் கொள்ளப்போகிறாய்!" என்று அலக்ஷிய அகம்பாவத்தில் அதட்டினாள்.

ஹனுமான் அசையாது நின்றான். எதிரில் நிற்பவளைப் பெண்ணென்று கொண்டு கோபங் கொள்ளாது, "லங்கா தேவி! மிக்க எழில்

வாய்ந்த இந் நகரைப் பார்த்து வர விரும்புகிறேன்'' என்று நயம்பட உரைத்தான்.

''துர்புத்திபுள்ள குரங்குப் பதரே! நகரத்தைக் காண்பாயா? கணப் பொழுதில் உன் முடிவைக் காணப் போகிருய் நீ. என்ன நினேக்கிருய்? என்னே வெல்லாமல் எப்படி நீ இந்நகரைக் காண்பாய்? என்று ஆத்திரத் துடன் சீறி அணுகினுள் அரக்கி.

அதற்கு ஹனுமான் சாவதானமாக ''நீ நல்லவள் போல் காணப் படுகிருய். நல்லது; இந்நகரைப் பார்த்து விட்டு, வந்தது தெரியாமல் திரும்பிச் செல்கிறேன்'' என்ருன்.

இதற்குப் பதிலாக அரக்கி பேரொலி கிளப்பிக் கோபம் பொங்க ஹனுமானே ஓங்கி ஓர் அறை அறைத்தாள். பெண் பேய் வலிவாக அறை யவே, ஹனுமான் ஆச்சரியமடைந்தான். முழுவலிமையுடன் வலக்கரத்தால் ஒரு பெண்ணேடு போர் புரிவது பெருந்தன்மைக்கு இழுக்கென்று நினேத்து, தன் இடது கை முஷ்டியால் அவளே மெல்ல ஓர் இடி இடித்தான். அவ்வளவு தான். அந்த அரக்கி, அவன் இடது கைக்குத்து தாங்காது அங்கங் குலேந் தாள். அலறிப் புடைத்து தரையில் சாய்ந்தாள். சற்று நிதானித்தெழுந் தாள்! செருக்கு நீங்கித் தன் நிலே அடைந்து நா தழதழக்க ஹனுமானேத் துதித்துப் பணிந்து வேண்டலாளுள். ''ஐயனே! அருள் புரிக. அற முணர்ந்தவரே! என்னே மன்னிக்க வேண்டுகிறேன். உண்மை பராக்கிரம சாலிகள் சாத்துவிகத்தை ஏற்று அற நெறியில் நிற்பார்களன்ருே? வீரம் படைத்த வானரோத்தம! லங்கிணி யென்னும் இந்நகர தேவதை நான். இப்போது நான் உம்மால் வெல்லப் பட்டேன். முன்பு எனக்குப் பிரம தேவர் அளித்த வரம் இன்று பூர்த்தியாயிற்று. 'என்று உன்னே ஒரு வான ரன் ஒரு மெல்லிய குத்திஞல் வீழ்த்துவனே, அன்று முதல் அரக்கர் குல நாசம் துவக்கம்' என்று அவர் எச்சரித்திருக்கிருர். சத்தியசந்தரே! அக் காலம் இன்று முதல் உம்முடைய தரிசனத்தால் ஆரம்பித்து விட்டது. இது நிச்சயம். ஸீதையின் காரணமாக இந்தத் துராத்துமாவான ராவணன் அழி யப் போகிருன். அவனுடன் அரக்கர் குலமே அழிவது திண்ணம். ஆகை யால், வானரவீர! உமது இச்சைப்படி லங்கையிற் புகுந்து உம் இஷ்ட மான காரியத்தை இடையூறின்றி செய்து முடித்துக் கொள்ளும். சாபத்தால் அழியப் போகிற இந்நகரத்தினுட்சென்று உண்மை ஸதியான ஸீதாபிராட் டியைத் தேடும்'' என்று பணிந்து படிந்தாள்.

---

## 4. ஹனுமான் லங்கையில் ஸீதையைத் தேடுதல்

[பதினேழாவது தினத்தில் குசவலர் பாடிக் கொண்டு போகிருர்கள்!.]

லங்கையைக் காத்து வந்த லங்கிணி தேவி என்பாள் ஹனுமானேச் சரணடைந்து தன் வழியே சென்று விட்டாள். பின்னர்த் தடையின்றிக் கோபுர வாயில் வழியாகவே ஆஞ்ஜநேயன் லங்கை புகுந்திருக்கலாம். ஆனல் அவ்வழியே செல்லாமல் கோட்டை மதிலேத் தாண்டி உள்ளே குதித்தான். அவ்வாறு குதிக்கும் போது விரோதியான ராவணன் தலே மேல் இடது காலே வைப்பது போல் அந்நகருள் புகும்போது முதலடியாகத்

தன் இடது காலை முதலில் வைத்தான். (நம்மைப் போல் நம் காரியம் சித்தி பெறட்டுமென்று அச்சமும், சந்தேகமும், ஆசை கலந்த நம்பிக்கையுமிருந்தால் தானே வலது காலை முன் வைத்துச் சகுனம் காணவேண்டும். 'ராம காரியம். அதைக் கைக்கொண்டவன் எவன் தான் வெற்றி காணான்! என்று தன் விருத்தாந்தத்தையே விளக்குவது போல்) இதுவரை தன் காரியத்தைத் தடையின்றி முடித்துவந்த ஹனுமான் எதிரியின் அழிவைச் சூசிப்பிக்க இடது காலை முதலில் வைத்து முன்னேறினன். நகரம் நிலவொளியில் வெகு ஆச்சரியமான காட்சியளித்தது! பூப்பந்தலிட்ட ராஜமார்க்கம்; சிங்கார விடுதிகளில் செவிக்குச் சுவையுணவூட்டும் இன்னிசை கீதம்; மிக்க வனப்பு வாய்ந்த மாளிகைகளிலிருந்து களியாட்டங்களின் கோஷம்: கண்ணைப்பறிக்கும் விதம் விதமான வர்ணமுள்ள தீபத்தோரணங்கள் சிற்பத் திறன் விளங்கும் சித்திர வேலைப்பாடுகள், அனங்கன் உருவத்தைப் பழிக்கும் அனேக சித்திரப் பதுமைகள்; பொற்சட்டங்கள் பதித்த பல பட வரிசைகள்; இவை யாவற்றையும் கண்ட ஆஞ்ஜநேயனுக்கு உடனே ஸ்ரீ ரகுநாதன் நினைப்பு எழுந்தது. [சிலாக்கியமான கண் காட்சியின் உள்ளக் களிப்பை ராகவனிடம் சமர்ப்பித்தான் போலும்! எப்பொழுது புதுப்புது சூழ்நிலையோ, சந்தர்ப்பமோ, சம்பவமோ, அப்போதெல்லாம் ஸ்ரீ ராமச்சந்திரனை மனத்தில் தியானிப்பது மாருதியின் மரபாய் விட்டது. ஆகவே அவர் காரியத்திற்காக வந்திருப்பதென்ற உணர்ச்சியின்பமே எழிலாய்க்கொண்டு கூவியழைக்கும் விசித்திரமான லங்காபுரி ஈட்டிய உள்ளக் களிப்பில் கலந்து தன்னிலையில் நின்ருன் கவி வீரன்.] எடுத்த காரியத்தில் கருத்துக்கொண்ட ஆஞ்ஜநேயன் பட்டணத்தின் சிங்காரத் தோற்றத்தைக் கவனிப்பதை விட்டு ஒவ்வொரு மாளிகையின் அந்தப்புரத்திலும் சென்று ரகசியமாய் வைதேகியைத் தேடலுற்ருன். சில மாளிகைகளில் மாதர் வித விதமான உடல் அமைப்பு வாய்ந்தவர்கள்; விசித்திரமான ஆடை ஆபரணங்களை தரித்து யெளவனச் செருக்காலும் மதுபான மயக்கத்தாலும் களியாட்டங் கொண்டு இன்னிசை வாத்தியங்களில் ரமித்து இன்பமாய்க் கவலையற்றுக் காலங்கழித்துக் கொண்டிருந்த காரிகைகள் பலர். இன்னும் சில மாளிகைகளில் அரக்கர்களின் மந்திர கோஷங்கள். மற்ரேரிடத்தில் வேதாத்தியயனம். சில துதி பாடகர்கள் ராவணனது வீர சரிதத்தை அண்டம் பிளக்கும்படி பாடிக் கொண்டிருந்தனர். அவ்விடத்தைவிட்டு ஹனுமான் ராஜ வீதியை அடைந்ததும், அது ராட்சத சைனியத்தாலும் ஒற்றர்களாலும் காவல் படைகளாலும் நன்கு கண் காணிப்புப் பெற்றிருந்ததையும் கவனித்தான்.

எதிரே காணும் ஒரு மாளிகையைச் சேர எண்ணமிட்டான், மாருதி. மாளிகைகளின் பின் புறத்தில் நகர அரக்கர்களின் வீடுகளும் பாமர அரக்

---

கல்யாண காலத்திலும், ப்ரயாணம் புறப்படும் போதும், நூதன கிருஹப் பிரவேச காலத்திலும், முதலில் வலது காலை எடுத்து வைக்கவேண்டுமென்றும், சத்துருவின் நகரிற் செல்லும் போது அவன் நாசத்தை உத்தேசித்து முதலில் இடது காலை வைத்து அடிவைக்க வேண்டுமென்றும் பெரியோர் கூறுவர். இதனை அறிந்து ஹனுமான் ஸ்ரீ ராமபிரானுக்கும் ஸுக்ரீவ மகாராஜர்க்கும் க்ஷேமமும், வெற்றியும் உண்டாகவும், ராவணன் முதலியோர் அழியவும் நினைத்து முதலில் இடது காலை வைத்து உட்புகுந்தான் என விளங்குகிறது

கர்களின் வாசஸ்தானங்களும் இவன் கண்ணேக்கிற்கு இலக்காயின. அவர்களுள் சிலர் கோணலான வாயும் வயிறுமுடையவர்கள்; சிலருக்கு ஒரு கண்; சிலருக்கு ஒரு காது; சிலருக்குப் பருத்த தொந்தி; சிலர் அதிக குள்ளர்; சிலர் அதிக நெடியர்; கண், காது முதலிய புலன்கள் இருக்க வேண்டிய இடத்தில் இல்லாமல் வேறிடத்தில் அமைக்கப்பட்ட விகாரத் தோற்றமுடையவர்கள் சிலர். பயங்கரத் தோற்றமுள்ளவர்களாய்க் கள்ளுண்டு களிப்பவர்கள் சிலர். விதம் விதமான கொடிய ஆயுதங்கள் தரித்த நகரப் பாதுகாப்பாளர் பல்லோர்!

அரண்மனைக்குள் வெகு தூரத்தில் அமையப் பெற்ற அந்தப்புரத்துக்கெதிரே அணி வகுத்து நின்ற அரக்கப் படை, அதி ஜக்கிரதையாக அரண்மனையைக் காவல் செய்து வந்தது அரண்மனையோ மலையுச்சியில் அமைக்கப் பெற்றுப் பகைவர் யாவராலும் எளிதில் புக இயலாத தனிச் சிறப்பு வாய்ந்து, ஆழமுள்ள பல அகழிகளால் சூழப்பட்டு விளங்கிற்று. வானளாவி எழுந்த மதில் சுவர்களும் அரண்மனையின் அழகிய அமைப்பும் அவற்றை நிர்மாணித்த திறமையையும் சாமர்த்தியத்தையும் விவரித்துக் காட்டின. குதிரை லாயங்கள், யானை மண்டபங்கள், ஆயுத சாலைகள், விளையாட்டிடங்கள், சோலைகள், நந்தவனங்கள், விமான நிலையங்கள் இவை எல்லாவற்றையும் கண்கொட்டாது காவற்படைகள் காத்து வந்தன. இவைகளுக்குச் சிறிது தூரத்தில் அரக்க அரசனின் அந்தப்புரம், தனிப் பெரும் வனப்பு வாய்ந்து திகழ்ந்து விளங்கிற்று. உருக்கி வார்த்த பொன் பூட்டுடைய மதில்கள். செவ்வனே சித்தரித்த சிங்கார சிவிகைகளடர்ந்த மணம் கமழும் அந்தப்புரம்! அதில் நுழைந்தான் ஹனுமான்.

---

## 5. அந்தப்புரக் காட்சி

ஆஞ்ஜநேயன் ராவணனது அந்தப்புரத்தில் நுழைந்ததும், பூர்ண சந்திரன் உயரமான சிகரங்களையுடைய வெள்ளிய மாமலை போல் முழு மலர்ச்சி கொண்டு வானில் விளங்கினன். பால் போன்ற வெண்ணிலா அந்தப்புரத்தை அழகு படுத்தியது. அந்நிலவொளி மக்களின் மனவாட்டத்தை மறக்கச் செய்து கடலைப் பொங்க வைத்து, எங்கும் எல்லோர்க்கும் குதூகலத்தைக் கொடுத்து, களங்கமற்ற வெண் சோதியை அள்ளித் தூவி இயற்கைத் தோற்றத்திற்கு எழில் தீட்டி இன்பமுறச் செய்து வந்தது. இவ்வெண்ணிலா மாருதியின் கவனத்தை இழுக்கவே, அவன் அதில் ஈடுபட்டுச் சற்று நேரம் தங்கி விட்டான். கீழே நகரத்தின் காட்சி ஓர் அற்புத உயிரோவியத்தைச் சித்தரித்துக் கொண்டு சென்றது. சிலர் விருந்துண்ண விரைகிறர்கள். கலையரங்கங்களில் பாடகர்கள், நடிகைகள் குழுமுகிறர்கள். முழுமதிச் சோதியில் உள்ளங்களித்துத் தாம்பத்ய இன்பத்தைச் சுவைக்கிறர்கள் சில சதிபதிகள். உல்லாசமான தோட்ட மேடைகளில் அநேக தம்பதிகள் தனியிடங்களில் குதூகலமூட்டும் இயற்கை அமைப்பால் மன மகிழ்ச்சியளிக்கும் பிரத்தியேக ரதி கேளிக்கைகளில் ஈடுபட்டு நிர்மலமான அந்த நிலவைப் பூர்ண ரசங்களுடன் அனுபவித்து வந்தார்கள். இத்தகைய இன்பங்களைக் கண்ட மாருதியின் மனம் அப்பொழுது சுருக்கென்று தருகிற்று. "ஜானகி தேவியார் இருக்குமிடமல்லவா இவ்விடம்? புனிதமான

இவ்வின்பக் காட்சியின் பெருமைக்கு அதுவல்லவோ காரணம்? திருமகள் திகழும் திவ்யப்பிரதேசமாகவல்லவோ விளங்கி மிளிரும் மைதிலியிருக்குமிடம்;'' இவ்வாறெல்லாம் மாருதியின் மனம் எண்ணமிட்டுக் கொண்டேயிருந்தது. நகரின் உட்புறங்கள் வெளியிடங்கள், மாட மாளிகைகள், தோட்டங்கள், எங்கும் தேடியலைந்தாய் விட்டது. ஆனால் நன்னெறியில் நிலைபெற்ற ராஜ புத்திரியும் உயர் குலக்கலை, சீலம், ஒழுக்கம் முதலியவற்றை அணிகலமாய்க் கொண்ட தனிப்பெரும் தன்மை வாய்ந்தவளுமான ஸ்ரீ ராகவ பத்தினியை மாத்திரம் காணவில்லை. கணவரை விட்டுப் பிரிந்தவளாயினும், அவரைத் தன் மனக் கண்ணில் பிரியாது கண்டு, பிரிவாற்றுமையின் துக்க வாரியிலும் ஒருள்ளக் களிப்பை விளக்கும் ஜோதியுடைய தடங்கண்ணுளான தேவியைக் காணவில்லை? இவ்வெழில் பொழியும் வெண்ணிலவில் வாடி வதங்கித் தனியே தவிக்கும் ஸீதா பிராட்டியைக் காணவில்லை. ஐயோ! அவள் எங்குள்ளனளோ? உலகம் யாவும் வெண்ணிலவில் களிக்க, அவ்வம்மை மாத்திரம் எவ்வித அல்லலுறுகின்றனளோ!'' என்று மாருதி மனம் கலங்கிக் கண்ணீர் உகுத்தான். கால் தழ தழக்க செய்வதறியாது அப்படியே நின்று விட்டான் ஆஞ்ஜநேயன்!

---

## 6. அரண்மனையில் ஆராய்ச்சி

சற்று நேரம் சென்றது. ஆழ்ந்து சிந்திக்கலானுன். தன்னெதிரில் எழில் கொழிக்கும் லங்கையின் தோற்றத்தைக் கண்டான். ''ஆகா! இந்நகரம் எவ்வளவு சோபையுற்று விளங்குகிறது! என்ன கலை சொரிந்த மங்களகரமான அமைப்பு! இவ்வளவு வனப்பு வாய்ந்த இந்நகரம் சமீபத்தில் ஸ்ரீராமனுடைய பாணத்தீக்கு இலக்காகி நீராகப் போகிறதே!' என்று உன்னி உணர்ந்தான். அப்போதே அன்னை ஜானகியை மனத்தில் தியானித்தான். புத்துணர்ச்சி கொண்டான். ''லக்ஷ்மீ தேவியே இந்நகரத்துக்கு வந்திருப்பினும், இந்நகர் அவள் அருள்நோக்குக்கு இலக்காகாமல் பாழாகப்போகவிருக்கிறதே! இது பாவத்தின் பயனல்லவா? இந்நகருக்கு இனி லக்ஷ்மீகடாக்ஷமில்லை. அவள் கடாக்ஷத்தை நான் பெறவிருக்கிறேன். திருமகளின் அருள் எனக்குத்தான். அதனுல் இதோ என் காரியம் ஸபலமாகப் போகிறது'' என்று உணர்ந்தான். இத்தகைய உணர்ச்சி கொண்ட மாருதி புது உற்சாகங் கொண்டு தேவியைத் தேடுவதில் திரும்பவும் முனைந்தான். அரண்மனையின் பற்பல விடங்களில் பிராட்டியைத் தேடித் துருவுகிறுன். வெள்ளிப் பதுமைகள், வைடூரிய மணிகளால் இழைக்கப்பட்ட ஹம்ஸபக்ஷிகள், சித்தரிக்கும் பொன் தோரணங்கள், கல்லிழைத்த படிவரிசைகள், நேர்த்தியான வாசற்படிகள்; அற்புதமாய்ச் செதுக்கித் தீட்டிய ரதங்கள், ஆபரணங்களால் அலங்கரிக்கப் பெற்ற வாகனங்கள், கண்ணைப் பறிக்கும் வேலைப்பாடுள்ள ஆசனங்கள், பல விதமான பாத்திரங்கள் ஆகிய இவை அவ்வரண்மனை எழிலைப் பதின் மடங்கு அழகு படுத்திக் கொண்டிருந்தன. ராக்ஷஸ ராஜனுன ராவணனது அரண்மனை பூதகணங்களோடு விளங்கும் பரமேசுவரனது கைலாசம் போல் வெண்மையுற்று உயர்ந்து தேஜோமயமாய்க் குபேரபவனம் போல் விளங்கிற்று.

மரமடர்ந்த மனோகரமான பூஞ்சோலைகளிலும் மேல் மாடிகளிலும் உப்பரிகைகளிலும் ஆராய்ந்து தேடிக் கொண்டே சென்றான் வாயு குமாரன். அங்கும் அன்னையைக் காணவில்லை. அரண்மனையையொட்டிய பல மாளிகைகளை கண்ணுற்ற ஹனுமான் அங்கிருந்து தாண்டி, ராவணனுடைய மந்திரிகள், தம்பிமார்கள், புத்திரர்கள்; இவர்களது மாளிகைகள் ஒவ்வொன்றிலும் தேடத் தீர்மானித்தான். முதலில் பிரஹஸ்தனின் மாளிகை சென்றான். பின்பு மகாபார்ச்வனது இருப்பிடத்தையடைந்து முழுவதும் தேடினான். அதிலிருந்து மற்ற மாளிகைகளையும் ஆராய்ந்து துருவிப்பார்த்தான். கும்பகர்ணன், விபீஷணன், மகோதரன், விருபாக்ஷன், வித்யுத்ஜிவ்ஹன், வித்யுன்மாலி, விஜ்ரதம்ஷ்ட்ரன், சுகன், சாரணன், இந்திரஜித், ஜம்புமாலி, சுமாலி, தூம்ராக்ஷன் முதலிய அரக்கத் தலைவர்களின் மாளிகைகள் தோறும் தேடினான். மிக்க செல்வர்களுடைய மாளிகைகளிலெல்லாம் உட்புகுந்து தேடிவிட்டு ராட்சத மன்னனின் மாளிகை வந்து சேர்ந்தான் மாருதி. விகார வடிவங்கொண்ட ஆயுதம் தாங்கிய காவற்படைகள் நாற்புறமும் நின்று அரண்மனையைக் காத்து நின்றன. யுத்தத்துக்குரிய யானைப் படைகளும் குதிரைப்படைகளும் காத்து நின்ற முன் கட்டைக் கடந்து, விருந்து விடுதிகள், சிவிகை மண்டபங்கள், சித்ர சாலைகள், சங்கீத மேடைகள், சபாமண்டபங்கள், லதா கிருகங்கள், கொலு மண்டபகங்கள், போஜன சாலைகள், பான மேடைகள், பள்ளியறைகள் எல்லாவற்றிலும் நுழைந்து தேடினான். உல்லாசக் கிரீடைகளில் கலந்து களிக்கும் ஜனக் கூட்டங்கள் எங்கும் திரள் திரளாக குழுமியிருந்தன. எங்கும் இன்பமூட்டும் இன்னிசை முழங்கிய வண்ணம் இருந்தது.

———

## 7. புஷ்பகவிமானம்

புஷ்பகவிமானம் லங்கையில் ஒரு தனிப்பெரும் காட்சியாய் விளங்கிற்று. அது சுத்த தங்கத்தால் செய்யப்பட்டு, ஜொலிக்கும் ரத்தின மணிகளாலிழைக்கப்பட்டதும் நறுமணம் கமழும் மலர்கள் நிறைந்ததும், மேகத்தில் தோன்றும் மின்னல் கொடிகள் போன்ற உத்தம மாதர்களைக் கொண்டதும், புண்ணியஞ்செய்தோர்களை விண்ணுலகிற்கழைத்துச் செல்லும் விமானம் போன்றும் செழிப்புற்றுச் செல்வத்தை நிரப்பும் லக்ஷ்மீ கரமான ஹம்ஸங்களால் தாங்கப் பெற்றும், கண்ணைக் கவரும் சித்திரப் பதுமைகள் பொருந்தியதும், விசித்திரமான சித்திராசனங்களைக் கொண்டு தேஜோமயமாய் விளங்கிற்று. அதை ஹனுமான் கண்ணுற்று "இது மேருமலையின் பொற்சிகரமோ, மின்னல்கள் நிறைந்த மேகக் கூட்டமோ, ஹம்ஸங்களால் தாங்கப்பட்டுப் புண்ணிய புருஷர்களை ஸ்வர்க்கத்துக்கு ஏற்றிச் செல்லும் இந்திர விமானமோ?" என்று பிரமித்து விட்டான். அது எங்கும் தடையின்றி செல்ல வல்லது. எல்லோர்க்கும் இடமளிக்கவல்லது. பூமியைத் தொடாமல் அந்தரத்தில் நிற்பது. பரம்ம தேவனால் குபேரனுக்களிக்கப்பட்டு ராவணனுடைய புஜபலத்தால் அவனிடமிருந்து பலாத்காரமாய் அபகரிக்கப்பட்டது. இத்தகைய விமானத்தைப் பார்த்த ஹனுமானுக்கு அரக்கன் பால் கோபம் மூண்டது. அன்னை ஜானகியை அங்கும் காணவில்லை. அவன் கோபமும் வருத்தமும் அதிகரித்தன.

———

## 8 விமானத்தில் ஹனுமான் ஸீதாதேவியைத் தேடுதல்.

ராவணன் மாளிகையின் நடுவில் விடப்பட்டிருந்த, நவரத்தினங்கள் இழைத்து உருக்கின தங்கத்தால் செய்யப்பட்டதுமான சாளரங்கள் கொண்ட அற்புதமான அந்தப் புஷ்பக விமானத்தில் மற்ெருரு தரம் ஸீதையைத் தேடிப்பார்க்க எண்ணினன் ஹனுமான். அவ்விமானம் இத்தன்மையதென்று வருணிக்கதற்கரியது. பிறரால் அழிக்க ஒண்ணுதது. விசுவகர்மாவினது சக்தியின் எல்லே தோன்ற விளங்குவது. வான் வழியே நினைத்தவிடம் செல்லவல்லது. ஆகாயத்தினின்றும் அவனிக்கு வந்துள்ள ஆதித்தனேவென்னும் ஐயப்பாட்டை உண்டாக்குவது. வாக்குக்கும் மனதுக்கும் எட்டாத சௌந்தரியத்தோடு விளங்குவது. தவப்பயனுற் பெறப்பட்டது. பலபராக்கிரமங்களால் குபேரனிடமிருந்து கொண்டுவரப்பட்டு அரக்கமன்னனிடத்தில் இருந்துகொண்டு குறித்த இலக்கில் பல்வகைக் கதிகளுடன் பிரயாணஞ்செய்ய அவ்விமானம் தயாராயிருந்தது.

[அதில் ஏறி, ''நீ ஸீதையிருக்குமிடம் செல்'' என்ருல் போகாதோ ? அவளேக் கண்டு, அடி பணிந்து வேண்டி அவ்விமானத்திலேயே அவளே அமர்த்தி அதிலேயே அண்ணலிடம் திரும்பிச் சேரலாமல்லவா ? இவ்வித யோசனே மாருதிக்கு எழுந்ததோ என்னவோ ? அப்படி எழுந்தால் இவ்விதமாக அன்னேயை மீட்டுப்போவது ராவணனிடமிருந்து அபகரித்ததாகுமே, என்ற அபவாதம் ஏற்படுமே என்று யோசனே எழுந்ததோ என்னவோ ? அப்படியே அங்கு நின்ற வண்ணம் அந்த அதி அற்புதமான புஷ்பக விமானத்தைக் கவனித்தான் அஞ்ஜனேச் செல்வன்].

ஆம் ! இவ்விமானம் ஆகாய வீதியிற் செல்லும் போது யாவராலும் தடுக்கப்பட முடியாதது. வாயுவின் வேகங்கொண்டது விசித்திரமான கொடி முடிகளுடன் சரத்காலச் சந்திரன் போல நிர்மலமான காட்சி தந்து பார்ப்போரை உன்னத நிலேயில் அழைத்துக்கொண்டிருந்தது. அதில் அமர்ந்தவர்கள் பேரானந்தத்தில் மூழ்குவர் என்பதில் ஐயமில்லே. தோற்றமே உற்சாக உச்சியை எட்ட, அதிலுள்ள ஆகார வகைகளும் சயனுசனங்களும் விரிப்புகளும் தெய்வபோக அனுபவங்களே நினைப்பூட்டிக் கொண்டிருந்தன, [புஷபக விமானத்தில் யாத்திரை செய்வது பேரானந்தம் தான். இவ்வித ஆராய்ச்சி எண்ணங்கள் மாருதி மனத்தில் எழாமலில்லே என்று யார் சொல்ல முடியும் ?] விமானத்தில் புகுந்து உள்ளும் புறமும் மைதிலியைத் தேடினன் ஆஞ்ஜநேயன். அன்னேயைக் காணவில்லே. வேறு பக்கம் திரும்ப, இவ்விமானத்திற்கே மெருகூட்டுவதுபோல் விளங்காநின்ற ராவணன் மாளிகை கண்ணேப் பறித்து அழைத்தது.

---

## 9. அரக்கன் மாளிகை

தட்சணமே அரக்கரரசன் அரண்மனே அடைந்தான் ஆஞ்சநேயன் அரையோஜனேயகன்று ஒரு யோஜனே நீண்டு, சிறந்த அமைப்பில் உயர்ந்தெழும் உப்பரிகைகள் நிரம்பியிருந்தன அக் கவர்ச்சி மாளிகை, ''இது புண்ணிய புருஷர் வாழும் சுவர்க்கம்தானே ? உம்மர் தொழும் பெருமானுகிய தேவேந்திர ராஜதானியான அமராவதியோ? இல்லேயேல் சதுர்முகன்

உலகமோ? நவநிதித் தலைவனான குபேர பவனமோ? வருணாலயமோ? கந்தர்வ நகரமோ'' வென்று பிரமிக்க வைக்கும் வனப்பும் வளமும் பெற்றுத் துலங்கிற்று. அதில் விளங்கிய தேவ கன்னிகைகளின் உருவங்கள் எழிலை உருக்கி வார்க்கப்பெற்ற உத்தம உருவங்களாகவிருந்தன.

பெண்மை என்ற இலட்சணத்தை வித விதமாகப் பிரதிபலிக்க வைக்கும் பலவகை பதுமினி ஜாதிப் பெண்மணிகள், இவர்கள் அப்பவனத்தில் அயர்ந்த நித்திரை செய்துகொண்டிருந்தனர். அரவிந்த மொட்டுப் போல் அழகாக மூடப்பட்ட நேத்ரங்களையுடையவர்கள் தாமரை மலரின் மணம் வீசும் திவ்விய முகமுடையவர்கள. உறங்குகையில் பல்லைக் காட்டல், அரைக் கண் திறந்தல், கூந்தல் அவிழ்ந்து விரிதல், ஆடை நெகிழ்தல் முதலிய துர்க்குணங்களின்றித் துயிலழகு கொண்டவர்கள் அவர்களுக்கேற்ப விவரிப்பதற்கரிய நூதனமான சயன மண்டபம், மணிகளிழைத்த விரிப்பு வரிசைகள், வைரம் பதித்த பொன்னாலாக்கிய பஞ்சணைகள். அவர்கள் துயிலுறும் சோபையையும் அவயவங்களின் நிலைகளையும் கண்டால், ஒரு நாரீமணியாவது ராவணனிடத்திலிருப்பது வருத்தமென்று உணர்ந்தவளாகக் காணோம். அவ்வளவு சுகமாகவும் எதேச்சையாகவும் கபடமற்றுப் பூரண மனத்திருப்தியுள்ளவர்களாய் அயர்ந்து நித்திரை செய்து கொண்டிருந்தனர். அவர்கள் நடுவே துயிலுறும் அரக்கர் கோமான், நட்சத்திரங்கள் சூழ்ந்த சந்திரன் போன்று விளங்கினான். ரதி கேளிகைகளில் களித்துக் களைப்படைந்த அந்த அரண்மனை ஸ்திரீகளின் மாலைகளும் ஆபரணங்களும் சிதறுண்டு கிடந்தன. உத்தம மடந்தைகளான சிலர் திலகமழிந்தபடி தூங்கினர். சிலர் சிலம்பு கழன்றவர்கள். இயற்கையாகவே நறுமணம் கமழும் அவர்கள் வதனங்களிலிருந்து வெளிவந்த சுவாசக் காற்று இனிப்பான மது கந்தத்துடன் கலந்து சுகமாக ராவணன் மேல் வீசிற்று. அவர்கள் உல்லாசமாகக் கவலையற்று இஷ்டப்படி தூங்குவதைக் கவனித்தவரும் 'இவர்களில் ஒருத்தியாவது பலாத்காரத்துடன் ராவணனிடத்தில் தங்குவதாகக் காணோம்' என்றெண்ணுவார்கள். எல்லோரும் ராஜபத்தினிகளின் சாயல் கொண்டு பிரகாசித்தனர். யாவரும் உயர் குலத்தவர்கள்; சர்வலட்சணமுடையவர்கள்; கலையறிந்தவர்கள்; மரியாதை, நன்னடத்தை பூரணமாய் அமையப் பெற்றவர்கள்; இவற்றை அவர்கள் அங்க அமைப்பும் மேனி வனப்பும் எடுத்துக் காட்டின.

இவர்களைக் கண்ணுற்ற ஆஞ்ஜநேயன் மனத்தில் சுருக்கென்று ஓர் உணர்ச்சி எழுந்தது. ''வைதேகியும் இவ்வாறு தன் கணவரையடைந்து சுகித்திருக்க வேண்டியவள் தானே, இதை முடித்து வைப்பதே நான் ஜன்மமெடுத்ததற்கு சாபல்யமாகும்'' என்று தீர்மானித்தான். ''ஸீதா பிராட்டியோ நற்குணங்களின் பிறந்தகம். இம்மாதர் எல்லோர்க்கும் மேம்பட்டவள்; திருமகளெனத் திகழும் திவ்விய மங்கள விக்ரகம்; இத்தகைய மானிட இனத்தின் முதற் சீமாட்டியைக் கௌரவிக்காமலும், அவள் திருக்கமல பாதங்களைப் போற்றிப் பணியாமலும் போனதோடு அவளிடத்தில் அபராதமல்லவோ செய்தான் இம் மகா பாவி ராவணன்'' என்று ஆஞ்ஜநேயனின் மனம் அடங்கா சீற்றங் கொண்டு சீறி எழுந்தது.

---

## 10. மண்டோதரியைக் காணல்.

மனம் எண்ணமிட்டுக் கொண்டே போக, மாருதி ஸீதையைத் தேடிக் கொணடே பல சயனக் கிருஹங்களைக் கடந்து சென்றான். அப்பொழுது இதுவரை பார்த்திராத அழகு மிக்க அபூர்வமான அமைப்புப் பெற்ற ஒரு சயனக் கிரகம் ஹனுமானுக்குத் தென்பட்டது. அதில் ஒரு அழகிய ஸ்படிகக் கட்டில்; அதன் மேல் மெத்தென்ற பஞ்ச சயனம்; அருகே சிறந்த ஆசனங்கள்; விலை மதிப்புக்கெட்டாத ரத்தினங்களிழைத்த கண்ணைப் பறிக்கும் விரிப்புகள்; வித வித ஹாரங்களால் அலங்கரிக்கப் பட்ட சந்திர ஒளியை யொத்த வெண்பட்டுக் குடை; அக்கட்டிலை யொட்டி வெண்சாமரம் வீசும் அழகு பொருந்திய மாதர்கள்; நறுமணங் கமழும் தூபம்; மலர்க்குவியல்களின் நறுமணம்; இவையனைத்தும் இன்ப மயம்.

அரக்க மன்னன் துயிலுறுகின்றான். கரிய மேகம் போன்றவன்; சிறந்த குண்டலங்கள்; பிரகாசிக்கும் பொன் ஆடை அணிந்து, நறுமணம் கமழும் நற்சாந்து பூசி, மந்தரமலை கிடப்பது போல் அயர்ந்து நித்திரை செய்கிறான். "ஆஹா! என்னே இவனது பேருருவம்! என்ன லட்சணங்கள் செறிந்த தோற்றம்! எதையும் எளிதில் வெல்லும் சூரத்தனம் பொலிந்த பெருந்தோள். சர்ப்பம் சீறுவது போன்ற சுவாச ஒலி," முன் சென்று பிரமித்து பிறகு பின் சென்று ராவணனைக் கவனிக்கிறான் ராம தூதன். மதயானை உறங்குவது போன்ற காட்சி! வீரமும் தீரமும் பொலியும் பத்துச் சிரங்கள்; பத்துச் சிரங்களிலும் மத்துக் கிரீடங்கள். [ஒரு மகா வீரன் மற்றொரு மகா வீரனைக் கவனிக்கிறான்.] அருகில் அநேக பஞ்சணைகள். அவற்றில் அநேக மடந்தையர் வித விதமாய் துயில்கின்றனர். இன்னிசை வாத்தியங்களைப் பற்றிய வண்ணம் மெய்ம்மறந்திருந்தனர் சிலர். சிலர் வீணையைக் கட்டிக் கொண்டும், சிலர் மத்தளத்தை அணைத்துக் கொண்டும், சிலர் யுவதியான பெண்களையே தழுவிக் கொண்டும் உறங்குகின்றனர். எல்லோரிடத்திலும் முழுமதியின் தோற்றம் முகத்தில் பிரதிபலித்து இன்ப மூட்டித் துலங்கிற்று!

இவர்களை வரிசையாக பார்த்துக் கொண்டே வந்த மாருதி, ஒரு தனியிடத்தில் அமையப் பெற்ற சிறந்த வேலைப்பாடுள்ள பஞ்சணையில் துயிலுறும் வேறொரு பெண்மணியைக் கண்டு பிரமித்து நின்று விட்டான். அங்கிருந்த நாரீமணிகளுக்கெல்லாம் இரத்தினம் போல் விளங்கினாள் அவள். அவளணிந்த ஆபரணங்கள் அவள் அழகைப் பன்மடங்கு அதிகமாக்கின. அவளது சுந்தர வடிவம் அவளது பள்ளியறையை அலங்கரித்துக் கொண்டு காந்தி பெறச் செய்தது. நன்றாய் அலங்கரிக்கப்பட்ட அம்மெல்லியளின் வடிவையும் யௌவனத்தையும் பார்த்து, 'இவள் தான் ஸீதை' யென்று நிச்சயித்து தாம் பிராட்டியைக்கண்டு விட்டதாக எண்ணிக்களிப்பின் பெருக்கில் ஆழ்ந்தான் அஞ்ஜனைச் சிறுவன்.

ஆழ்ந்த நித்திரையிலிருந்த அம்மாதுசிரோமணியின் கட்டழகு ஹனுமானை மதிமயக்க வைத்தது. தான் வந்த காரியம் ஸபலமானதென்று களித்துக் குதித்தான்!

———

## 11. மாருதி மைதிலியை மீண்டும் தேடுதல்.

இவ்வாறு மனங்களிப்புக் காணும் போது ஆஞ்ஜநேயன் மனம் 'கலுக்' கென்று கலவரமடைந்தது. "என்ன! இவள் ஸ்ரீ ராகவன் தேவியாரா? இவளா இங்கு அயர்ந்து நித்திரை செய்பவள்? பதியை விட்டுப் பிரிந்த சதிக்கு இத்தகைய மெய்மறந்த உறக்கம் ஏது? உணவு கொள்ளத் தான் பிடிக்குமா? அலங்காரம் செய்து கொள்ளுவளா? பூமாலை சூடி அணிகள் பூண்பளா? அன்னியனால் அபகரிக்கப்பட்டு வந்திருக்கிறாள். அறுசுவையுண்டிகள் அருந்தி உடலைப் பேணிப் பொன்னுடை தரிப்பளா? உற்றவனை விடுத்து மற்றவனிடம் வாழ்வு காண்பளா? ஸ்ரீ ராகவன் மனைவி திண்கற்பு வாய்ந்தவள். ஒரு தனிப்பட்ட மேன்மை பொருந்தியவள். புருஷோத்தமனான ஸ்ரீ ராமனுக்கு மாலையிட்ட பாக்கியவதி பரபுருஷனை மனத்திலும் நினைப்பளா? இந்த ராக்ஷஸக் காமுகனையா மோகித்து அணுகுவள்? ஒருக்காலுமிராது இவள் ஸீதையில்லை" என்று நிச்சயித்து அவ்விடம் விட்டகன்றான். இன்னும் தன் காரியம் முடிவடையவில்லை என்று ணர்ந்து மறுபடியும் தன் முயற்சியில் முனைந்தான். அங்கிருந்து நன்றாய் ஆராய்ந்து கொண்டே சென்றான்.

இன்னும் பலபல மாதர்கள் மதுவுண்டு மெய்மறந்து தென்பட்டனர். பான பூமி முழுவதையும் தேடிக் கொண்டே சென்றான் வாயு குமாரன். மான், எருமை, பன்றி முதலிய விதவிதமான இறைச்சித் துண்டங்கள், விதவிதமான பானங்கள், பழங்கள், பணியாரங்கள், ஸ்திரீகளால் கழற்றி எறியப்பட்ட கங்கணம், சிலம்பு முதலிய பூண்கள், பூமாலைகள், இவை பானசாலையை அலங்கரித்து நின்றன. வனப்பு வாய்ந்த மங்கையர் பலர் வெண்மையான படுக்கைகளில் ஒருவரையொருவர் தழுவி அணைத்துத் துயின்றனர். இக்கோலங்களையெல்லாம் பார்த்துக் கொண்டே ஹனுமான் அரக்க அரசனின் அந்தப்புரம் முழுவதும் தேடித் திரிந்தான். ஆனால், அன்னை ஜானகியைக் காணவில்லை.

ஜானகி காணாதது ஒரு புறம் அவன் மனத்தை வாட்ட, அநே— அழகு வாய்ந்த ஆரணங்குகள் ஆழ்ந்த நித்திரையில் வித விதமாய் காட்— யளித்ததைக் கண்ணுறுதல் ஐம்புலனடக்கிய ஒரு பிரம்மசாரிக்கு அளவிடற்கரிய தீங்கல்லவா என்றும், அன்னிய ஸ்திரீ அயர்ந்து கண் வளரும் போது அவளைப் பார்ப்பது மாபாதகமாயிற்றே யென்றும் உணர்ந்த அவன் மனம் மேலும் வருத்தமுற்றது. அவன் சிந்திக்கிறான்:— "இவர்களைக் காண்கையால் எனக்கு மனத்தில் மாறுபாடு உண்டாகவில்லை; என் புலன்கள் தூண்டப்படவில்லை. என் பார்வை தருமவிருத்தமானதல்ல. அயலான் மனைவியை வேறு எண்ணத்துடன் நான் பார்க்கவில்லை. அன்னை ஜானகியைத் தேடிப் பார்க்க வந்திருக்கிறேன். எஜமானனிட மிருந்து எஜமானிக்குச் செய்திகொண்டு வந்த தூதன் நான். முழு பக்தியுடன் எனது தாயைத் தேடுகிறேன். அவளைப் பெண்களிருக்குமிடத்தில் தானே தேடவேண்டும்? அவளைப் பெண்கள் கூட்டத்தில் தானே காண முடியும்? அபகரித்துக் கொணரப்பட்ட ஒரு ஸ்திரீயை பெண்களிடையே தானே அவன் விட்டிருக்கவேண்டும். மானைக் காண வேண்டுமானால் மான்கள் திடலிலன்றோ அதைத் தேடவேண்டும்? எனவே தூய்மையுடன் தேடுவதிலேயே என்மனம்பற்றியிருக்கிறது. ஆகையால் நான் தோஷமற்ற

வனே. நான் ராவணுந்தப்புரம் முற்றிலும் தேடியும் அன்னையைக் காண வில்லை என்ற வருத்தமே மேலிடுகிறது'' என்று மனம் குன்றிய மாருதி ஊக்கங் குன்றுமல் மறுபடியும் முயற்சியில் முனைந்தான்.

———

## 12. மாருதியின் உத்வேகம்

ஹனுமானின் ஆத்திரம் அதிகமாயிற்று, ''அன்னை ஜானகியைக் கண்ணுற்றுப் பணியப் பேராவல் பூண்டு இங்கு வந்தேன். வித விதமான நூற்றுக் கணக்கான மாதர்களைக் கண்டேன். அரக்க அரசன் மனைவி மந்டோதரியையும் பார்த்தாய் விட்டது. இவர்களை விட்டு வைதேகி ஒரு தனியிடத்தில் இருக்க வேண்டும். அவள் எவ்விடத்திலிருக்கின்றனளோ ? முழு கவனத்துடன் கூர்ந்து இவ்வரண்மனை சயனக் கிருகங்கள் பான மண்டபங்கள், பூங்கொடி விடுதிகள், சித்திர சாலைகள், உத்தியான வனங்கள் எல்லாம் ஒன்று விடாமல் தேடி அலைந்தேன். அலைந்தும் தேவியைக் கண்டேனில்லை. இரவு பாதிக்கு மேல் கழிந்துவிட்டதே ! என் செய்வேன் !'' என்று துடிக்கிருன்.

மனக் கவலை கொண்டு மீண்டும் சிந்திக்கிருன் ஆஞ்ஜநேயன். 'எங்கும் தேடியாய் விட்டது. என்னுல் தேடப்படாதவிடம் நாலங்குலம் கூட இவ்விலங்கையில் இல்லை. ரகுநாதனின் மகிஷியைக் காணவில்லை. கற்புக் களஞ்சியமான அவள் கணவனை விட்டுப் பிரிந்த துக்கம் தாங்காது மரித்து விட்டனளோ ? அல்லது இத்துராத்மா ஸீதை தனக்கு இணங்காததால் கோபமுண்டு அவளைக் கொன்றுவிட்டானே ? ஒருவேளை அப்பூங்கொடி யாள், உருக் குலைந்து உருவம் சிதைந்து, பேய்வடிவங்கொண்டு பயமுறுத்தும் ராட்சதப் பெண்களைக் காணச் சகியாது, அச்சத்தால் நடுநடுங்கி மனமுடைந்து மரித்து விட்டனளோ ? ஒன்றும் தெரியவில்லையே ! ஸீதையைக் காணுது திரும்புவேனு ? கடமையைச் செய்யாது கவியரசனிடம் செல்வேனு ? அரசன் வாக்கைப் பொய்யாக்கும் பிரஜைக்கு கொடுந்தண்டனை யன்றே விதி; ஜனகநந்தினி காணப் பெறவில்லை யென்று கைவிரித்தேனுகில், என்னை நம்பியிருக்கும் அங்கதன் முதலிய வானரர்கள் 'லங்கை சென்று நீ செய்ததென்ன ?' என்ருல் என்ன விடையளிப்பேன் ? லங்கையையே பேர்த்து வருவதாக அவர்களிடம் வீரவாதம் பண்ணி உறுதி அளித்து வந்த என்னை அவர்கள் அவமதியார்களோ ? இனியும் கால தாமதம் செய்வேனுகில் நான் ராவணனுல் கொல்லப்பட்டதாக நினைத்து வானரப் பெரியார்கள் மரணமடைவார்களே ! ஜாம்பவான் போன்ற பெரியவர், 'உன்னுல் ஆகாதது உலகிலில்லை' என்று என்னை உயர்த்திக் கூறி நம்பிக்கை எழுப்பினுரே. என் முயற்சிகள் யாவும் காட்டிற் காய்ந்த நிலவாய் விட்டனவே'' என்றெல்லாம் மனங் கரைந்து கூறிக் கொண்டே பின்னும் யோசிக்கிருன். ''நான் ஏன் அந்நம்பிக்கையை இழக்க வேண்டும் ? ஏன் மனம் தளர வேண்டும் ? இனி விபரீத எண்ணங்களைக் கொள்ளலாகாது. வீரமும் தீரமும் வெற்றியின் ஆணிவேரன்ருே ? மனந்தளர்ந்தால் வீரமேது ? தீரமேது ! மேன்மேலும் முயற்சி செய்வதல்லவா வெற்றி வாழ்க்கையின் அடிப்படை. ஆகவே என் முயற்சியைக் கைவிடேன். ஊக்கம் குன்றேன்; தேடப்படாத இடம் எங்ஙோ அங்கு சென்று மீண்டும் தேடு

வேன்'' என்று மனந்தேறி, புத்தாற்றலும் ஆர்வமுங்கொண்டு பர பரப்புடன் எழுந்தான் விராஞ்ஜநேயன். பான சாலைகள், கலைக்கூடங்கள், ஆயுத சாலைகள், புஷ்ப விலாசங்கள், விமானங்கள், மேடைமாடங்கள், நில வரைகள், மந்தைவெளிகள் முதலிய விடங்களில் துருவித் துருவி ஒவ்வோரிடமாக வலைபோட்டுத் தேடினான் வாயுகுமாரன். பின்பு மதில்களின் இடை வீதிகள் சிலை பொலிந்த கவி நிலயங்கள், தோப்புகள், துரவுகள், குளங்கள், நீர் வீழ்ச்சிகள், கடற்கரை இவை ஒவ்வொன்றும் வெகு ஜாக்கிரதையாக கவனிக்கப்பட்டன. எனினும் ஸீதையைக் காணவில்லை. கந்தருவர், வித்யாதரர் முதலிய தேவமாதர்கள் விளங்கும் மணிமண்டபத்தைத் துளாவினான். அங்கும் மாதர்மணியான மைதிலியைக் காணவில்லை. பூர்ண சந்திர முக மண்டலங்கள் கொண்ட நாககன்னிகளிடையே தேடினான் உலக வாழ்விற்கே உவகையூட்டும் உத்தமியான ஜானகியைக் காணவில்லை. பெரும்பாலும் எல்லா மாளிகைகளும் தேடப்பட்டு விட்டன. தேவியைக் காணாது சோர்வினால் உள்ளம் துடித்தான் ஸ்ரீ ராம தூதன்.

---

## 13. உணர்ச்சியின் வீழ்ச்சியும் எழுச்சியும்

மதிள் சுவரிடம் வந்து நின்றான் மாருதி. [முதலில் நம்பிக்கை, பின்பு உற்சாகம், செயலாற்றல் உடனே வெற்றி காணாதிருத்தல், மனஞ் சோர்தல் மறுபடியும் மனந்தேறி மறுபடியும் முனைதல், மறுபடி மனந்தளர்தல், திரும்பித் தேறி, விடாமுயற்சி செய்து வெற்றி யெய்தல் — இந்த வாழ்க்கைத் தத்துவத்தை நம் மனதில் நிலை நிறுத்திக் காட்டுகிறான். ஹநுமான் முதல் முதல் விச்வாமித்திரர் விடா முயற்சி செய்து எய்திய வெற்றி வாழ்க்கை சிறந்த படிப்பினையாயமைகிறது. பின்பு அதே விடா முயற்சியில் வெற்றி பெற்ற ராம கதை இன்னும் தலை சிறந்த வாழ்க்கைப் படிப்பினையாயமைகிறது. இத் தன்மையாலேயே ஸ்ரீமத் வால்மீகி ராமாயணம் தனிச் சிறப்பு வாய்ந்து திகழ்கிறதென்று சொல்லவும் வேண்டுமா?]

ஹனுமான் சிந்தனையிலாழ்ந்தான். ''ஸ்ரீராம காரியத்தைச் சிரமேற் கொண்டு கடல் கடந்து இலங்கையையடைந்து சிறிதிடமும் விடாது தேடிப் பார்த்தேன். சர்வாங்க சுந்தரியான ஸீதா தேவியை இதுகாறும் கண்டேனில்லை. லங்கையில் ஸீதை இருப்பதாகவும், அவளைக் கண்முன் தான் பார்த்ததாகவும், சம்பாதி நம்பிக்கையாய் உரைத்தான். ஆனால் நான் எங்கும் தேடியாய் விட்டது, அவள் அகப்படவில்லை. எங்கு இருப்பனளோ அறிகிலேனே. உயிருடன் இருப்பாளா? தீய எண்ணங் கொண்ட அரக்க அரசனைத் தன் பக்கம் அணுகவும் அநுமதிக்கப் பொருள். ஒரு வேளை ராவணன் ஸ்ரீராம பாணத்துக் கஞ்சி ஆகாயத்தில் விரைந்து செல்லும் போது மூச்சுத் திணறி உயிர் நீத்தனளோ? சித்தர்கள் நடமாடும் மார்க்கத்தில் செல்லுங்கால் தான் ராட்சதனால் அபகரிக்கப் பட்டு விட்டதை உன்னும் போது அவள் இருதயம் இயக்கமின்றித் தம்பித்து நின்று விட்டதோ? அன்னியன் தீண்டியதால் மாசடைந்தோம் என்று அருவருப்புக் கொண்டு தன் வாழ்வை முடித்தனளோ? மேலே உயர உயரச் செல்லுங்கால் அவ்வரக்கனை உதறித் தள்ளிக் கடலில் விழுந்து மாய்ந்தனளோ? நீசனான ராவணன் செய்த அகிருத்தியத்தை நினைந்து ஸீதை அவனை நிந்திக்க, அவன்

கோபங் கொண்டு அவளைக் கொன்று தின்றனனோ? அரக்கிகள்தான் கொன்று கூறு போட்டுக் கொண்டார்களோ? ஸ்ரீராகவனுடைய தாமரைக் கண்ணையும் மதி வதனத்தையும் காணாது அவைகளைத் தியானித்துக் கொண்டே வேறு மீட்சி காணாது மனமுடைந்து மரணமடைந்தனளோ? ஹா! ராமா! ஹா! லட்சுமணா! வென்றுக் கதறிக் கதறி மனம் விண்டு உடல் சிதறி உயிர் நீத்தனளோ? சம்பாதி அவளைத் தன் கண்முன் காண் பதை எடுத்துரைத்தனனே! அது பொய்யாகாதே! ஒரு வேளை இன்னும் உயிருடன் துடித்துக் கொண்டுதானிருக்கிறாளோ! ஒன்றும் தெரிய வில்லையே! இன்னும் தேட வேண்டிய இடமும் உண்டா? என்ன செய்வது காரியம் கைகூடாது திரும்புவதா? என்னை நம்பிக் காத்திருக்குமவர்களுக்கு நான் என்ன சொல்வேன்? நான் இங்கு வந்து சாதித்ததென்ன? கடல் கடந்ததால் என்ன பயன்? 'ஸீதையைக் காண்கிலேன்'! என்றுரைத்த போது ஸ்ரீராகவன் மனமுடைந்து உயிர் துறப்பாரே! அவர் முடிவைக் கண்ணுற்ற லட்சுமணன் அண்ணலையே பின்பற்றுவானன்றோ? இதை யறிந்த பரத சத்ருக்னர்கள் வாளா விருப்பார்களா? பிள்ளைகள் போய் விட்ட பிறகு தாய்மார் மூவரும் உயிரை விடுவார்களே! இவ்விளைவைச் சகிப்பரோ சுக்கிரீவர்? அவரும் உயிர் நீத்தால் ருமையும் தாரையும் உயிர் தரிப்பார்களோ? தாய் தந்தை போனபின் குழந்தை அங்கதன் புவி வாழ்க் கையை விரும்புவனோ? தலைவன் தற்கொலையைக் கண்ட வானரமக்கள், தாம் இனி ஜீவித்திருப்பது எதற்கென்று முடிவு தேடுவார்களே! இத்தகைய இக்ஷ்வாகு குல நாசத்திற்கும் வானர குல நாசத்திற்கும் நானா அடி கோலுவது? நான் திரும்பிப் போய் இவ்விளைவுகளைக் காண்பதா? ஒரு நாளும் முடியாது. ஐம்பொறியடக்கி, மரத்தடியிலமர்ந்து மரணத்தை நாடுவேன். ஜானகியைக் காணாது உயிர் தரிப்பது உசிதமாகுமோ? எல்லாவற்றிற்கும் இக்கொடும்பாவியான ராவணனன்றோ காரணம். இவனைக் கட்டிப் பிடிகதிழுத்து கவியரசன் முன் நிறுத்துவேன்! இது இப் போதே செய்ய வேண்டுமா? சம்பாதியின் வசனம் பொய்யாகாதே. ஆகையால் தேட வேண்டிய இடம் இன்னும் இருக்கிறதென்பது புலனா கிறது. அது எந்த இடம்? இதோ இவ்விடத்திலுள்ள இப்பெரிய மரத்தி லேறிப் பார்க்கிறேன்" என்று புது உணர்ச்சி கொண்டு உயரக் கிளம்பி நாற்றிசையிலும் உற்று நோக்கினான்.

சட்டென்று மயிர் சிலிர்த்தது! கண் அகன்று புது மலர்ச்சி உண் டாயிற்று மாருதிக்கு. "ஆஹா! அதோ பல மரங்கள் நிறைந்த ஒரு வனம் காணப்படுகிறது. ஆம்; அதில் தேடவில்லை நான். அதில் புகுந்து ஆராய்வேன். மனமுடைந்து முயற்சி பலனற்றதென்று உயிர் விட எண்ணினேன். கை சோர்ந்து என்னால் இனியாவதொன்றுமில்லை; கடவுள் விட்ட வழியென்று முயற்சி குன்றி நின்று விட்டேன். உடனே இறைவன் அருள் காண்கிறேன்! அவனருளால் இவ்வனம் காணப் படு கிறது. என் பாக்கியமே பாக்கியம்! வஸுக்கள், ருத்ரர்கள், ஆதித்தியர்கள், அசுவனி தேவதைகள், மருத்துக்கள் முதலிய உலக பாலர்களைத் தண் டனிடுகிறேன். ஸ்ரீராகவன், லட்சுமணன், வைதேகி தேவியார், ருத்திரன் இந்திரன், யமன், வாயு, சந்திரன், சூரியன், மருத்துக்கள் இவர்கள் எல் லோருக்கும் எனது நமஸ்காரங்கள். இதோ எல்லோரையும் அடி பணிந்து வேண்டுகிறேன். ரிஷி கணங்களும் தேவர் குழாங்களும் எனக்குக் காரிய சித்தியை அளிக்க வேண்டும். பிரம தேவரும், பாசமேந்திய வருணரும்

பூதங்களின் பிரபுவும் மற்றும் பல தேவர்களும், மகாத்மாக்களான ரிஷி கணங்களும் எனக்கு நன்மையளிக்கட்டும் என் காரியம் ஸபலமாகுமாறு அவர்கள் அருள் புரியட்டும்! திருமகளெனத் திகழும் ஸ்ரீராகவ பத்தினி எனக்குத் தரிசனம் அளிக்கட்டும்''! என்று அங்கு தியானத்தில் நின்றான்.

---

## 14. ஹனுமானுக்கு அன்னை திருவருள் பாலித்தல்

தேவியைத் தரிசிக்கத் துடித்த ஸ்ரீராம தூதனுக்குத் தன் மனத்தில் அத்தரிசனம் நேர்ந்து விட்டதாகவே ஆனந்தம் எழுந்தது. ஒரு முகூர்த்த காலம் மாருதி முழுமனதுடன் மைதிலியை தியானித்தான். அப்போழுது ஸ்ரீராகவனுடைய எண்ணம் உதிக்கவே, அவரையும் மனமார வழிபட்டு வணங்கினான். சிறிது நேரம் யோசிக்கிறான்: —

ராம காரியத்தைத் தலைமேற்கொண்டு கடலைத் தாண்ட உயரக்கிளம்பினேன். இடையே தோன்றிய இடையூறுகள் யாவற்றையும் அவனருளால் போக்கினேன். அத்தகைய ராமப்பிரபாவம் இப்போது எங்குப்போய்விடும்? எல்லாம் நானே செய்து முடிப்பதாக எண்ணங்கொண்டதாலல்லவா மனந் தளர்ந்து குன்றிப்போக வேண்டிவந்தது? எடுத்த காரியத்தைத்தான் செய்து முடிப்பதென்ற எண்ணமின்றி, 'இது அவன் சங்கற்பத்தாற் செய்து முடிக்க வேண்டிய விஷயம்; தான் அதற்கு ஒரு கருவி மாத்திரமே என்று உறுதியாயெண்ணினால், அக்காரியம் தானாகவே வெற்றியுடன் ஏன் முடிவுறாது ?" என்ற உணர்வு மேலிட்டதோ என்னவோ?] எல்லாத் தெய்வங்களையும் அடிபணிந்து அருள் புரிய வேண்டிக் கொண்டு அவ்வனத்தின் மதிட்சுவரின் மேல் மின்னல் கொடி போல் மேலெழும்பித் தாவினான் ஆஞ்ஜநேயன். அவ்வளவுதான். ஒரு புது உணர்ச்சி தன்னையுமறியாமல் தன்னுடலில் ஊடுருவிப் பாயக் கண்டான். உள்ளம் பூரித்தான். தன் முயற்சி பலிதமாகும் அறிகுறிகளையும் கண்டான். புதிதாய் ஊற்றெடுத்த உற்சாகத்தில் வாயுபுத்திரன வசந்த ருதுவின் உல்லாசத்தை உணர்ந்தவனானான். தலை நிறைந்து பூத்திருந்த அசோகம் ஆச்சா, சண்பகம், நாகம், கர்ணிகாரம் முதலிய மரங்கள் மாருதி மேல் மலர்களை மாரி போல் பொழிந்தன. ஸ்ரீராகவன் தேவியாருக்கு நற்காலம் வந்து விட்டதெனக் கண்டு களித்தான் கவித் தலைவன். ''இதோ நான் அன்னையைக் காண்பது நிச்சயம்'' என்று வீறு கொண்டு, பற்பல மரஞ் செடி கொடிகள் செறிந்த தோட்டத்தில் நாணிழுத்து விடப்பட்ட நாராசம் போல் பாய்ந்தான்.

பலவித பறவைகள் அவ்வனத்தில் இன்னிசையை எழுப்பின. மான் கூட்டங்களும்; எழில் பொழியும் மயில் குழாங்களும் எங்கும் ஓடி ஒலித்தன. வேகமாய்த் தாவிப் பற்றிய மரம் அசைக்கப்பட்டுக் கீழ் நின்ற மாருதி மேல் மலர்களையுதிர்த்து மறைத்தது. மலரால் மூடுண்ட மாருதி மரங்களிடையே பாய்ந்து புகுந்து ஓடினான். கண் கவர் காட்சியைக் கண்டான். நவமணிகள் இழைத்துப் பதித்த மேடைகள், விசித்திர வர்ணந் தீட்டிய படிகப் பாவைகள், மணிப்படிக்கட்டுகளுடன் விளங்கும் வாவிகள், இவை அவ்வனத்திற்கு அணிகலமாய் விளங்கின. தாமரை மலர்கள் தாங்கிய தெண்ணீரோடைகள் வளைந்து வளைந்து ஓடிக் கொண்டிருந்தன. அன்னங்கள் பல அதில் அமர்ந்திருந்தன. இச்சோலை வனப்பின் அதிசயம் தனிச்

சிறப்பு கொண்டு திகழ்ந்தது. அருகே ஒரு மலைக்குன்று. அதனின்றும் அரும்பெடுத்த அழகிய பூங்கொடிப் புதர். அப்புதருனூடே வரும் சிங்கார மான தெள்ளிய நீர் வீழ்ச்சி, மேகத்தில் தோன்றி மறையும் மின்னலைப் போல் காட்சியளித்தது. அச்செய் குன்றின் கீழே ரம்மியமான தாழ்வரை. அதன் அருகில் செம்பொன்னால் செதுக்கிய ஒரு சிங்கார மண்டபம், வைரம் வைடூரியம் முதலிய கற்களால் பொலிந்து தோன்றிற்று அம்மண்டபத்தை யடுத்து ஒரு சிம்சுபா விருட்சம் பொற் காந்தி கொண்டு திகழ்ந்தது அங்கே மந்தமாருதம், ஒரு தனித் தன்மையுடன் வீசிக் கொண்டிருந்தது. அந்தப் பிரதேசத்தைப்பார்த்ததும் ஹனுமான் வியந்து “ஆம்; இந்த இடம் மிகவும் புனிதமாகப் புலப்படுகிறது. அளவிடற்கரிய மனோகரமாய்க் காணப் பெறு கிறது. இங்கு சந்தனம், சம்பகம், வகுளம் முதலிய சிறந்த மரங்கள் தனிச் சோபையுடன் விளங்குகின்றன. இது ஓர் ஒப்பற்ற மகிமை வாய்ந்த இடம். இதுதான் அன்னை ஜானகி இருக்குமிடமாக இருத்தல் வேண்டும். எதிரே காணும் தாமரைத் தடாகம் தேவதைகளுக்கென்றே அமையப் பெற்றது போல் விளங்குகிறது. அந்த ராஜமகிஷி வனத்தின் வனப்பைக் கண்டு களிப்பவள். ஸ்ரீ ராகவனைத் தன் உயிர் நிலையாய்க் கொண்ட அவ்வுத்தமி இம் மனோகரமான இடத்துக்கு வருவள். புனிதமான இத்தெள்ளிய நீரோ டையும், நில வொளியும், மான் பார்வையுடைய மெல்லியாளான ஸ்ரீ ராம மகிஷியை இங்கழைக்கும். மங்கள மூர்த்தியான மைதிலிக்கு இவ்வனம் ஏற்றதுதான். அவள் பாத கமலங்கள் படுவதற்கு இவ் வுத்தியானம் தகுதியானதுதான். சந்திர பிம்பம் போல் முகமுடைய அந்த தேவி உயி ருடன் இருக்கிருளென்ருல், ஸந்த்யா காலத்தில் தேவபூஜை செய்ய புனித ஜலங்கொண்ட இவ்வழகிய நீர் நிலைக்கு எழுந்தருள்வள்” என்று இவ் வெண்ணங்களுடன் அந்த சிம்சுபா விருட்சத்தின் மேல் அடர்ந்து தழைந்த ஒரு கிளையினுள் நுழைந்து மறைந்து நாற்புறமும் பார்த்துக் கொண்டிருந் தான் ஆஞ்ஜநேயன்.

---

## 15. ஸீதா தரிசனம்

சிம்சுபா விருட்சத்தில் தாவும்போதே ஹனுமான் அன்னையைக் காண்பது நிச்சயமென்று சில குறிகளால் உணர்ந்து கொண்டான். ‘இந்த அசோக வனத்தை நான் கண்ணுற்றது ஸ்ரீ ராமானுக்கிரகத்தின் பிரபாவ மல்லவா?’ என்று எண்ணிய போது அவனது ஆற்றல் இன்னும் திடப் பட்டது. ‘எப்போது தேவியைத் தரிசிக்கப் போகிருேம்?’ என்று துடித்துக் கொண்டிருந்தான். சற்று நேரம் சென்றிருக்கலாம். எங்கும் நிசப்தம். வெண்மதியின் வெள்ளிப் பூச்சில் மெய்மறந்த வெண்பறவைகள் ஒன் றிரண்டு வானில் பறக்க எண்ணி பட படவென்று தம் சிறகுகளை அடித்துக் கொண்டு வெளிக் கிளம்பி, எங்கும் போக மனமின் மறுபடியும் மரக் கிளைகளை யடைந்து அமைதியாய் அமர்ந்தன. ஆஞ்ஜநேயன் தலையை நிமிர்த்தி நான்கு பக்கங்களிலும் கண்ணுற்ருன். மிதிலைச் செல்வியைக் காண பேராவல பொங்குகிறது. ஆவி துடிக்கிறது. செய்வதறியாமல் திகைக்கிருன். அண்ணலை மனத்தால் வழிபடுகிருன். ஓரிடத்தை உற்று நோக்கிய வண்ணம் மரத்தின் மேல் விரைவாக ஏறுகிருன். ‘அதோ ஓர் உப்பரிகை தென்படுகிறது; அதுதான் நான் தேடிவந்த தேவியின் ஆலய

மாயிருக்கலாமோ ?' என்று சொல்லிக் கொண்டே சடக் கென்று கீழே தாவி அந்த உப்பரிகையை அணுகுகிருன். எதிரே ஒளி பெற்று விளங்கும் மற்ருெரு சிம்சுபா விருட்சம் தெரிகிறது. கணப்பொழுதில் அதன் மேல் ஏறினுன். அங்கிருந்து சுற்று முற்றும் பார்க்கையில் அவன் மனம் 'களுக்' கென்றது. நெஞ்சு துடித்தது. கண் மலர்த்தி உற்று கவனிக்கிருன். ஆஹா! என்ன காட்சி இது! ஆம்; அங்கோர் ஒளி; ஒப்புயர்வற்ற ஒளி; கண்ணைக் கவரும் புத்தொளி; அரக்க நாட்டுத் தீய இருளை இருந்த இடம் தெரியாதபடி ஓட்டும் வெண்கதிரொளி ! கதிராயிர மிரவி கலந்தெறித்தாற் போன்ற பேரொளி !

சற்று நெருங்கிச் சென்று கவனிக்கிருன். மானிட உருவம் தென் படுகின்றது. ஓருயர் குல உத்தம மாதின் தோற்றம், இவளே ஸீதா தேவியாதல் வேண்டும். ஆடை அழுக்கடைந்திருக்கிறது. ஒரே வஸ்திரம் தரித்திருக்கிருள். புழுதியடைந்த பொன்மேனி ! கோரவரக்கியர் சூழ்ந்து கொண்டு அவ்வரிய திருமேனியைக் காவல் காத்து வருகிருர்கள். உடல் ஊணின்றி வாடி உருமாறிக் கிடக்கிறது. கீழே நோக்கிய வண்ணம் அடிக்கடி பெருமூச்செறிகிருள். பார்த்தான் ஆஞ்ஜநேயன்; மனவேதனை தாங்க முடியவில்லை. அவள் தன் திருமுகத்தை உயர்த்தும் போது, அவன் அம்முகமண்டலத்தை தரிசிக்கிருன். கருமேகத்தால் மூடப்பட்ட வெண் மதிபோல் காணப்படுகிருள். "ஆம்; இனிச் சந்தேகமில்லை; நான் தேடி வந்த தேவி இவள்தான். கடல் கடந்து, லங்கை புகுந்து, எல்லா இடங்களையும் தேடிவந்த எனக்குச் ஸீதா தரிசனம் கிடைத்துவிட்டது ! தேவியின் திருவருள் சுரக்கின்றது. ரகுகுல திலகன் ஆக்கினையைச் சிர மேற்ருங்கி திரை கடல் கடந்து, லங்கை யெங்கும் தேடித் துருவித் தரி சிக்க வந்த தேவி இவள்தான். இளைத்துக் களைத்த மேனி; புகைப் படலத் தால் மூடுண்ட அக்கினி போல் விளங்குகிருள். தூசு படிந்த ஒற்றைத் துகில். அலங்காரமோ, ஆபரணங்களோ காணப்படவில்லை. எனினும் திருமேனியில் திவ்விய காந்தி வீசுகிறது! தாமரைக் கொடிபோல் துவண்ட தோற்றம். எனினும் காலைக் கதிரவனைக் களிப்புற வைக்கும் கமலமலர் போன்ற முகமண்டலம். ஈடு மெடுப்புமில்லாத பெண்மணி. குளிர்ந்த கலைகளால் உலகைக் களிப்பூட்டும் திங்கள் போல், மாசு மறுவற்ற மங்கள கரமான, தன் வடிவழகால் உலகைக் களிப்பூட்டுகிருள். நாணும், துயரும் அந்நாரீமணியின் தவ நிலையையும், கற்பு நிலையையும் தூய்மையுறச் செய் கின்றன. அங்காரகனுல் பீடிக்கப்பட்ட ரோகிணியைப் போல் காட்சியளிக் கிருள் கண்ணீர் நிறைந்த முகமண்டலம்; மனந்தளரும் சோர்வு; துயரமும் சிந்தனையும் வாட்டி வதைக்கும் சோதனை நிலை, பரிதாப உணர்ச்சியை எங்கும் எழுப்பிச் சூழவைக்கிறது, எழிலுருவம் துயரத்திலாழ்ந்து துடிக்கி றது. சிங்காரச் செம்மான், சீறிக்குலைக்கும நாய்களால் சூழப்பட்டது போல், அவள் அரக்கிகளால் அரணிடப் பட்டிருக்கிருள். அவள் சிரம் சரத் கால சந்திர ஒளியில் கறுத்துத் திரண்டுருண்ட உலகை ஒத்திருக்கிறது, அடர்ந்து படர்ந்து அழகமைந்த கூந்தல் புழுதி படிந்துள்ளது. நீண்ட ஒரே பின்னல் முழந்தாள் வரை தொங்குகிறது பெருந்தன்மை சொரியும் சொருபம். இன்பத்திற்கே உரியவள், எல்லையற்ற துன்பத்தில் ஆழ்ந் திருக்கிருள். இவ்விபரீத விளைவு இயற்கைக்கே தகாதென்று அவள் நிலை தெளிவு படுத்துகிறது. அவள் அறிவுணர்ச்சியே மற்றெல்லா உணர்ச்சி களினும் மேலானதென்று, மேனி வனப்பும் வதனச் சோபையும் தெளி

வுறுத்துகின்றன, 'இவள்தான்' கொடிய அரக்கனால் அபகரிக்கப் பட்டு இலங்கைக்கு பலாத்காரமாக கொணரப்பட்ட ஸ்ரீராம மகிஷி', என்று நிச்சயம் கொண்டான் மாருதி. அங்கிருந்தபடியே அன்னையை மனமாறத் தரிசிக்கிறான்.

பின்னும் உற்று நோக்கி கவனிக்கிறான். முழுமதித் திருமுகம். கறுத்து வில்போல் வளைந்த புருவங்கள். சர்வாங்க சுந்திரியான அவ் வுயிரோவியத்தின் ஒளி அங்குள்ள இருளை அகற்றுகிறது. இவரது திவ்ய தேக லட்சணங்கள், இவள் தேவமாதோ என ஐயப்படுத்துகின்றன. கிருபையே வடிவு கொண்டவள். ஜீவராசிகளுக்கு நன்மையையே பயப் பவள். ஐம்புலனடக்கிய தவசியின் தூய்மை வாய்ந்தவள். வெறுந்தரை யில் வீற்றிருக்கிறாள். பொருள் விளங்காத ஸ்மிருதி வாக்கியம் போலும், கலக்க மடைந்த கவனம் போலவும், சரிந்து விழுந்த செல்வம் போலும், நிறைவேறாத கோரிக்கைபோலும், இடையூற்றால் தடைப்பட்ட காரியம் போலவும், அபாண்டமான பழியால் விளைந்த இழிவு போலும், பொலியிழந்து விளங்குகிறாள். அரக்கனால் அபகரிக்கப்பட்ட இவ்விபரீத விளைவால் மனஞ்சிதறி வெருண்டு விழிக்கும் மான் போன்ற அவள் நிலையைப் பார்த்து பார்த்துப் பரிதவிக்கிறான் வாதமாமகன். மேலும் அவன் மனந்தவித்துக் கூறுகிறான். "அநாதை போல் அச்சமுற்று, அங்கு மிங்கும் பார்க்கிறாளே, நாயகனைப் பிரிந்திருக்கும் நிலையில் நகைகள் அணிவது கூடாதென்ற நியாயத்தை மேற்கொண்டு இவள் தன் திருமேனியிலுள்ள திருவாபரணங் களை மரக்கிளையில் தொங்கவிட்டிருக்கிறாள் போலும்! சர்வாலங்காரங்களு டன் இருக்கவேண்டிய அங்க அவயங்கள் அவை ஒன்றுமின்றிச் சூனியமாய் இருக்கப் பார்க்கச் சகிக்கவில்லையே! ஸ்ரீராகவ பத்தினியான வைதேகியா இவள்? இவளா இத்துயரத்தில் சிக்குண்டு தவிப்பது?" என்று வேத சாஸ்திரத்தைக் கருத்துணர்ந்து தெளியும் பிரயாசையைப் போல் இம்மா தரசியின் நிலைமையின் தன்மையையறிந்து கலங்கினான் மாருதி.

மேலும் சிந்திக்கிறான். அன்று அரக்கன் அன்னையை அபகரித்து ஆகாய மார்க்கமாய்ச் சென்றது மனக் கண் முன் வருகிறது, "அவளே தான் இவள். அன்று மின்னற் கொடி போல் பிரகாசித்தாள். இன்று பொலி விழந்து காணப்படுகிறாள். வெகுநாள் தரித்ததால் அவள் ஆடை கொஞ் சம் சிதைந்திருந்த போதிலும், அது அதே வர்ணமும் காந்தியுமுடையதா கவே யிருந்து வருகிறது அன்று கண்ட பட்டாடையே இன்று காணப்படு கிறது. அன்று கழற்றி எறிந்த ஆபரணங்கள் இன்று காணப்படவில்லை. கணவனிடமிருந்து பிரிக்கப்பட்டதால் இவளது ஆவியும் உடலும் துடிக் கின்றன. ஆதலின் இவள் ஸ்ரீராம பததினியே. இதில் சிறிதும் சந்தேக மில்லை இவள் விஷயத்தில் தயையாலும் உருக்கத்தாலும் சோகத்தாலும் காமத்தாலும் ராகவன் எங்ஙனம் வருத்தமுறுகின்றனரோ அப்படிப்பட்ட மைதிலி இவள் தான். மாயாவியும், குரூர குணமுடையவனும், ராக்ஷஸ ராஜனுமான ராவணனால் அபகரிக்கப்பட்டதற்கு எந்தத் தாசரதி தவிக்கின் றனரோ, அம்மகா உத்தமி இவளே. நீலமலர் போன்ற கண்கள் பொருந்திய திரு முகத்தையுடைய இப்பிராட்டியின் திருமேனியழகு தாமரை மலர் போன்ற கண்ணழகு படைத்த ஸ்ரீராகவனுடைய திருமேனி வடி வழகிற்குப் பொருந்திருக்கிறது. இவள் மனம் அவரிடமும் அவர் மனம் இவளிடமும் பொருந்தியுள்ள காரணத்தால்தான், இந்த தேவியும் அந்த

தருமாத்துமாவும் ஒருவர்க் கொருவர் பிரிந்திருந்தும் இருவரும் பிழைத்திருக்க முடிகிறது. வருணிக்க முடியாத தன் தேவியின் திருவுருவத்தை மனத்தில் பதித்து வைத்திருக்கிறார் அம்மகானுபாவர். ஆகையால் தான் இவளைப் பிரிந்தும் அவர் உயிர் வைத்திருக்கிறார். அளவிடற்கரிய துயரக் கடலில் மூழ்கியவரெனினும் தன் நிலையில் நின்று இவளைத் தேடியடையும் முயற்சியில் முனைந்துள்ளார். தெய்வப் பெண் போன்ற எழில் வாய்ந்த மனைவியை மற்றவர் இழப்பாராயின் உயிர் தரியார்கள். தமது உத்தமப் பத்தினியைப் பிரிந்தும் உயிருடனிருக்கிறார் இவர். ஆதலின் இவர் செயற்கருங் காரியத்தைச் செய்து கொண்டிருக்கிறார் இப்படிப் பட்ட பத்தினியின் பிரிவைச் சகித்துச் ஜீவனோடிருக்கிற இந்த ராகவர் கன்னெஞ்சரோ?'' என்று ஜானகியின் பெருமையையும் தீன நிலையையும் பார்த்துப் பார்த்து மனமுருகிக் கூறுகிறான் மாருதி.

———

## 16. ஹனுமானின் அனுதாபம்

ஸ்ரீராகவனை நினைத்து நினைத்து, அவனை மானிட இனத்தில் மேம்பட்ட உத்தமனாகவும், குண பூர்த்தியுள்ளவனாகவும், அவைகளை அறிய செயல்களில் பிரயோகம் செய்வதை ஒவ்வொரு சந்தர்ப்பந்திலுமுணர்ந்து, விளைவுகளையும் காரணங்களையும் கருத்துக்களையும் சீர்தூக்கிப் பார்த்து, கடைசியில் அவனை ஒப்புயர்வற்ற கடவுளாகக் கொண்டு அவன் முகாரவிந்தத்தை தருசித்த வண்ணம் மனத்தால் பணிந்து கொண்டே குழைந்து போகிறான் மாருதி. ராமன் மாசு மறுவற்ற மானிடன். முதிர்ந்த மனிதத் தன்மையில் தெய்வத் தன்மையைக் காட்டி மற்றவரை அவ்வழியே அழைக்கும் பரமபுருஷன். அத்தகைய குணக்குன்றைக் கணவனையடைந்த உத்தமி இவள். உலகத்தையே படைத்தழிக்க வல்ல பிரபாவம் பெற்ற மகானைப் பதியாகக் கொண்டவள். இவள் ஏன் இவ்வாறு துன்புற வேண்டும்? என்ன விபரீத காலம் இது! இவள் சக்தி எங்கே போய் விட்டது? சிறிது கோப உணர்ச்சியுடன் கண் திறந்து பார்த்தால் போதுமே, அடுத்த நிமிஷம் இவ்விலங்கை எரியுமே? இத்தடங் கண்ணாள் தன் கடைக் கண்ணால் குளிர்ந்து நோக்கின் எவ்வுலகும் இனிது களிக்குமே! வலையிற் சிக்குண்ட மான்பேடுபோல் செய்வதறியாது திகைக்கின்றனளே? எல்லாவுலகங்களையும் பரிபாலிக்கும் ஸ்ரீ கோதண்ட தீக்ஷா குருவான காகுத்தனென்ன, பரமகுருக்களான வசிஷ்டவிச்வாமித்ரர் முதலிய முனிவர்களால் சிக்ஷிக்கப்பட்டுச் சிஷ்ய லக்ஷணம் யாவும் அறிந்து ஸ்ரீ ராகவரிடம் அளவிறந்த பக்தி கொண்ட லக்ஷ்மணனென்ன, இவ்விருவருடைய ஆதீனத்திலிருந்தும், இவள் இப்படிப் பரதேசியாய்ப் பதியையிழந்து பரிதவிக்கும் படியான காலம் ஏற்பட்டதல்லவா? இது காலத்தின் கொடுமையா?'' என்றெல்லாம் மாருதி மனமுருகிக் கண்ணீர் வடிக்கிறான்.

மேலும் கூறுகிறான்:—அப்பிரபுவுக்கு ஒத்த ஒழுக்கம், பிராயம், பண்பு, சீலம், நெறி, முறை இவளிடத்திலும் காணப்படுகின்றன. இருவரும் ஒருவருக் கொருவர் எல்லா விதத்திலும் ஒத்திருக்கின்றனர்; இருவரும் ஒரே மனமுடையவர்கள். அவர்களுள் மன வேற்றுமையில்லை, ஒழுக்கத்திலும் வேறுபாடற்றவர்கள் தன்னை வந்தடைந்தவனை அபய மளித்துச்

காப்பதே ஸ்ரீராகவனுக்கு விரதம். கொலைக் குரிய பாவிகளிடத்திலும் கருணை காட்டும் தன்மையுடையவள் பிராட்டி. இருவரும் நற்குலத்திற் பிறந்தவர் கள். அவர், சத்திய மூர்த்திகளான இக்ஷ்வாகு முதலிய மகான்கள் அவதரித்த சூரிய வமிசத்தில் ஜனித்தவர். இவள் பிரம ஞானத்தையுடைய ஜனகர் புதல்வியாகச் சந்திர வமிசத்தில் தோன்றியவள். அவர் நீலமேக சியாமளர்; இவள் உருக்கி வார்த்த சுவர்ண விக்ரகம். அவரோ இத்தகைய உத்தமியை இழந்தும் உலகனைத்தும் தேடித்திரும்பியடையும் பெரு முயற்சி யில் ஈடு பட்டிருக்கிறார்; இவளோ உலக உத்தமரைப் பிரிந்தும், கங்கைப் பெருக்குபோன்ற துயரிலும் மனஞ் சிதறாதிருக்கிறாள்.'' இவ்வாறு சொல் லிக்கொண்டே வந்த மாருதி மீண்டும் தனியே ராகவனைப் பற்றி எண்ண மிடத் தொடங்கினான். ''இவ்விசாலாட்சியின் பொருட்டல்லவா ராமன் மாபெரும் நிகழ்ச்சிகளை நடத்தினான்? தொலையாத வாலி தொலைந்தான். கபந்தன் குழியில் புதையுண்டு போனான். விராதன் முதலியோர் வாழ்க்கை முடித்து வானேறினர். ஜனஸ்தான அரக்கர் பதினாலாயிரவர் பரலோக மெய்தினர். இனி இவ்வுலகில் தமக்கு வாழ்வேதென்று கரதூஷணர் மாய்ந்த அரக்கர்களைத் தாங்களே யமபுரத்துக்கு அழைத்துச் சென்றனர். இம்மகாலட்சுமியின் கடாக்ஷத்தாலல்லவா அடைவதற்கரிய அரசைப் பெற்றான் சுக்கிரீவன். இவருடைய ஆசிவன்மையாலல்லவா நான் இவ்வு வர்க் கடலைக் கடந்து இவ்விடம் வந்தேன்! நகரையும் ஆராய்ந்தேன். கடைசியில் எல்லா முயற்சிக்கும் முடிசூட்டும் பேரானந்தமாகப் பிராட்டியின் புனித தரிசனம் ஏற்பட்டது. மகாலக்ஷமியின் கடாக்ஷமல்லவா இவ்வள வுக்கும் காரணம்! இவள் அருளால் எந்நிகழ்ச்சி தான் நிறைவேறாது நிற் கும்? இவள் நிமித்தம் அலைகடல் சூழ்ந்த பூமியையும் இப்பிரபஞ்ச மனைத் தையுமே ஸ்ரீராகவன் தலைகீழாய்ப் புரட்டநேர்ந்தாலும் அதுவும் பொருத்தம் தான். இப் பூமாதின்றி மூவுலகிலும் பாக்கியம் பெறினும் அவனுக்குப் பெரிதன்று. இவளிருக்கையில் திரிலோகாதிபத்தியம் அவள் மேன்மைக்குச் சிறிதேனும் ஈடாகாது. இப்பதிவிரதா சிரோமணி ஜனகர் யாக பூமியைப் பொற்கலப்பையால் உழும்போது கொழு நுனியினின்று தோன்றிய பரிசுத்தமான செல்வத்திருமகள். இந்திரனுக்குத் தேவராஜ்ஜியத்தையளித்த புகழ் பெற்ற தசரத சக்ரவர்த்தியின் மருமகள், எல்லாத் தருமங்களையு முணர்ந்து அவற்றை அநுஷ்டிக்கும் ஆத்தும ஞானியான ஸ்ரீராகவனுக்குப் பிரிய மனைவி. இப்பொழுது காலக் கொடுமையால் இவள் அரக்கிகளின் வசப்பட்டு அல்லற் படுகிறாள். காட்டில் வாழும் கஷ்டத்தை மதியாது, எல்லாப் போகங்களையும் துறந்து, ஜன சஞ்சாரமற்ற பயங்கரமான வனத் துள் பர்த்தாவின் பணிவிடை யொன்றையே போக்யமாகக் கொண்டு வந்தவள். மாளிகையில் சகி ஜனங்களோடு வசிப்பதில் என்ன ஆனந் தமோ அவ்வானந்தத்தைத் தன் கணவருடன் காட்டில் வசிப்பதில் அடைந்தவள். தன் பதி சேவை யொன்றையே வாழ்க்கை லட்சியமாய்க் கொண்டு, கல்லும் முள்ளும் நிறைந்த கானகத்தில் சந்தோஷமாயிருந் தவள், அரண்மனையின்பங்களை யனுபவிக்க வேண்டியவள் இப்பொழுது இந்நிலையையடைந்து வேதனையுறுகிறாள். சீலம் சிதறாத மேன்மைக் குண முடைய இம்மாதரசியை ஸ்ரீராகவன் இப்பொழுது காணப்பெறவில்லையே! நீர் வேட்கை யுடையவன் நீரைக் கண்டாற்போல, இவளைக்கண்ட மாத் திரத்தில் ரகுநாதன் களிப்படைவரே! எல்லா இன்பங்களையும் துறந்து 'கணவனை எப்படியுங் காண்போம்' என்ற திடநம்பிக்கையாலன்றோ இவள் இன்னும் உயிர் தரித்திருக்கிறாள். இவளைச் சூழ்ந்து துன்புறுத்தும்

அரக்கிகளேயோ, பூக்கள் பழங்கள் கொண்டு தன்னை விருந்துண்ண கூவி யழைக்கும் மரஞ்செடி கொடிகளேயோ இவள் கண்ணெடுத்தும் பார்ப்ப தில்லே. பெண்டிர்க்குப் பதியே பெரும் பூஷணம் என்பர். அவரைப் பிரிந்து இப்பொழுது சோபை குன்றி தோன்றுகிருள். என் மனம் கொதிக் கின்றது" என்று அன்னேயைக் கண்டு பதறித் தனக்குள் வாய்விட்டுக் கதறுகிருன் மாருதி!

---

## 17. இருளும் ஒளியும்

வைதேகியைக் குறித்து ஹனுமான் பரிதவித்துக் கொண்டு போகும் போது சந்திரன் முழு ஒளி கொண்டு பிரகாசித்தான். நீலமேகம் விண் மதியுலகை வெள்ளிப் பூச்சால் நிரப்பியது. இவ்வெண்ணிலவில் வாடி வதங்கும் அன்னேயை நன்குக வனிக்க அவகாசம் நேர்ந்தது ஹனுமனுக்கு. அவளேச் சூழ்ந்திருந்த அரக்கிகளேயும் கவனிக்கிருன். அப்பா! என்ன அவலக்ஷணமான கோர ராட்சதிகள்! சிலர்க்குப் பெண்ணுருவம் பேயுருவம். பெரும் பாலார் அங்கவீனர்கள். மற்றவர்க்கு அங்கங்கள் தாறுமாருய் அமைந்து அருவருப்பையுண்டாக்கின. இவர்கள் யாவரும் தம் உரு வத்துக் கேற்ற குணம் வாய்ந்தவர்கள். இத்தகைய கோர வடிவங் கொண்ட அரக்கியர் அன்னே ஜானகியைச் சூழ்ந்திருக்கக்கண்டு ஹனுமான் சிந்தையிலாழ்ந்தான். [இத்தகைய பிரகிருதிகளே வேண்டு மென்று பொறுக்கி யெடுத்து, சர்வலக்ஷணம் பொருந்திய திவ்விய மாதின் கண் பார்வையில் ராவணன் அமர்த்தியது ஏன்? இந்த வியக்திகளேக் கண் ணெடுத்துப் பார்க்கவும் சகிக்காமல் 'தனக்கு இசையட்டும்' என்று எண்ணித்தான் இவர்களேக் காவலில் அமர்த்தினனே? அல்லது இந்த அவலக்ஷணத்தின் முன் ஜானகியின் எழில் எவ்வாறு வரையரையின்றிப் பிரகாசிக்கிறது என்பதைக் காணவே அரக்கவரசன் ஏற்பாடு செய்தானே? மேலும் அன்னங்களிடையே ஓர் அன்னமிருந்தால், அவ்வன்னம் பார்ப் போரின் கவனத்தை இழுக்குமா? அண்டங் காக்கைகள் இடையே வெள்ளிய அன்னமிருந்தால் யாது செய்யும்? கண்ணேயும் கருத்தையும் எல்லா உணர்ச்சிகளேயும் ஒருங்கே பரவசப் படுத்துமன்றே! தவிர, எப் பாடு பட்டாவது அக் கூட்டத்தை விட்டுத் தப்பும் வழி தேடவும் அது முயலும். அவ்வழியை அவள் நினேவில் இருக்க ராவணன் இவ்வாறு செய்தான் போலும்! ஸீதையைக் காவல் செய்வோர் தன்னை நலியும் கோர அரக்கியரெனினும், அவர்களும் பெண்ணினத்தைச் சேர்ந்தவர்களே என்ற கருணே கொண்டு பிராட்டி "ஐயோ! பாவம்! இவர்களேக் கண்டு யார் இறங்குவார்!" என்றெண்ணி வருந்தினளே தவிர அவர்களிடம் குரூரத் தன்மையைக் காட்டவில்லே. தான் மனித இனத்தைச் சார்ந்தவளாதலால் அவர்களேக் கண்டு கலங்குகிருள்; பரிதவிக்கிருள்; அச்சமுறுகிருள்.]

இதைக் கண்டு ஹனுமானது அகம் அடங்காத் துயரமடைந்தது. "ஆகா என்ன விபரீதம் இது! மாதர்களின் மாபெரும் மாணிக்கம் போன்ற வள் சோகத்தால் வாடுகிருள்! கூந்தல் கலேந்து புழுதி படிந்த அலங் கோலத்திலும் அவள் அழகு பிரதிபலிக்கிறது. புண்ணியத்தின் சக்தி குன்றி கீழே வீழ்த்தப்பட்ட ஒளி மழுங்கின நக்ஷத்திரம் போன்றவளெனினும், கற்

புச் சுடர் சோதிவிட்டெரிகிறது! பதியைத் திரும்பி யடைய வழி காணாது கலங்குகிறாள். ஓராபரணமுமில்லாமல், பதிபக்தி ஒன்றையே பேரணியாய்ப் பூண்டு சோபிக்கிறாள். ஒரு நல்வார்த்தை பேசுவாரில்லாமல், தனிமையாய் கடுங் காவலில் வைக்கப்பட்டு, தன்னினத்திலிருந்து பலாத்காரமாய் பிடிக்கப்பட்டுக் குழியில் கட்டுண்டு கிடக்கிற பெண் யானையைப் போல் மனமேங்கித் தவிக்கிறாள் சரத்கால மேகத்தினுள்ளிருக்கும் சந்திர கலையை யொத்திருக்கிறாள். ஸ்நானம் செய்யாத தூசு படிந்த திருமேனி. இசைநரம் பிழந்த யாழ் போன்று காணப்படுகிறாள். இளமான் பார்வை. தீனவதனம். தன்னிலை தீனமாயிருக்கையிலும், ஸ்ரீ ராகவனை நினைக்க அவள் முகம் காந்தி பெற்று விளங்குகிறது. அவளுடைய சீலமும் கற்புடைமையும் அவளை அரணிட்டுக் காக்கின்றன. எத்தகைய திவ்விய காட்சியிது?'' என்று எண்ணி வாயு குமாரன் வியப்புறுகிறான். மறு மலர்ச்சி மிளிர்ந்து அவன் மனம் பூரித்தது. உடனே அன்னை ஜானகியுடன் அண்ணல் ராகவனை மனக் கண் முன் வைத்துப் பணிந்தான். எல்லாம் ஸ்ரீ ஸீதாராமர்களின் பிரபாவமேயென்றுணர்ந்தான். மைதிலியைக் கண்ணுற்ற வண்ணம் கிளைகளில் மறைந்து சிந்தையிலாழ்ந்தான் செல்வக் கவிச் சிரேஷ்டன்.

---

## 18. அரக்கவரசன் அசோகவனத்தை யடைதல்

ஹனுமான் சிந்தையிலாழ்ந்திருந்தான். சந்திரன் ஒளி மழுங்கி மறையவாரம்பித்தான் அப்பொழுது விடியற்காலத்தில் 'கணீர்' என்று வேத கோஷம் கேட்க ஆரம்பித்தது ராட்சதர் வசிக்கும் நகரமெனினும், அங்கு வேத மோதுதலும கடவுள் வழிபாடும், மற்ற ஆசார சம்பிரதாயங்களும் காணப்பட்டன அச்சமயத்தில் அரண்மனை வழக்கப்படி மங்கள வாத்தியங்கள் ஒலிக்கவே, லங்காதிபதி கண் விழித்தான். விழித்தவுடன் வைதேகியை நினைத்தான். இரவெல்லாங்கூட அவனுக்கு அவளைப் பற்றிய எண்ணமே போலும்! துயில் துறந்ததும் அவன் மனம் அவள்பால் சென்று கொண்டிருந்தது. நழுவிய மாலை ஆடைகளுடன் சரேலென்று எழுந்து வைதேகியினிடம் விரைந்தான். அரசன் எழுந்தது கண்டு அங்குள்ள மாதர்கள் துயில் நீத்தெழுந்து அரசனைப் பின்பற்றிச் சென்றனர். அவன் நேரில் அசோகவனத்தை யடைந்தான். அப்போது சிலர் வெண் சாமர மேந்தியும், சிலர் பொற் பாத்திரங்களில் மதுவை யேந்திக் கொண்டும் சென்றனர். சிலர் கொடி குடை முதலிய அரசச் சின்னங்களைத் தாங்கிச் சென்றனர். இப்படி இவனுடைய ஆடம்பர வருகை ஹனுமான் கவனத்தை யிழுத்தது. கட்டழகு வாய்ந்த அனேக உத்தம ஸ்திரீகள் விதம் விதமான தொண்டில் ஈடுபட்டு அவன் பின் செல்வதைக் கவனித்தான் கவித் தலைவன். அம்மாதர் குழாங்களில் நழுவின பட்டாடையுடன் ஒய்யாரமாக விரைந்து வருகிறான் ராட்சசாதிபதி. பேராற்றல் வாய்ந்த திண்டோள், வீரியம் விளங்கும் விருப்பு. பார்ப்போர்க்கு அச்சம் தரும் பத்து முக மண்டலங்கள். அக்கினிச் சுவாலையை யொத்த அகன்ற நேத்திரங்கள். அரண்மனையில் முன்பு துயிலுறும் போது ஹனுமான் அவனை ஒரு பெரும் சிங்கத்தின் கம்பீரத் தோற்றத்தில் கண்ணுற்றான்; இப்போது அவன் நடையுடைகளையும், காம வெறியால்கலங்கியுள்ள கண் பார்வையையுங் கண்டு அவனை ஒரு மதியிழந்த முழு மூடனாகக்காண்கின்றான். 'இவன் அன்னையை யணுகு

கிறான்; இவன் செயலைக் கவனிப்போம்' என்று தன் கோப தாபங்களை யடக்கிக் கொண்டு கிளைகளின் மறைவில் மறைந்து பார்த்துக் கொண்டிருந் தான் மாருதி.

---

## 19. அன்னையின் நிலை

அரக்கவரசனின் ஆடம்பர வருகையை ஹனுமான் கவனிப்பதற்கு முன்னமே அன்னை ஜானகி கண்டு விட்டாள். கண்டதும் பெருங்காற்றால் அல்லலுறும் வாழைமரம் போல் உடல் ஸ்தம்பித்து உள்ளம் பதறினள். அடங்கி ஒடுங்கி உடல் குன்றி அவயவங்களை மறைத்துப் பூமியை பார்த்த வண்ணம உட்கார்ந்திருந்தாள்.

விரைந்து வந்த ராவணன் அவளைக் கவனிக்கிறான். அவள் மன நிலையையும் உடல் தோற்றத்தையும் காண்கிறான். ஸ்ரீ ராகவனுக்கென்றே இட்டுப் பிறந்த தன் உடலை இந்த நீசன் பார்க்க வொண்ணுதென்ற எண்ணத்தால், தன்னுல் இயன்ற வரை அவள் தன் உடலை மறைத்துக் கொண்டு அடங்கி ஒடுங்கி அமர்ந்தாள். இந்நிலையில் அவன், அவள் அங் கங்களை காண முடியவில்லை. துக்கத்தால் சோர்ந்தயர்ந்த முகம், கண்களில் நீர்ப் பெருக்கு, புழுதி படிந்த வெறுந் தரையில் வெருண்டு வீற்றிருக்கிறாள். தூசடைந்த தன் துகிலைத் துடைக்கவும் தோன்றாது துயருறுகிறாள். சேற்றால் மூடுண்ட தாமரைக் கொடிபோல் ஒளியற்றிருக்கிறாள். கீழ் நோக்கியிருக்கும் இவ்வுத்தமியைக் கவனிக்கிறான் ராவணன். இவன் ஸீதையை நோக்குவதைக் கவனிக்கிறான் கிளையில் பதுங்கியுள்ள மாருதி. அன்னையையும் கண்ணுறுகிறான். அவளோ ராகவ சிங்கத்தினிடம் தன் சங்கல்பமென்ற குதிரைகளைப் பூட்டி மனமென்ற தேரில் ஊர்ந்து அவ னிடம் செல்லுகிறாள். அவனையே தியானஞ் செய்து, அவனையே தஞ்ச மென்று கொண்டு, அவனை யடைய வழியறியாது தவிக்கிறாள். துக்கத்தின் எல்லையைக் காணுது, மந்திரத்ததால் கட்டுண்ட நாக கன்னிகை போல் புறம் போக வகையில்லாது புழுங்குகின்றாள். தூமகேதுவால் துன்புறும் ரோகிணியைப்போல் அச்சமுற்று அரட்டுகிறாள். சீலமும் தருமமும் மிகுந்து, நல்லொழுக்கம் வாய்ந்த உயர் குடியிற் பிறந்து, ஒரு நிகழ்ச்சியின் விளை வால் இன்னலுற்றுக் கலங்குகிறாள். அபாண்டமான அபவாதத்தால் சிறு மைப்பட்ட கீர்த்தியைப் போலும், பயிற்சியின்மையால் மறந்தழிந்த வித்தை யைப் போலும், அகௌரவப்படுத்தப்பட்ட சிரத்தையைப் போலும், மழுங் கின ஞானம் போலும், நிறைவேருத ஆசையைப் போலும், பிழை செய்த வர்களைத் தண்டிக்க வகையின்றித் தடைபட்டு நிற்கும் அரசனது ஆக்கினை போலும், வறண்டு போன தாமரைத் தடாகம் போலும், ராகுவினல் பிடிக் கப்பட்ட சந்திரன் போலும், பதியைப் பிரிந்த துக்கத்தில் மூழ்கியவளாய் ஒளியற்றிருக்கிறாள். பத்து மாதங்களாக நீராடாதிருந்தும், தன் திவ்வியாங் கங்களின் லக்ஷணத்தால் ஒளி குன்ருது, உபவாச மிருந்து தீனையாய்த் தன் பதியை நினைந்து நினைந்து தவஞ் செய்து தரையிற் கிடக்கிறாள். மானத் தை யுருக்கவல்ல இக் காட்சியைக் கண்டு மனம் பதறுகிறான் மாருதி.

---

## 20. ராவணனது பிரார்த்தனை

சோக நிலையில் இன்னலுறும் ஸீதாதேவியைக் கண்ட லங்கை வேந்தன், சற்று ஆவேசம் தணிந்து அவளைத் தேற்ற எண்ணங் கொண்டு இனிய மொழிகளால் பேச ஆரம்பிக்கிறான். ஆசை வார்த்தைகள் பேசி அவளை வசப்படுத்த முயல்கிறான்:-- "யானைத் துதிக்கையை யொத்த துடையுடையவளே! என்னைக் கண்டதும் ஏன் உன் அவயவங்களை இவ்வாறு மறைத்துக் கொள்ளுகிறாய்? என்னிடத்தில் அச்சமேன்? விசாலாட்சி! காண்போரின் வெறுப்பைக் கண்ணழகால் அடக்குபவளே! சர்வாங்க சுந்தரியே! என்னையும் சிறிது மதிப்பாயென்று உன்னை வேண்டுகிறேன். உன் விஷயத்தில் அதிருப்தி காட்டும் அரக்கர்களோ மானிடர்களோ இங்கில்லையே. அப்படியிருக்க உனக்கு அச்சமேன்? நுண்ணிடையாய்! பயத்தை விடு. பலாத்காரமாக இசைய வைப்பதும் அபகரித்து வருவதும் அச்சுறுத்துவதும் அரக்கர்களின் இயற்கை யென்பதை உனக்குச் சொல்லவும் வேண்டுமோ? இருந்த போதிலும் உன் விஷயத்தில் நீ சம்மதியாமல் உன்னைப் பலாத்காரம் செய்வேனென்று எண்ணவே வேண்டாம். உடன்படாத வரையில் உன்னைத் தொட மாட்டேன் என்பதை நம்பு; மலர்க் கோதாய்!

[இவ்விஷயத்தில் பலாத்காரம் செய்து அடைந்தால், புஞ்சிகஸ்தலையென்னும் தேவ மாதின் முறையீட்டால் பிரமதேவனது சாபம் எங்கு தன்னைத் தொடருமோ வென்ற பயத்தால் இவ்வாறு கூறுகின்றானென வியாக்யாதாக்கள் விளக்குகிறார்கள். இது உண்மைதானென்பது யுத்த காண்டத்தில் இவன் வாயாலேயே வெளிவருகிறது]

இராவணன் சொல்லிக்கொண்டே போகிறான்:—

பயமே வேண்டாம். நம்பிக்கையிருந்தால் நானும் உன் கவனத்திற் குரியவன் என்று கொள்வா யல்லவா? இப்படி எத்தனை காலம் நீ துன்புறுவது? உன் பூமருவு பூங்குழல் புன்சடையாய்ப் பொலிகிறதே? புழுதி படிந்த தரையில கிடப்பது, அழுக்கடைந்த ஒரே ஆடையுடனிருப்பது, மாசு படிந்த மேனியுடன் பட்டினி கிடப்பது, இந்நிலைகளா உனக்கு ஏற்றவை? மைதிலீ! என்னிடம் கருணை புரிந்தாயானால், உடனே விசித்திரமான ஆடையாபரணங்கள், கந்த மூல பலங்கள், வாசனாதி தைலங்கள், இணையற்ற இன்சுவைத் தின்பண்டங்கள், விலையுயர்ந்த பானங்கள், காணக் கிடைக்காத சிறந்த ஆசனங்கள், மெத்தென்ற பஞ்ச சயனங்கள், இனிய கீத வாத்திய விநோதங்கள்—எல்லாம் உனக்குக் கிடைக்கும். சர்வ மங்கள விக்கிரகமான நீ கௌரவித்துக் கொண்டாடப்பட வேண்டியவள். இனிச் சோகம் தவிர். உத்தமமான ஆடையாபரணங்களை அணிந்துகொள். வாழ்க்கையின் பூர்ண இன்பத்தை அனுபவி. பெண் செல்வமே! இப்பொதே எழுந்திரு. உற்சாகம் கொள். இளமை யௌவனங்கள் நீரிற் குமிழி போலவன. இவை வெகு நாளைக்கு நில்லா. ஆதலின் போகத்துக் குரிய யௌவனப் பருவம் இருக்கும்போதே இன்பங்களை அனுபவிக்க வேண்டாமா? பொற்பதுமை போல்பவளே! உன் எழிலுக்கு இணை யென்ப துண்டோ? உன்னுடைய இந்த அற்புத ரூபத்தைப் படைத்த பிரமதேவன், உன் போன்ற இன்னொரு ரூபத்தைப் படைக்க முடியாமல் கை சோர்ந்தானென் றெண்ணுகிறேன். கண்டவுடனே காமமூட்ட வல்ல

கட்டழகி நீ. உன் போன்றவளை மூவுலகங்களிலும் காண்கிலேன். உனது சௌந்தர்யத்தைக் கண்டு உன்னைப் படைத்த பிரமதேவனே மோகிப்பனென்றால் மற்றையோர்க்குக் கேட்பானேன். முழுமதியனையாய்! உன் கட்டழகை எவ்வாறு வருணிப்பது? உனது ஒவ்வோர் அவயவத்தைக்கண்ணுறும்போதும், அவ்வவ்வவயவத்தின் அமைப்பெழிலில் பார்வை பதிந்து புதைந்து விடுகிறதே! பூப்பாவாய்! கொவ்வைக் கனி போலும் பவழத் துண்டம் போலும், விளங்கும் உன் அதரத்தின்மேல் புன்முறுவல் நர்த்தனம் செய்கிறதே. உன் கண்களோ தாமரையிதழ் போன்று அகன்று செவியளவும் நீண்டு செவ்வரியோடி மதன விலாசத்தோடு விளங்குகின்றன. கடைந்தெடுத்த தங்கப்பதுமை போல் விளங்குகின்றது உன் இணையில்லாத் திருமேனி. இத்தகைய கட்டழகு வாய்ந்த நீ என் மருமத்தைப் பிளக்கின்றாய் சோகத்தைத் தவிர்த்து, நான் சொல்வதற்கிணங்கி என்னுடைய உத்தம ஸ்திரீகளுக்குள் முதல் தேவியாய் விளங்கு. எனது எல்லாப் பொருளும் போகமும் நாடும் நாளும் உனக்கே அடிமை. பூமண்டலம் முழுவதும் ஜெயித்து, அதை உனக்காக ஜனகருக்குக் கொடுக்கட்டுமா? என் வல்லமையைக் காட்டக் காத்திருக்கிறேன். அதற்குச் சரியான சந்தர்ப்பம் அளிக்காதிருக்கின்றாய். எனக்கு நிகரான வல்லமையுள்ளவன் மூவுலகிலும் எவனிருக்கிறான்? என் எதிரே நிற்கத் திறனின்றி மும்மூர்த்திகளும் தேவர்களும் சிதறுண்டு போய்விட்டதை அறியாதவளா நீ? ஆகவே, தயை செய்து நான் சொல்வதற்கிணங்கு. நீராடிப் பொன்னுடையுடுத்தி, செஞ்சாந்து பூசி, ஆபரணங்களை அணிந்துகொள். அலங்காரமிட்ட உன் அழகைக் கண்டு களிக்க விருக்கிறேன். இவ்விலங்கையும், அதன் அரசும், அதன் செல்வமும் உன் ஆக்கினையை எதிர்பார்த்து அடிபணிந்து காத்திருக்கின்றன. இவற்றையெல்லாம் கைக்கொண்டு நீ உயர் நிலையெய்தி என்னுடன் சுகத்திருப்பாயாக. மரவுரி உடுத்திய ராமனால் உனக்காக வேண்டுவது என்ன? அவனுக்குத் தின்னச் சோறுண்டா? உடுக்க உடையுண்டா? படுக்கப் பாயுண்டா? கதியின்றி காட்டில் திரிகிறான் அம்மனிதன். தவசி போல் தரையில் கிடக்கிறான். மேலும் இவ்வளவு நாள் உயிருடன் இருக்கிறானோ இல்லையோ? இருந்தாலும், அவனால் உன்னைக் காண்பதென்பது ஒரு நாளும் முடியாத காரியம். ஒருகால் இரணியகசிபு என்ற அரக்கன், இந்திரனிடம் அகப்பட்ட தன் மனைவியைத் திரும்பவும் அடைந்திருக்கலாம். ஆனால் என் வசத்திலிருக்கும் உன்னை உன் கணவனென்பவன் மீட்பானென்று கனவிலும் கருதாதே. ஆதலின் உன் கணவனெண்ணத்தைக் கைவிட்டு தைரியமாயெழுந்திரு. உன்னைக்கண்ட பிறகு எனக்கு என் பத்தினிகளைக்காணவும் பிடிக்கவில்லை. ஆகையால் தடங்கண்ணீ! அருள் புரிக சர்வ போகங்களையும் சம்பத்தையும் என்னையும் ஆட்கொண்டு அரசு புரிவாயாக'' என்றான்.

---

## 21. ஸீதையின் அறவுரைகள்

ராவணனுடைய வெறி வார்த்தைகளையும் பசப்புப் பேச்சுக்களையும் கேட்ட பிராட்டி, அஞ்ஞானத்தால் அநியாயமாய்த் தனது கற்புத்தீயில் சிக்கி அவன் நாசமடையப் போவதை நினைந்து, அவனுக்கு நல்லுபதேசங்களைச்செய்து அவனை ரட்சிக்கவேண்டுமென்னும் பரம கிருபை

யினால், அவனுக்கும் தனக்கும் இடையில் ஒரு துரும்பைக் கிள்ளியெறிந்து, அவன் மந்த மதியினால் உரைத்த தீய சொற்களைப் பாராட்டாமல் மந்த காசத்துடன் பேசலுற்றாள் :—

"ராவணா ! இத்துரும்பும் நீயும் ஒன்றே நீ அன்னிய புருஷன்; மகாபராதி; உன்னையொரு பொருளாயெண்ணி நான் பதிலுரைப்பது தகாது அதற்காக இத்துரும்பை இடையிட்டேனென்று நினை. தவிர அந்தப்புர ராஜஸ்திரீகள் அன்னிய புருஷர்களோடு உரையாடும் நிர்ப்பந்தம் ஏற்பட்டுவிட்டால், அவர்கள் இடையில் திரையிட்டுப் பேசும் வழக்கமுண்டு. அத்திரையே இத்துரும்பாகும். திண் கற்புள்ள என்னை நீ தகாத பேச்சுக்களால் அவமானப்படுத்தி வந்தாய் அப்படிப்பட்ட நீ பெருந்தன்மைக் குணமுடையவனாகமாட்டாய். அற்பப் புல் நீ. இதுகாறும் உன் செல்வத்தையும் பெருமையையும் புகழையும் பற்றிப் பலவாறாகப் புகழ்ந்து பேசினாய். அவைகள் யாவும் இந்தப் புல்லுக்குச் சமானம். என் கணவன் ஸ்ரீராமனுடைய பராக்கிரமத்தையறியாமல் அவரை இழந்து பேசினாய் இந்தப் புல்லினால் காகாசுரன் பட்ட பாட்டை நீ அறியாய் போலும் ! அவருடைய பிரதாபமுள்ள பாணஜாலங்களால் ரணரங்கத்தில் அடிபட்டு இந்தப் புல் படுக்கையில்தான் நீ படுக்கப்போகிறாய். பாவத்தில் பழுதான நீ வசித்த இடமும் புல் மூண்டுபோம். புல்லைக் கிள்ளி எறிவது போல் உன் பத்துத் தலைகளையும் போர்க்களத்தில் எனது கணவர் நாளைக்கே இலேசாகக் கிள்ளிக் களையப்போகிறார். அவ்வருங்காலத்தை எதிர்பார்த்துக்கொண்டிருக்கிறேன். வீணாகக் கெட்டுப்போகாதே. உன் மனத்தை என்னிடத்திலின்றும் விலக்கு அரக்க இனத்தான் ஒரு மானிடப் பெண்ணை யடைவதென்பதைக் கனவிலும் கருதான். உன் ஆசையும் பாசமும் உன் இனப்பெண்களிடமே செல்லட்டும். பாவஞ் செய்கிறவன் சுவர்க்கத்தை இச்சிப்பதுபோல் நீ என்னையடைய இச்சிக்கிறாய். உன்னிச்சை நிறைவேறுமா ? இதை ஏன் நீ அறிந்திலை ? கீர்த்தியுள்ள ஜனககுலத்தில் உதித்தேன். சத்தியமே விரதமாகவுடைய ரகுகுலத்தில் வாழ்க்கைப்பட்டேன். தயாளகுணமும் ஏகதாரா விரதருமான ராகவருக்கு மாலையிட்டேன். பதிவிரதா தருமத்திலிருக்கும் நான் இத்தீயச் செயலை மனத்தாலும் எண்ணுவேனோ ? குலத்தையும் குணத்தையும் கீர்த்தியையும் கொல்லவல்ல இப்பாவகாரியத்தையா நான் செய்வேன் ?

வேறொரு இனத்தைச்சேர்த்த அயலான் மனைவி நான். என்னை அபகரித்துக் காவலில் வைப்பதோ. நிர்ப்பந்திப்பதோ நியாயத்துக்கும் தருமத்துக்கும் முற்றிலும் விரோதம். அரக்கனாயினும் நன்மார்க்கத்தை அனுசரிப்பதே முறை உனக்கு முன் எத்தனையோ அரக்கர் இருந்திருக்கின்றனர். அவர்கள் ஒருவரும் அன்னிய ஸ்திரீயை விரும்பினதாகக் காணோம். நீ மாத்திரம் தகாத இத்தீச்செயலைச் செய்யத்துணிகிறாய். இது உன் தீவினைப் பயனென்றே நினைக்கிறேன். அறிவைக்கொண்டு சற்றுச் சிந்தனை செய். உனக்குப் பல மனைவிகள். அவர்களெல்லாரையும் அன்னியர் காணவொண்ணாதபடி நீ கடுங்காவலில் வைத்துக் காப்பாற்றி வருகிறாய். அவ்வண்ணமே மற்றவரும், தங்கள் தங்கள் மனைவிகளைக் காப்பாற்ற விரும்பமாட்டார்களா ? ராமனுக்கு நான் ஒரே தருமபத்தினி. அவர் வேறொரு மாதைக் கனவிலும் விரும்பார். அவரைத் தவிர வேறொருவரையும் விரும்பாத பதிவிரதையான என்னை நீ இச்சிக்கலாமா ? தன்

மனைவியுடன் திருப்தி கொள்ளாது பிறர் மனைவியை இச்சிக்கிறவன் கொடும்பாவியல்லவா? புலன்களை அடக்கியாளாதவன் அரசனுவனு? துர்ச்சனர் வசிக்கும் இவ்விலங்கையில் சன்மார்க்கத்தை உபதேசிக்கும் சதாசாரப் பெரியோர்கள் இல்லையென்று சொல்லவொண்ணுது, விபீஷணன் போல்வார் இருக்கின்றனரன்றே? அப்படிப்பட்ட சத்துக்களை நீ ஏன் அனுசரிக்கவில்லை? பெரியோர்களைக்கிட்டி அவர்கள் சொற்களை ஏற்றிருந்தால் நீ இப்படிக் கெட்டுப்போயிருக்கமாட்டாய். அநியாயம் செய்தவன் அழிந்துபோவான். வேத சாஸ்திரங்களைக் கற்ற நீ இவ்வுண்மையை அறியாதது ஏன்? திருட்டுப் புத்தியில் மனப்போக்குக் கொண்ட உனக்கும் உன் மக்களுக்கும் உன் இனத்துக்கும் ஆபத்து நிச்சயமென்று எச்சரிக்கவில்லையா உன் நாட்டு மந்திரிகளும் பெரியோர்களும்? உன் எண்ணம் உன்னையும் உன் ராஜ்யத்தையும் அடியோடு அழித்துவிடப் போகிறதென்பதை நீ ஏன் உணர்ந்துகொள்ளவில்லை? இந்த லங்கை. துராத்துமாவான உன்னை அரசனுயடைந்து சாம்பலாகப் போகவிருக்கிறது. உன் ஐசுவரியத்தாலும், அதனுலடையும் இன்பத்தாலும் என்னை நீ மயக்கிவிட நினைக்கிருய். சூரியனேடு காந்தி சேர்ந்திருப்பது போல் நான் ராகவரோடு சேர்ந்தவள். என்னை அவரை விட்டுப் பிரிப்பதென்பது முடியாத காரியம். லோக நாதனுன ராமனைப் பாணிக்கிரணம் பண்ணிக்கொண்ட நான் இன்னெருவனின் கரம் பற்றுவேனே? விரதங்கள் முடித்த ஆத்தும ஞானியிடம் தன்னறிவு எப்படிச் சேர்ந்ததோ, அவ்வண்ணமே பிருதிவீ பதியான ராமச்சந்திரனையே சேர்ந்தவள் நானென்பதை நீ அறியாதது ஏனே? ராவணு! நற்புத்தியுடையவனுனல் நீ என்னை இப்போதே அவருடன் சேர்த்துவிடு; அதுவே உனக்கு ஏற்றதாகும். இதை நீ நன்ருய் அறிந்துகொள். ஸ்ரீ ராகவன் புருஷோத்தமர்; தருமமறிந்தவர்; தம்மைத் தஞ்சமென்றடைந்தவரைக் கைவிடாதவர். நீ உயிருடன் இருக்க விரும்புவாயாகில் அவருடன் நட்புக் கொள். அடைக்கலமடைந்தவரை ஆதரிக்கும் அப்பிரபுவினுடைய அடியிணைகளைப்பணி. நீ இன்னும் உலகில் ஜீவித்திருக்க விரும்பினல் — அவரால் கொலையுண்டு சாகாதிருக்க விரும்பினுல் — உடனே என்னை அவரிடம் கொண்டு சேர்த்துவிடு. இல்லையேல், உன் மக்கள், மந்திரிகள் சகோதரா அனைவரும் மடிய, மந்தோதரி வயிறலைத்துக் கதற, என் கணவர், உன் பத்துத் தலைகளையும் பனங்காய் போல் அறுத்துத் தள்ளி உன்னை மாள வைப்பர். அவரால் நீ மடிந்து போவது நிச்சயம். இந்திரன் வச்சிராயுதத்திலிருந்து நீ தப்பினுலும் தப்பலாம். லோகநாதனுன ஸ்ரீ ராகவன் சினமடைந்தால் நீ தப்புவது அசாத்தியம். இடிபோன்ற அவர் கோதண்டத்தின் பேரொலி உன்னைக் கலங்கவைக்கப் போகிறது. தீப்பொறி கண்டு விஷங்கக்கும் அவருடைய பாணசர்ப்பங்கள் இலங்கையில் வெகு சீக்கிரம் சீறி விழுவதைக் காண்பாய். லங்கையே அவைகளால் மூடுண்டு அழிந்து போம். ஈரடியால் விண்ணும் மண்ணும் அளந்து, மூன்ருவது அடி வைப்பால் மாவலியினது வலிமையை யடக்கிப் பூமிதேவியைமீட்ட திருமாலைப் போல், எனது நாதர் உன்னிடமிருந்து என்னை இதோ மீட்கப் பேகிரு. அரக்கப் பதரே! ஜனஸ்தானத்தில் அரக்கர் இனம அவரால் அறவே மடிந்ததை அறிந்திலையோ? ராமலட்சுமணாகள் இல்லாதபோது, அவர்களுக்கு அஞ்சி என்னைத் திருடிக்கொண்டு வந்துவிட்டாய். இதுவா உன் பராக்கிரமம்? அவர்கள் முன்னே உன்னுல் நேரே நிமிர்ந்து நிற்கவும் முடியாதே. புலிகள் முன் நாய் நிற்க முடியுமோ?

ஒரு சமயம் விருத்திராசுரனுக்கும் தேவராஜனை இந்திரனுக்கும் யுத்தம் நேர்ந்தது. அவ் யுத்தத்தில் விருத்திரன் தன் ஒரு கையாலும் இந்திரன தன் இரண்டு கைகளாலும் யுத்தம் செய்தனர். இரு கைகளாலும் சண்டையிட்ட இந்திரன் வெற்றி பெற்ருன். ஒரு கையாற் பொருத அசுரன் மாண்டான். அதுபோல் ஒருவனை நீ ராம லட்சுமணர் என்ற இரு வீரர்களை எதிர்த்தால் உனக்கு வெற்றி ஏற்படுமா? சாவு தான் நிச்சயம். இப்போதே உன துர்நடத்தையைத் திருத்திக்கொள் இல்லையேல், நீ குபேர பட்டணம் சென்ருலும், வருணனிடம் ஓடியொளித்தாலும், பாதாளத்தில் புகுந்தாலும், ஸ்ரீ ராமபாணம் உன்னைத்துரத்திப்பிடித்து உன் உயிரை மாய்க்கும் என்பதை உனக்கு எச்சரிக்கிறேன். நீ தாசரதியினிடமிருந்து தப்பி உய்வதென்பது மாத்திரம் ஒரு நாளும் முடியாது. ஆகையால் இப்போதே உன்னைக் காப்பாற்றிக் கொள். என்னை என் பதியினிடம் திருப்பிச் சேர்த்து, அவர் நட்பைப் பெற்று ஜீவித்திரு'' என்று மொழிந்து உரையாடுவதை நிறுத்திவிட்டாள் நீலலோசனி.

———

## 22. ராக்ஷஸ ராஜன் தவணை விதித்தல்

மைதிலியின் மதியுரையை வசைமொழியாகக் கொண்டான் அரக்கவரசன். அவள் கூறிய அறவுரைகளின் பொருளை உணராது கோபமடைந்தான். காம வசப்பட்டவன் காதுகள் அறவுரைகளை ஏற்குமோ? இதுவரை யாரும் அவனை இப்படிக் கடிந்து பேசினதுமில்லை; மறுத்ததுமில்லை; திருணமாக அலட்சியம் செய்ததுமில்லை. தன்னைக் கண்ணெடுத்துப் பாராது துரும்பை நோக்கியே ஸீதையின் வசனங்கள் வெளிவந்தமையால், அரக்கன் அடங்காக் கோபங்கொண்டான். தன்னைச் ஸீதை ஒரு அற்பத் துரும்பாய் நினைத்துப் பேசினதை நினைக்க அவன் ஆவி துடித்தது. ''அவள் துரும்பைப் பார்த்துப் பேசினள்; அத்துரும்பின் பாக்கியம் கூட எனக்குக் கிட்டவில்லையே!'' என்று வருந்தி வெகுண்டான்; அவளை நோக்கிக் கர்ஜிக்கிருன் :-

''ஸீதே! நீ சொன்னவை யாவும் யானறிவேன். காமங்கொண்ட ஒருவன் ஒரு ஸ்திரீயைச் சாந்தப்படுத்த முனைகிருன். அப்பணியில் ஈடுபட்டு அவளுக்கு ஆட்படுகிருன். அவன் தன்னிடத்தில் விசுவாசம் வைக்க அவளைப் புகழ்ந்து பேசுகிருன். ஆனல் அவளுடைய அவமதிப்பைத்தான் பெறுகிருன். இவையாவும் காமுகரின் இயல்பே. உன் கடுஞ்சொற்கள் எனக்கு அடங்காக் கோபத்தை மூட்டினவெனினும், உன் பிரியத்தை நாடும் ஆசை அக்கோபததை அடக்கிவிடுகிறது. உன்னைக் காணுந்தோறும் சினேகமும் வருத்தமும் பொறுமையுந்தான் எழுகின்றனவேயன்றிக் கோபமெழுவதில்லை; குற்றங் குறைகளும் உன் வசைச் சொற்களும் மறைந்து போகின்றன. உன் சுந்தர வதனத்தின் மகிமை அது. இலங்காதிபதியான நான் காமக்கடலில் இப்படி முழுகியிருக்கிறேன். நீயோ, தவசிக் கோலங்கொண்டு ஒரு வனசரனிடத்தில் மனத்தை வைத்துத் திரும்பாதவளாயிருக்கிருய். என்னை அறவே புறக்கணித்தாய். ராக்ஷஸ ராஜனை என்னை மதியாமல் உன் பேச்சுகளால் அவமானப்படுத்தியதற்கு உன்னை வதை செய்யவேண்டியதுதான் நியாயம், எனினும் பொறுமையை

மேற்கொண்டு அப்படிச் செய்யாமலிருக்கிறேன். மைதிலீ! நீ என்னைக் குறித்து மொழிந்த ஒவ்வொரு கடுஞ்சொல்லுக்கும், ஒவ்வொரு தண்டனை உண்டென்று அறியாயா? "இன்னும் பார்ப்போம்; இன்னும் பார்ப்போம்" என்று விட்டிருக்கிறேன். உனக்கு விதித்த தவணைக்காலம் நெருங்கி விட்டது: அது இன்னும் இரண்டே மாதங்கள்தான் இருக்கின்றன. இவைகள் கடப்பதற்குள் நீ எனக்கு இசையாவிட்டால், தவணை கடந்த அடுத்த நாளே உன்னை என் சமையல்காரர்கள் வெட்டித்துண்டாக்கிக் காலைப் போஜனத்திற்கு உபயோகப்படுத்திவிடுவார்களென்பதை மனத்தில் வை. ஜாக்கிரதை!" என்று கடுகடுத்து வெருட்டினன்.

துரும்பையே கவனித்துக்கொண்டிருந்த ஜானகி இக்கடும் உத்திரவைக்கேட்டு உள்ளம் பதறி அச்சத்தால் மலங்க மலங்க விழித்தாள். அப்பொழுது ராவணனோடு தொடர்ந்து வந்து அருகிலிருந்த தேவ—கந்தர்வ கன்னிகைகள் இரகசியமாகச் ஸீதையைத் தேற்றினார்கள். சிலர் கண்சாடையாலும், தலையசைப்பாலும், உதட்டின் மூலமாகவும், 'அஞ்சாதே!' என்று தைரியமூட்டினார்கள். ஸீதை அதைக் கண்டு சிறிது தேறித் தன் நிலையையடைந்து, தீயவழியிற்செல்லும் அரக்கவரசன் நேர்முறையில் திரும்பும்படி அவனுக்குச் சில அறவுரைகளை மீண்டும் உரைக்கலுற்றாள் :-

"ராவணா! உன் நன்மையை விரும்பும் எவரும் இங்கில்லையா? உன் உப்பைத்தின்ற உன் சுற்றத்தார் நீ அழிந்துபோவதைப் பார்த்து நிற்கிறார்களே! இந்திரனுக்குச் சசீதேவிபோல ராகவருக்கு நான் பத்தினி. அந்தப் பிரதாபமூர்த்தியின் மனைவியான என்னை மனத்தினால் இழிவாக நினைப்பவன் உன்னைத்தவிர இம்மூவுலகத்தில் எவனுமில்லை. இது உன் மூடத்தனமா? தீய சுபாவமா? நீ ஒரு அரக்கப் பதர். அவரோ கம்பீரமான கஜேந்திரர். அவரை நீ எதிர்க்க முடியுமா? ஏன் வீணாகப் புகழ்ந்து கொள்ளுகிறாய்? அந்த லோகநாதன் இல்லாத சமயம் பார்த்து என்னைத் திருடிக்கொண்டு வந்து விட்டாய் அவர்கள் கண்களில் நீ தென்பட்டிருந்தால், அப்போதே நீ உயிர் துறந்திருப்பாய். இப்போது வீரம் பேசுகிறாய். உனக்கு வெட்கமில்லையா? என்னைக்கண்டு காமுற்ற உன் கோரக்கண்கள் ஏன் தெறித்து விழவில்லை? நீ ஒரு அரசனா? கொடும் பாதகன். தரும விக்கிரகமான கோசலேந்திரன் மனைவியிடம் தகாத வார்த்தைகள் பேசும் உன் நாக்கு ஏன் இன்னும் அறுபட்டு விழவில்லை? காரணம் தெரியுமா? சொல்லுகிறேன், கேள். அபராதிகளைச் சபிக்கும்படி என் நாதன் எனக்கு அனுமதியளிக்கவில்லை. அவர் அனுமதியின்றி யான் உன்னைச் சபிப்பது அவருக்குச் சம்மதமாயிராது. அவர் அபராதிகளிடத்தும் கருணையையே காட்டுபவர். கணவருக்குச் சம்மதமில்லாத காரியத்தைச் செய்வது, குலஸ்திரீகளின் கற்புக்குக் குறைவாகும். மேலும் சாபமிடுவதால், தவபலமும் குறையும். இக்காரணங்களால் நீ யமபுரத்தையடையாது பிழைத்திருக்கிறாய். இதை நீ அறி. பெண்கள் முன் வீரம்பேசி அகமகிழும் ஒரு சூரப்புலி, இதோ ஒப்பற்ற ஒரு நரப்புலியாலடிக்கப்பட்டு மண்ணைக் கவ்வி மாளப்போகிறது" என்று அவளும் தன் கம்பீரத் தொனியில் மொழிந்தாள்.

வாடி வதங்கி வேதனையுறும் வீராங்கனையான வைதேகி கூறியதைக் கேட்டான் அரக்கர் கோமான். அவன் கோபம் பொங்கி யெழுந்து பேயாட்

டங்கொண்டது. நறநறவென்று பற்களைக் கடித்தான். முகம் சிவந்து அக்கினிச் சுவாலை போல் எரிந்தது மிருகத்தன்மையும் பேய்த்தன்மையும் அவனிடம் உறவாடின. அவன் காமத்தாலும் கோபத்தாலும் நிலைதவறித் துடித்தான். ஸீதையை அப்போதே கொன்றுவிடவும் அவன் சினம் தூண்டியது. அவளைச்சூழ்ந்திருந்த கோர வரக்கியரைத் தூண்டினுன். "எப்படியாவது ஸீதையை இசைய வைக்கவேண்டியது உங்கள் கடமை" யென்று அவர்களுக்குத் திட்டமிட்டான். கோபமேலீட்டால் என்ன நேரிடுமோ வென்று யாவரும் நடுங்கினர். அப்போது தான்யமாலினியென்ற அரக்கி ராவணனைக் கட்டித்தழுவி, "நாதா! இந்த ஸீதையென்பவள் தேகம் மெலிந்து, தசைவற்றிச் சோபை குன்றிப்போனவள், கேவலம் ஓர் அற்ப மானிடப்பெண். பிரமதேவரால் அளிக்கப்பட்ட லங்கையின் சகல போகங்களையும் அனுபவிக்கக் கொடுத்து வைக்காதவள்; இஷ்டமில்லாத ஒரு பெண்ணை எவ்வளவு நேரம் நிர்ப்பந்திக்கலாம்? நிர்ப்பந்திப்பதால் என்ன லாபம்? உமது உடல்தான் தாபத்தையடையுமேயன்றி வேறில்லை. காம ரஸம் தர இசைந்தவளுடன் இன்புறுவது மனமகிழ்ச்சியைத் தருமல்லவா? நீரோ ராக்ஷஸ ராஜர்; அவளோ அற்ப மானிடப்பெண். உம்முடைய தேக பலத்துக்குத் தகுந்த சுகம் கொடுக்கத் தகுந்தவளா அவள்? ஆதலின் அவளிடமுள்ள ஆசையை விடும்" என்று அவன் மதியையும் போகத்தையும் திருப்பித் தன்னுடன் அரண்மனைக்கு அழைத்துக் கொண்டு போக அவனை அழைத்தாள். அவள் முகத்தில் ஆசை பவனி வருவதைக் கண்டான் லங்கை அரசன். அதன் கருத்தையும் உண்மையையும் உணர்ந்தவனுகப் புன்னகை புரிந்தான். உடனே ஜானகியின் திடத்தைக் கண்டு வெதும்பினுன். கோபங்கொண்டு அவளை மிரட்டினுன். அவன் திரும்பிச் செல்லும்போது அவன் உடலின் அதிர்ச்சிவேகம் பூமியை அவன் அழுத்திய அடிகளால் கிடுகிடுக்க வைத்தது.

– — –

## 23. அரக்கர்களின் ஆர்ப்பாட்டம்

முன்பு இப்பரத கண்டத்தில், ராம ராஜ்ய சகாப்தத்தில், சூரிய குல சாம்ராஜ்யத்தில், அயோத்திமா நகரில், கோமதீ தீரத்தில், நைமிசாரணியத்தை விளங்கச்செய்த அசுவமேத யாகசாலையில், அமர்ந்திருந்த மாமுனிவர்கள், ரிஷி கணங்கள், பாமர மக்கள், நகர மாந்தர்கள், வானர வீரர்கள் அரக்கப்பிரமுகர்கள் முன்னிலையில், நீலமேகசியாமளனும், சர்வ மங்கள விக்ரகனும், சர்வலோக ரக்ஷகனும், சர்வேசுரனுமான ஸ்ரீமந்நாராயணன், அயோத்தியாபுரிசனகைச் சத்திய சிம்மாதனத்தில் தனிச்செங்கோல் செலுத்தி, இனிது வீற்றிருக்கையில், இளஞ்சந்திரர் போன்ற குசலவர்கள் பதினெட்டாம நாள், ஸ்ரீமத் வால்மீகி ராமாயணம், சுந்தரகாண்டம், இந்த ஸர்க்கம் முதல் ராவணன் சேனைத்தலைவர்கள் வதைவரை கானமுதத்தில் வார்த்து ஆனந்தம் பொழிந்த பிரகாரம் பின்வருமாறு:—

[தான்யமாலினி தசக்ரீவனைத் தழுவிக்கொண்டு அவனை அரண்மனைக்கழைத்துச் சென்றுவிட்டாள். முக்கியமாக அவள் காட்டிய காரணம் ஒன்று அவன் கவனத்தில் பட்டிருக்கவேண்டும்: அது உண்மைதான் என்று அவன் உணர்ந்திருக்க வேண்டும். "ஸீதை அற்ப மானிட இனம்

என்றும், பலாத்காரமாக மதிமயங்கிக் காமபோகத்தில் அரக்கர், மானிட மாதிடம் ஈடுபடுவது தகாதென்றும், ஆசை வைக்காத கேவலம் ஒரு மானிடப் பெண்ணினிடத்தில் என்ன சுகம் காண்பாய்?'' என்கிற கருத்தையும் தெளிவாய் வெளிப்படுத்தின அவன் சொற்கள். இவ்வாறு மிகவும் கேவலமானதாகவும் இலட்சியத்திற்குரியதல்லவென்றும் அரக்கர் மனப்பான்மை மானிட இனத்தைப் பாவித்து வந்தது. அரக்கர்கள் கொடிய மிருகத் தன்மை வாய்ந்தவர்கள்; அவர்களை உலகில் உயிர்வாழவும் விடக்கூடாது என்ற மானிடக்கொள்கையும் பரவியிருந்தது. இப்படி இன வித்தியாசத்திலும் வாழ்க்கைப்போக்கிலும் மாறுபாடுகொண்டு பகை மூண்டு இனச் சண்டை கிளம்பி ஒருவரையொருவர் அடித்துக்கொண்டு இருவரும் அழிவது உலக இயற்கையே. இதை வற்புறுத்துகிறது தான்யமாலினியின் பேச்சுகள். இதையே உண்மையாகக் கொண்டான் போலும் அரக்கர் கோன். அதனால் அவன் அசோகவனத்தை விட்டு அவளுடன் அரண்மனை அடைந்தான்.]

ராவணன் திரும்பி அந்தப்புரம் சென்றதும் ஸீதைக்குக் காவல் புரிந்துவந்த அரக்கியர் மைதிலியை நெருங்கிச் சூழ்ந்துகொண்டார்கள். அவளைப் பலவிதமாய்ப் பயமுறுத்துவதில் முனைந்தார்கள். ஒருத்தி சொன்னாள்: "ஸீதே! மகாத்துமாவான புலஸ்தியர் குலத்திலவதரித்த தலைசிறந்த கீர்த்திமானான ராவணனுக்குப் பட்டமகிஷியாவதை நீ பெரிதாகக் கருதவில்லையா? ஏகஜடை எனும் ராட்சதி, 'பிரம தேவனையொத்த விச்ரவஸ் என்ற மகாத்மாவின் புத்திரன் ராவணன்; மிக்க பிரதாபசாலி; அவனை எதிர்ப்பதில் பயனென்ன; நீ நல்லவளாதலால் என் பேச்சுக்குச் செவி கொடுப்பாயென்று நினைக்கிறேன்'' என்றாள். பின்னர் ஹரிசடை, பிரகசை, விகடை, துர்முகி என்ற அரக்கிகள் ஒருவர்பின் ஒருவராக ராவணப் பாடத்தைப் படிக்கவாரம்பித்தார்கள். எல்லோரும் அவன் வீரத்தையும் சூரத்தையும் பற்றிப் புகழ்ந்தார்கள். அவன் குரூர சுபாவத்தையும் விளக்கிப் பயமுறுத்துகிறார்கள். "ஸீதே! இன்னும் கேள். இவ்வரக்கனுக்குப் பயந்து கதிரவன் கொளுத்தாதிருக்கிறான்; வாயுதேவன் மெதுவாக வீசுகிறான்; மரங்கள் சதா மலர்மாரி பொழிகின்றன; அவன் வேண்டியபோது மலைகளும் மேகங்களும் நீரை மெதுவாக விடுகின்றன; அவனிடம் தேவர்களும் அசுரர்களும் அச்சமுற்றிருக்கின்றனர் என்றார்கள். இவ்வாறெல்லாம் சொல்லி ஜானகியின் அச்சத்தை எழுப்புவதில் இறங்குகிறார்கள். இதற்கெல்லாம் அவள் இணங்குவாளென்று நினைத்தவர்களில்லை அவர்கள். அரசன் ஆணையைச் செய்யாவிடில் அவன் தங்களைக் கோரமாகத் தண்டிப்பான் என்று திகிலடைந்து வாய்க்கு வந்தபடி அவளைத் தூண்ட வாரம்பித்தார்கள்.

---

## 24 மானிட-அரக்க முரண்பாடு

மானிட சுபாவத்தை மிகவும் தாழ்மைப் படுத்தியே அரக்கிகளின் மொழிகள் வெளிவந்தன. இதைக் கேட்கக் கேட்க வைதேகி மேலும் மேலும் மானிடசுபாவமடைந்து கொடிய விலங்குகளிடையிலகப்பட்ட மான்போல் அச்சமுற்றுத் துடித்தாள். அவர்கள் வசனங்கள் தாராசம்

போல் பாய்ந்து அவளைத் துன்புறுத்தின. ஒருத்தி சொல்கிறாள்: "ஸீதே! யாவரையும் வசீகரிக்கவல்ல சிறந்த சயனங்கள் அமையப்பெற்ற அந்தப் புரத்தில் ராவணனோடு வசிப்பதை நீ ஏன் மறுக்கிறாய்? நீ ஒரு மானிடப் பெண்; கேவலம் மானிடனுடன் வாழ்வதையே பெரிதாக எண்ணுகிறாய். உனக்கு நிகழவிருக்கும் பெரும் பாக்கியத்தை நீ நினைக்கவில்லை ராமனிடம் திரும்பிச் சேர்வதொன்றையே நினைத்துக் கொண்டிருக்கிறாய். அக்காரியம் நடக்குமாவென்பதை யோசித்துப்பார். அவனிடமிருநது மனதைத் திருப்பு. இனி நடக்கப்போவதை நினை. மூவுலகும் அடைதற்கரிய போகங்களையடைந்து சுகித்திரு. ராமனோ அரசை விட்டு அப்புறப்படுத் தப் பட்டவன் காரியம் கைகூடாதவனாக வருந்துகிறான் அம்மானிடன். நீ மனிதசுபாவத்தால் அவனையே நினைந்து நினைந்து வருந்துகிறாய். இது என்ன அல்பமான மானிடக்குணம்" என்று இடித்துக் காட்டுகிறாள்.

மற்ற அரக்கிகளும் இந்தப்பாடத்தையே படிக்கிறார்கள். இப்போதனையைக் கேட்டுக்கேட்டு மைதிலி அலுத்துப்போய் அவர்களிடம் பேசுகிறாள். "அம்மா! என்ன விபரீத புத்திமதி இது? உங்கள் துர்ப்போதனைகள் உலகத்துக்கு ஒத்தனவாவென்பதை யோசித்துப்பாருங்கள். இப்பேச்சுக்கள் கேட்பதற்கு உரியனவா? மானிடப்பெண் அரக்கனுடன் கூடிவாழ்வது எங்கேனுமுண்டா? நீங்கள் எவ்வளவு சொன்னபோதிலும், என்னை எவ்வளவு துன்புறுத்திய போதிலும், உலகம் வெறுக்கும் இவ்வநீதியான சொற்கள் என் காதில் விழமாட்டா. என் கணவர் ராஜ்யமிழந்தவராயினும், கஷ்டத்தால் வருந்துபவராயினும் அவர்தான் எனக்கு எப்பொழுதும் நற்கதியளிக்கும் கடவுள். சூரியனைப் பற்றியிருக்கும் சுவர்ச்சலா தேவி போல் நான் என் பதியையே நம்பி உயிர் தரித்திருக்கிறேன். சசீதேவி இந்திரனை விட்டுப்பிரிவாளா? அருந்ததி வசிஷ்டரையும், ரோகிணி சந்திரனையும், லோபாமுத்திரை அகஸ்தியரையும், சுகன்யை ச்யவனரையும், சாவித்ரீ சத்யவானையும் ஸ்ரீமதி கபிலரையும், மதயந்தி ஸௌதாஸரையும், கேசினி சகரரையும் எப்படி இணை பிரியாது இருக்கின்றார்களோ அவ்வண்ணமே இக்ஷ்வாகு குல திலகரான ஸ்ரீராகவரைப் பதியாக அடைந்து நான் அவருடன் வாழ்ந்து வருபவள். இதை உங்களுக்கு அடிக்கடி எடுத்துரைக்க வேண்டுமா?" என்று மதியுரை வழங்கினாள். அம்மாது நன்மணி.

[ * மிக்க கோர ரூபமுள்ள அரக்கிகள். விகார ரூபமுள்ளவர்கள். அருவருப்பை அலுக்காது மூட்டும் அவலட்சண உறுப்புகள் கொண்டவாகள், அவர்கள் நடுவில் ஜோதியுடன் பிரகாசிக்கும் வைர நட்சத்திரமான ஜானகி தேவி கார்காலத்துக் கருமேகத்தின் நடுவே உல்லாசமாயும் கம்பீரமாயும் புன்னகையுடன் உள்ளங் குளிரவைக்கும் முழுமதி வெண்ணிலா போல் திகழ்கிறாள். தன்னைச் சூழ்ந்திருக்கும் பேயுருவங்கள் பால் கொஞ்சமும் அருவை கொள்ளவில்லை, ஐயோ! இவர்களும் பெண் ஜென்மமெடுத்தவர்கள். விகாரமுற்றிருக்கும் இவர்கள் வாழ்வு என்னவாகும் என்ற கருணையுணர்ச்சி எழுகின்றது. அவர்கள் விகாரமடைந்த உள்ளத்திலும் இருள் சூழ்ந்த மதியிலும் நல்லெண்ணமெழுப்ப, நல்லறிவு காண அவர்களுக்கு இதோபதேசம் செய்கிறாள். பெருந்தன்மை என்ற குணம் வெள்ளமெடுத்து வழிந்தோடுகிறது!]

அரக்கிகள் கோபங்கொண்டனர். தங்கள் தலைவன் விடுத்துள்ள கட்டளை நிறைவேறாதென்று கண்டு செய்வகையறியா அவர்களுக்கு சினம் பொங்கி எழுந்தது. இவளுக்குத்தான் என்ன வைராக்கியம்? ஆகட்டும்; நாமும் ஒரு கை பார்க்கலாமென்று அவர்கள் அரக்க சுபாவம் அவர்களைத் தூண்டிற்று.

இந்த நாடகத்தை எல்லாம் மௌனமாக மறைந்திருந்து கேட்ட வண்ணமிருக்கிறான் மாருதி அரக்கிகள் கடுஞ்சினங்கொண்டு சீறி எழுந்து மைதிலியை நாற்புறமும் சூழ்ந்துகொண்டு பல்லைக்கடித்து தாறு மாறாய்த் தெழிக்கத் தொடங்கினர். சிலர் கூரிய ஆயுதங்களைக் கையிலெடுத்து ஸீதையை அணுகவே, அவள் அடங்கா அச்சங்கொண்டு பரபரப்புடன் ஹனுமான் ஒளிந்திருந்த சிம்சுபா மரத்தினிடம் ஓடிவந்தாள். என்ன செய்வதென்றறியாது அங்கேயே தயங்கி நின்றாள். உடனே வினதை எனும் அரக்கி அவளை அணுகி, "அம்மா! போதும்; நீ துக்கப்படுவதை நிறுத்து உன் பதிபக்தியை நாங்கள் அறிந்தோம். மானிடதருமம் இத்தன்மையதென்பதை விளக்கிக் காட்டினாய். நாங்கள் திருப்தியடைந்தோம். இனி உன் வாழ்வைப் பற்றிச் சிறிது சிந்தனை செய். உனக்கு நன்மை பயக்கும் என் சொல்லைக் கேள். உனக்கு க்ஷேமமுண்டு. ராக்ஷஸ ராஜாவும் பிரதாபவானுமான ராவணேச்வரருடைய எண்ணத்தைப் பூர்த்திசெய்து சுகமடைவாயாக. தீனனான அந்த அல்பமானிடன் ராமனைப் பற்றி இன்னும் ஏன் சிந்தனை? இன்றே உன்னையடைய விருக்கும் பாக்கியத்தைப் பெற்று மஹா ராணியாய் விளங்கு. வைதேகி! அந்த ராமன் என்பவன் திக்கற்ற மானிடன்; அல்ப ஆயுளுள்ளவன்; அவனால் இனி உனக்கு ஆக வேண்டியது என்ன இருக்கிறது? ஆகையால் நான் சொல்வதைக் கேள். ராவணனைப் பதியாக அடை. இல்லையேல் எங்கள் கோபத்தீ கட்டுக்கடங்காது. மண்டிவிடும். அப்போது உன்னை எங்கட்கு இரையாக்கிக் கொள்வோம். ஜாக்கிரதை" என்று கர்ஜித்தாள்.

பின்பு விகடை என்ற மற்றொருத்தி தன் கோர சொரூபத்தைப் பெருமைப் படுத்திக் கையை ஓங்கிக் கொண்டு ஸீதை முன் பாய்ந்தாள். "அடி! அறிவு கெட்டவளே! இது வரையில் நாங்கள் உன் சொற்களைக் கேட்டுப் பொறுத்திருந்தோம். நீ சோக முற்றது போதும். இனி ஆனந்த வாழ்வைக கைப்பற்றிக் கவலையொழி. துக்கத்தை விட்டு விடு. ஸ்திரீயின் யௌவன தசை நீடித்திருக்காது; அதற்குள் நீ ஸுக வாழ்வு காணவேண்டாமா? இதோ, இப்பொழுதே எங்கள் எஜமானியாகி, அரண்மனையில் அரசருடன் இன்புற்று வாழ்ந்துவா இல்லையேல், இப்போதே உனது இருதயத்தைப் பிளந்து தின்பேன்" என்று அதட்டினாள். பின்பு, சண்டோதரி, பிரகசை, அஜாமுகி, சூர்ப்பணகை என்ற அரக்கிகள் ஒவ்வொருத்தியாக இதே பாடத்தை ஒவ்வொரு விதமாகப் படிதது பலவிதத்திலும் அவளைத் துன்புறுத்தினார்கள். தாங்கள் சொல்வது வெறும் அட்டகாசமல்ல வென்று காண்பிக்கச் சிலர், உடனே கட்குடித்து இவளைத் துண்டாக்கிக் கறி சுவைக்கும் காரியங்களில் முனைவதாகக் காணபித்துக் கொண்டார்கள். பல தடவை அவர்கள் மானிட இனம் மானிட இனம் என்று இடித்துக் காட்ட மைதிலி மனமுடைந்து உடல் நடுக்கங் கொண்டு புலம்பலானாள்.

———

## 25. வைதேகியின் பரிதாப நிலை

சோகம் தலைக்கேறி ஒன்றும் செய்ய வழியறியாது திகைத்துத் தவித்து சிம்சுபா மரத்தினடியில் வந்து நின்று கண்ணீர் விட்டு, மிகவும் தழு தழுத்த குரலில் அவர்களை உற்று நோக்கிப் பின் வருமாறு மொழிந்தாள் ஸீதை:— ''அரக்கிகளே! நீங்கள் எதை வேண்டுமானாலும் சொல்லுங்கள்; செய்யுங்கள்; என்னைக் கொன்று தின்னுங்கள். அது உங்கள் சுபாவம். மானிட சுபாவத்தை அறிந்தவர்களா நீங்கள்? ஒரு மானிட ஸ்திரீ ஒரு அரக்கனுக்குப் பத்தினியாவளோ? ஆகையால் உங்கள் வார்த்தைக்கு ஒரு நாளும் நான் இணங்கேன்'' என்று திடமாய் உரைத்து விட்டாள்.

அங்கேயே திகைத்துப் போய்த் துக்கம் மேலிட்டுக் கண்ணீர் விட்டாள். ''ஈதென்ன விபரீதம்! பிராணபதமான பதியை விட்டுப் பிரிந்து இக்கோர அரக்கியரால் வேதனைப்படும் எவளும் துயரம் தாங்காது உயிரை விடுவள். எனினும் அதற்கும் காலம் வந்தால் தான் மரணம் நேருமென்ற உண்மையை விளக்கிக் காட்டவோ என்னவோ நான் இன்னும் உயிர் தரித்திருக்கிறேன்'' என்று எண்ணமிட்டது மைதிலியின் மனம். உடனே ராகவனைப் பற்றிச் சிந்தித்தாள். புஷ்பம் செறிந்த ஒரு கிளையைப் பிடித்துக் கொண்டு 'ராமா ராமா' வென்று கதறிக்கொண்டே அங்கம் பதறினாள். தன் நிலையை நினைந்துருகினாள். ''அனாதையாய் அலறுகிறேனே! உங்களைக் காணாது என் மனம் துடிக்கின்றதே! கடலில் மூழ்கும் கப்பலைப் போல் நான் நாதனில்லாதவள்போல் நாசமாகப் போகிறேனே! இவ்வரக்கிகளின் வேதனை தாங்க முடியவில்லையே! செந்தாமரைக் கண்ணனும், விக்கிரம சிங்கனும், மானிட மன்மதனும், இன்சொற் செல்வனுமான என் நாதனைப் பார்ப்பவர்களன்றோ பாக்கியசாலிகள்! அவரின்றி விஷமுண்டும் பிராணன் போகாமல் பிழைத்திருப்பது போல், நான் அவரில்லாமல் இன்னும் உயிர் வைத்திருக்கிறேனே! முன் பிறப்பில் செய்த பாபத்தின் பயனா இது? இனி நான் என் பதியைக் காண்பேனோ! அவரைக் காணாது என் ஆவி துடிக்கின்றதே! அவரது பிரிவை இனி என்னால தாங்க முடியாது. நான் உயிர் வைத்திருந்து என்ன பலன். நான் பிராணனை இழக்க நினைக்கிறேன். என் மானிடப் பிறவி அரக்கர் இனம் முன் இழிவாக்கபபட்டது. பிராண நாதனை என் பதியைவிட்டு அந்நியன் வசமிருப்பது கற்பரசியான எனக்கு முறையாகுமா? துயரக் கடலில் வீழ்ந்து தவிக்கும் நான் அதன் கரையைக் காண்பேனோ? உடலும் உயிரும் எல்லாம் அவனுடையதல்லவா? அவர் அனுமதியின்றி நான் உயிர் மாய்ப்பது அவருடைய பத்தினியான எனக்குத் தருமமாகுமோ? ஐயோ! ஒன்றும் தோன்றவில்லையே'' என்று நினைத்து நினைத்து உள்ளம் துடித்துக் கதறினாள்.

---

## 26. பொங்கும் கடல் கரை காட்டுகிறது

தன் கணவனைப் பற்றி நினைத்து வருத்தமுறும் மைதிலி தன் கதியை நொந்து கதறியழுதுகொண்டே மிகவும் தாழ்மை நிலையான மானிடத் தன்மையை வெளியிட்டாள். ''என் பிராண நாதரில்லாத சமயம் பார்த்துக் கொடிய அரக்கனால் கதறக் கதற நான் வலுவில் அபகரித்துவரப்

பட்டேன். இங்கு அரக்கிகளால் சூழப்பட்டு வேதனையுறுகிறேன் என்றால் இனி உயிர்தரிக்கமுடியாது எதற்காக நான் பிழைத்திருக்க வேண்டும்? என் நாயகரைவிட்டுப் பிரிந்து வாழவேண்டுவது எதற்கு? இந்தப் பிராணனால் இனி ஆகவேண்டியது என்ன? பதியைவிட்டுப் பிரிந்த பின் என் நெஞ்சு உடைந்து போகவில்லையே! என் மனம் கல்லா? எப்போதும் நிலையாய் உறுதிகொண்டு நின்றுவிட அது வரம் பெற்றுவிட்டதா? எவரும் அடையாத துக்கத்தில் மூழ்கியும் இன்னும் பிராணனைக் காப்பாற்றிக்கொண்டிருக்கிறேனே! என் பிழைப்பு ஒரு பிழைப்பா? கணவனைவிட்டுப் பிரிக்கப்பட்ட இல்லாள் உடனே மடிந்திருக்கவேண்டும்; அது எனக்குக் கிட்டவில்லையே! ஏன்? எனக்கு அவரிடம் பக்திக் குறைவு என்பதைச் சகியேன். அதைவிட இழிவான நிலையுண்டோ? ஆகையால் இயற்கை முடிவு கிடைக்காத போது செயற்கை முடிவைத் தேடுவேன். கடல் சூழ்ந்த இப்பூமண்டலத்தை ஒரு குடைக்கீழ் ஆளவல்ல பிரியவாதியான என் உயிருக்குயிரான என் நாயகனை ஸ்ரீராமச்சந்திர மூர்த்தியை விட்டு ஒரு நிமிஷமாவது உயிர் வாழ்வது முறையாமோ? இவ்வற்ப உடல் ஏன் அழியவில்லை? இவர்கள் அடித்துக் கொல்லட்டும்; தின்றுவிடட்டும். எப்படியாவது இத்துக்கநிலை கடந்துபோகட்டும். பர்த்தாவைவிட்டுப் பிரிந்த நான் இனி உயிர்வாழமுடியாது,'' என்று அடுக்கிக்கொண்டே போகிறாள வேதனையால் வாடி வதங்கும் வைதேகி.

இதைக் கண்ணுற்ற அரக்கிகள் இன்னும் அவள் அருகே அணுகுகிறார்கள். ''இவள் துக்கத்தின் எல்லையையடைந்துவிட்டாள்; மனமுடைந்து புலம்புகிறாள். இனி அவள், தன் பயத்தாலேயே நமக்கு இசைந்துவிடப்போகிறாள்'' என்று எண்ணினார்களோ என்னவோ? இவர்கள் எண்ணத்தை இவ்வளவு வருத்தத்திலும் மைதிலி கண்டுவிட்டாளோ? என்னவோ? இன்னும் அவர்களை நிமிர்ந்துபார்த்துச் சொல்லிக்கொண்டே போகிறாள் :—

''நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்? ஒரு நாளும் ஒரு பொழுதும் எக்காரணத்தாலும் இவ்வல்பத் திருடன் ராவணனை—அரசனும் அவன்; உங்கள் அரசன்—எனது இடது காலினாலும் அவனைத் தீண்ட இசையேன் என்பது உங்கள் கவனத்தில் இருக்கட்டும். குலம், கீர்த்தி, நற்பேறு ஆத்மநலன், தருமம் இவையொன்றையுமறியாக் கொடியவன் உங்கள் அரசன். அதனால்தான் என்னைப் பார்த்துத் தகாத வார்த்தைகள் சொன்னான். ஒன்றுமறியா மூடன். கொடுங்கோலன். இவன் தன் கொடுங்குணத்தால் என்னை வெட்டிப் பிளந்து சித்திரவதை செய்தாலும், நெருப்பிலிட்டு எரித்தாலும், எந்த இம்சையிலும் நான் அவனைக் கண்ணெடுத்தும் பாரேன். இதை நீங்கள் திண்ணமாய்க் கொள்ளலாம்; சொல்லலாம்'' என்று திடமாய் உரைத்துவிட்டாள்.

அரக்கிகள் இவளுடைய திடமான உறுதியையும், தங்கள் எண்ணம் ஒரு நாளும் நிறைவேறாதென்பதையும் கண்டு, ராவணன் தங்களைக் கொடுமையாய்த் தண்டிப்பானே என்று ஏங்கினர். மைதிலியைக் கவனிக்கிறார்கள். அவளோ, தன் கணவரான கோசலைச் செல்வனைப் பற்றி எண்ணமிட்டு வாய்விட்டுச் சொல்லிக்கொண்டே போகிறாள். ''ஸ்ரீ ராகவரைப்

போன்ற அறிவாளி உலகில் எவர் இருக்கின்றனர்? எல்லோருக்கும் நன்மை செய்யும் கருத்துடையவர். தோஷமுள்ளவரிடத்தும் குணத்தைக் காண்பவர். பிறர் துயரைத் தமதாகப் பாவித்து அதை உடனே போக்கடிப்பவர். அறநெறி வழுவா அருஞ்செல்வர். வீரதீரங்கள் வாய்ந்த பிரதாப சிம்மன். எனது பாவத்தின் பயனால் என்னிலையறியாதிருக்கிறார். இல்லையேல் இன்னும் என்னைத் துயருற விட்டிருப்பரா? பதினாலாயிரம் அரக்கரை வேரறுக்கவில்லையா ஜனஸ்தானத்தில்? இவ்வற்ப ராவணன் அவ்வீரச் சிங்கனுக்கு எம்மாத்திரம்? தண்டகவனத்தில் விராதனைக் கொன்ற கீர்த்திமான் இன்னும் ஏன் இங்கு வந்து என்னை ரக்ஷிக்கவில்லை? என் இருப்பிடத்தை அவர் அறியவில்லை என்று எண்ணுகிறேன். இல்லையேல் இங்கு ஒரு நொடிப் பொழுதில் விரைந்து வருவரே! இவ்விலங்கை கடல் சூழ்ந்திருப்பினும், பாதாளத்திருப்பினும், எங்கிருப்பினும், அக் கோதண்டபாணியின் பாணங்கள் தேடித் துளைத்துத் தகித்திருக்குமே! அத் தகைய சூராதி சூரர் இன்னும் இங்கு வரவில்லையே! ஐயோ! அவருக்கு நான் இங்கு காவலிலிடப்பட்டிருப்பதையும் என் கதியையும் சொல்பவரில்லையே! 'கொடிய அரக்கன் ஸீதையை அபகரித்துப் போகிறான்' என்ற செய்தி சொல்லும் கழுகரசனான ஜடாயுவையும் இப்பாவி கொன்று வீழ்த்தினனே. என் நிலையை என் நாதனுக்கு தெரிவிப்பவர் எவர் இருக்கின்றனர்? நான் இங்கிருப்பதை அறிந்தாரானால், அதே நிமிஷத்தில் அவர் கோபத்தில் சீறி எழும் அம்புகள் பறந்து வந்து அரக்க இனத்தைப் பூண்டோடு ஒழித்துக் கட்டுமே! கடலை வற்றடித்து இலங்கையை இடித்துத் தள்ளி ராவணனின் நெஞ்சைப் பிளந்து அவன் உயிரையும் பெயரையும் அவை உறிஞ்சிவிடுமே! ஆஹா! அக்காலம் வருமா? நான் அழுது புலம்புவது போல் இவ்விலங்கையின் ஒவ்வொரு வீட்டிலும் அரக்கிகள் ஓலமிட்டு ஒப்பாரி வைக்கும் காலமும் வருமா? வரத்தான் போகின்றது. சந்தேகமில்லை. என் உயிர்த் தோழருக்கு முடியாததென்பது ஒன்றுண்டோ? தம்பி லக்ஷ்மணனுடன் இங்குக் கட்டாயம் வரத்தான் போகிறார். பின்பு அரக்கர்கள் வேரோடு மாய்வார்கள்; இலங்கை அழியும்; எங்கும் நிர்மூலம். கழுகுக் கூட்டங்கள் அரக்கச் சடலங்களைத் தெருத்தெரு வாய்க் கொத்திக் கிளறிப் பிண இறைச்சிகளை நிரப்பப் போகின்றன. ஆகவே, அரக்கிகளே ஜாக்கிரதை, இதோ உங்களுக்கு ஸ்ரீராம அபசாரமென்னும் பேராபத்து கிட்டியிருக்கிறது, அதன் அறிகுறிகளைக் கண்முன் காண்கிறேன். உங்கள் தேசத்தைவிட்டுத் தருமதேவதை அகன்றுவிட்டாள். திருவிழந்த இந்நகரம் சோபையற்று மங்கிக் கிடக்கிறது. அதன் கணவனிழந்த கைம்பெண் போல் மங்கலமற்றுக் காணப்படுகிறது, ராவணன் முதல் கடைசி அரக்கன் வரை யுத்தப் படுகளத்தில் மாண்டு போய் இவ்விலங்கை அலங்கோலமாய்த் தரையோடு தரையாய் போவதைக் காணப் போகிறீர்கள். ஒளி குலைந்து இருளெழுந்து ராம பாணக்கினியால் சாம்பலாக விருக்கிறது. இவ்விலங்கைத் தீவு. பாவத்தின் பயனைக் காணுங்கள்!'' என்று எதிர் காலத்தில் நடக்கப் போவதை மனக் கண்ணால் முன் பார்க்கும் மெய்ஞ் ஞானியின் கம்பீரக் குரலில் லங்கையின் அழிவை அவர்கள்முன் படம் பிடித்துக் காட்டினாள் வைதேகி. அரக்கிகள் இச்சொற்களைக் கேட்டு கலவரமடைந்தனர். சிலர் சினங்கொண்டு சீறியெழுந்து ஸீதையிடம்சென்றனர். இதைக் கண்டு உடல் நடுங்கினாள் ஜானகி.

மீண்டும் கவலை கொண்டு கணவரை நினைந்துருகினள். ஐயோ! அவர் ஏன் இன்னும் வரவில்லை? என்னை உயிருடன் இருப்பவளாக அவர் எண்ணவில்லையா? எண்ணினால் என்னைத் தேடி மீட்கத் தாமதமேன்? ஒருவேளை என் பிரிவைத் தாங்காது உயிர் விட்டனரோ? அப்படியானால் விண்ணுலகிலுள்ள தேவ கந்தர்வர்கள் அச்சுந்தர புருஷரைக் காண என்ன பாக்கியம் பெற்றிருக்கிறார்கள்? அப்படியானால் என்னை விட்டுப் போவரோ? — ஆனால் என்னால் அவருக்கு ஆக வேண்டியது என்ன? சிறந்த புத்திமான்; தரும மூர்த்தி; மானிடர்களின் ராஜரிஷி; பரமாத்ம ஸ்வரூபி; அம்மகாத்மா எங்கே? நானெங்கே? ஐயோ! ஏன் இன்னும் அவர் வந்து என்னை மீட்கவில்லை? என்ன செய்வேன்! மாயஞ் செய்து மறைந்து இக்கொடிய அரக்கன் அவர்களை ஏமாற்றி மாய்த்து விட்டானோ? ஹா! என்ன விபரீதம்! என்னவாயினும் அவரைக் காணாது இனி உயிர் தரியேன் இதோ இவ்வற்ப வாழ்விற்கு முடிவு தேடுவேன்'' என்று திடங்கொண்டவள் போல் கதி கலங்கினாள் கமலலோசனி.

— —

## 27. திரிஜடையின் எச்சரிக்கை

மைதிலியின் மனோபாவத்தைக் கண்ட அரக்கிகள் செய்வதறியாது திகைத்துப் போயினர். மானிட சுபாவம் இத்தன்மையதென்பதை அரக்கர்களால் அறிய முடியாது என்று கண்டார்களோ என்னவோ சிலர் ராவணனிடம் ஸீதா பிராட்டியின் தீர்மானத்தைத் தெரிவிக்க விரைந்தோடினர். இன்னுஞ் சிலர் அவளைச் சூழ்ந்துகொண்டு மிக்க பயங்கரமாய் வெருட்டி அதட்டினர். சிலர் அவளை ''ஏன் மதி கெட்டுப் பாவச் செயல் புரிய நினைக்கிறாய்?'' என்று இயற்கை அறிவை நினைப்பூட்டினர்.

சிலர் மிக்க ஆத்திரத்தோடு அதட்டுவதைக் கேட்டாள் அப்பொழுது தான் துயிலெழுந்த திரிஜடை எனும் அரக்கி. உடனே நன்றாக விழித்துக் கொண்டு ''அடி பாவிகளே! என்னை வேண்டுமானால் கொன்று தின்னுங்கள் அல்லது உங்களையே தின்னுங்கள். ஜனகரின் பெண்ணும், தசரதரின் மருமகளுமான வைதேகியை மாத்திரம் தொடாதீர்கள். அவளை யாரென்று நினைக்கிறீர்கள்? நமக்கும், எல்லோர்க்கும், எல்லா உலகுக்குமே தஞ்சமளித்துக் காத்தருளும் திவ்வியத் திருமகள் என்று அறியுங்கள். காரணம் சொல்லுகிறேன் கேளுங்கள். அரக்கர்களின் நாசத்தின் பொருட்டும், இந்த ஸீதையின் நன்மையின் பொருட்டும், மயிர்க் கூச்செறியும்படியான ஓர் அற்புதமான கனவு ஒன்று இப்போதுதான் கண்டேன். அதை உங்களுக்கு உணர்த்துகிறேன்; கேளுங்கள்'' என்றாள்.

இவ்வுரையைக் கேட்ட அரக்கிகள் அனைவரும் கதிகலங்கிப் போயினர். திரிஜடை என்பாள் தங்களுள் தலைமை தாங்கியவள். அவளே இவ்விதமுரைத்தால் அக்கனவு உண்மையாகுமோவென்று பயந்து, அவள் கண்ட கனவைச் சொல்லவேண்டுமென்று திரிஜடையைக் கேட்டுக்கொண்டார்கள். அவளும் சொல்ல வாரம்பித்தாள்.

"சொல்லுகிறேன்; கேளுங்கள். பின்பு அதன் உண்மையை அறிவீர்கள். இடையில் வெண் பட்டும், கழுத்தில் பூமாலையும் பூண்டு ஒரு திவ்வியமான சுந்தர புருஷோத்தமரைக் கண்டேன். அவர் தான் ஸ்ரீ ராகவன்; இவ்வம்மணியின் பதி. தந்தத்தால் செதுக்கப்பட்டு, அனேக அன்னங்களால் தாங்கப் பெற்று, ஆகாசத்தில் செல்லும் திவ்வியமான ஒரு சிவிகையில் தம்பிலட்சுமணருடன் அமர்ந்திருந்து காட்சியளித்தார் அவர். அதில் இந்த ஸீதையும் வெண் பட்டுடுத்தி, கடல் சூழ்ந்த வெள்ளிமலையில் அமர்ந்து சூரியனோடு பிரபை சேர்வது போல் ஸ்ரீராமருடன் சேர்ந்துகொண்டாள். பின்பு நான்கு தந்தங்களையுடைய மலையை யொத்த மகா கஜத்தின் மேல் ராமரும் லட்சுமணரும் அமர்ந்திருக்கக் கண்டேன். சுய காந்தி ஒளி வீச, ராம லட்சுமணர்களிருவரும் யானை மீதிருந்த வண்ணம் ஜானகி யிருக்கும் பர்வதத்தை அடைந்தார்கள் பிறகு அவ்வெண் மலையின் நுனியில் ராமனால் பிடிக்கப்பட்டு ஆகாயத்தில் நிற்கும் யானையின் கழுத்தின் மீது ஏறினாள் இக் கமலலோசனி. பின்னர் அவள் பர்த்தாவின் மடியிலிருந்து எழுந்து ஓடி வந்து சந்திரனையும் சூரியனையும் கையால் வருடினாள். அதி சீக்கிரத்திலேயே ராம லட்சுமணர்கள் ஸீதையுடன் யானை மீது வீற்றிருக்க, அந்தச் சிறந்த யானை இலங்கைக்கு நேரே ஆகாயத்தில் வந்து நின்றது. பின்பு அவர்கள் சுத்த வெண்ணிறமான எட்டு எருதுகள் பூட்டிய ஒரு ரதத்தின் மீதேறித் தாங்களாகவே இங்கு வந்தனர். பின்பு, இச்சராசரங்களும் மூவுலகும் அண்டங்கள் முற்றும் எதையும் அனாயாசமாய்ச் செய்து முடிக்கும் மகாப்பிரபு ராமனால் விழுங்கப் பட்டதை என் கண் கொண்டு பார்த்தேன். அப்பொழுது பாற்கடல் நடுவே வெண்மையான ஒரு மலை வெளிக் கிளம்பிற்று. அதன் சிகரத்தில் தோன்றிற்று நான்கு தந்தங்களையுடைய ஒரு வெண்யானை. அதன் முதுகில் அரசு புரியும் கம்பீரத்தில் தம்பியுடனும், மனைவியுடனும் ராமன் வீற்றிருந்தார். அப்பொழுது ஸீதாதேவி அங்கிருந்து எழும்பி, சம்பூர்ண சந்திரமண்டலத்தைக் கைகளால் பற்றி விட்டுப் பர்த்தாவின் மடியில் வந்து அமர்ந்துகொண்டாள்.

இதற்குப் பின்பு தான் வெகு நேர்த்தியான காட்சி. கண்ணைப் பறிக்கும் திவ்ய காந்தியுடன் திகழும் அற்புதமான மணிகளிழைத்த சிறந்ததொரு சிம்மாசனம். சூரிய கிரணங்கள் போல் கண்ணைப்பறிக்கும் பேரொளி. அகில ஜகத்துக்கும் அழகளிக்கும் பேரழகரான அயோத்தி மன்னன் முதற் செல்வன், கமலக் கண்ணன், ஸ்ரீ ராகவர் அதில் கிழக்கு முகமாகக் கம்பீரமாய் அமர்ந்து வண்மை மிக்க வரமளிப்பவராகத் தரிசனமளித்தார். பின்னர் தவப் பெரியார்கள் ரிஷித் தலைவர்கள், முனிவர்கள், முதலானோர் பொற் குடங்களில் புண்ணிய தீர்த்தங்களைத் தாங்கி வந்தனர். வேதமோதினர். இக் கோஷம் ஒரு தனிப் பெருமை வாய்ந்து விளங்கிற்று. இப்புனிதப் படலத்தை கேடடோர் மெய்ம்மறந்து தரையை விட்டு வெகு தூரம் வானெழுந்து பவனி வரும பேரானந்தத்தை யடைந்தனர். அம் முனிவர்கள் மந்திரத்தை உச்சரித்த வண்ணம் அத்தீர்த்தங்களைக் கொண்டு ஸ்ரீ ரகுநாதருக்கு அபிஷேகம் செய்தனர். ஆகா! எவ்வளவு அரும் பெருந் தவஞ் செய்து தரிசிக்கவல்ல பேரின்பக் காட்சி இது! எல்லோரும் அச் சிங்காதனத்தில் சிங்க வேறு போல் பொலியும் அச்சுந்தரமூர்த்தியை மிகவும் பயபக்தியோடு பணிந்தனர். அப்பொழுது துடி போன்று தனி அழகு பெற்று விளங்கும் இடையையுடைய நம் மாது சிரோமணி ஸீதாதேவி வெண் பட்டாடையணிந்து, வெண்மாலை சூடி, வெண்சாந்தணிந்து, சர்

வாலங்காரங்களோடு அவர் அருகிலமர்ந்து சொலற்கரிய சோபையுடன் துலங்கினள். என்ன நறுமணம் கமழும் மெல்லிய மலர் வரிசைகள்! திவ்வியமான காற்றோட்டம்! இவ்வம்மையார் அமர்ந்தவுடன் பிரம்ம தேவரை முன்னிட்டுத் தேவர்களும் கந்தர்வர்களும் மகரிஷிகளும் சித்தர்களும் அத்திவ்ய தம்பதிகளை யணுகி அடிபணிந்து வணங்கினர். எத்தகைய புனிதக் காட்சி தெரியுமா? அந்த இடத்தில் உண்மைச் சாந்தி நிலவிற்று. எல்லோரும் தங்களை மறந்து அச்சாந்திரஸத்தில் திளைத்தனர். ஸாக்ஷாத் வைகுண்ட நாதனும், ஸர்வலோக ஜகத்ரக்ஷகனும், பரமகாருணிகனும், ஸர்வேச்வரனுமான ஸ்ரீ மந்நாராயணனே அமர்ந்திருப்பதாக உணர்ந்து அப்படியே ஓர் புனித உணர்ச்சியில் ஈடுபட்டு நின்றுவிட்டனர் எல்லோரும்.

அவரே பரப் பிரம்மம்; அவரே பரதத்வம்; அவரே பரம ஞானம்; அவரே தவமும், தவத்தின் பயனும் சக்தியும்; அவரே பிரும்மாண்டங்களின் பரம வித்து; அவரே கடைசியில ஜீவன் அடைய வேண்டிய பெரு வீடு; புகலிடம்; செயலிடம்; பிறப் பிறப்புப் பிணியற்ற ஓய்விடம்; ஜீவராசிகள் பக்திபரவசத்தால் நாடித் தேடிப் பெரும்பாடு பட்டுக் கடைத்தேறி வந்தடையும் திவ்வியக்ஷேத்திரம்; அவரை ஆதி அந்தமிலா முதல் காரணப் பொருள்; அவரே முடிவும், மூலப் பொருளுமாவர்; சங்கு சக்ர கதாபாணியாய்த் திகழ்பவர் திருமகளை மார்பில் தரித்தவர். தாமரை இதழ்போல் நீண்டகன்ற திருக்கண்களுற்று. ஸ்ரீ வத்ஸம் என்னும் மறுவை மார்பிற் கொண்டு எப்பொழுதும் மங்களம் பொங்கும் சுயம் பிரகாசத்தில் நிலையாய்த் தன்னையடைந்த ஜீவனுக்கு வாழ்க்கையில் நம்பிக்கை யளிக்கும் ஸ்ரீ மகாவிஷ்ணுவாய் மகா தேஜஸ்வியாய் அளவிறந்த கல்யாண குணங்கள் நிறைந்த இன்பனாய், அன்பனாய், ஸ்ரீமானாய், திருப் பொலிந்த தன்மையனாய், சர்வலோக நாதனாய், வரையறையற்ற வள்ளலாய், புன்முறுவல் பூத்துக் கருணை கடாக்ஷத்தால் ஜீவராசிகளைப் பரிந்தழைப்பவனாய், இச் சுந்தரவடிவன், ரகுநந்தனன், இச்சீமந்தினியின் பதி, ஸீதாபதி, தெவிட்டாத தெள்ளமுதன திவ்விய தரிசனம் தந்தருளினர். ஆகா! என் பாக்கியமே பாக்கியம்; கனவானாலென்ன? நனவானாலென்ன? என் மனக் கண்ணே வரைந்து பதிந்த இப் பேரின்பச் சித்திரம் என்றென்றும் பொலிவுடன் காட்சியளித்து விளங்கப் போகிறது!

பின்பு, அமரேந்திரர்களும், பித்ருக்களும், முனீந்திரர்களும், கந்தர்வ, வித்யாதர பன்னகேந்திரர்களும் அபிஷேகிக்கப்பட்ட ஸ்ரீ ராமனைச் சூழ்ந்துகொண்டு பரமானந்தமடைந்து அஞ்சலிசெய்து துதி செய்தனர். அப்ஸரஸ்ஸுகளும் கலைத் தேவிகளும இசை வாணிகளும் பாடினர். ஆடினர்; இறைவன் வழிபாட்டில் ஒன்றுகூடினர். வேய்ங்குழல், வீணை, முரசம், பேரிகை, சங்கம் முதலிய வாத்தியங்கள் முழங்கின.

இவை தவிர, இன்னோரிடத்தில் இச்சுந்தர மூர்த்தியைக் கண்டேன். சத்திய பராக்கிரமனன புருஷோத்தமன், தம்பி லட்சுமணனுடனும், மனைவியுடனும், சூரியகாந்திபோல் ஜொலிக்கும் திவவியமானதொரு புஷ்பக விமானத்தில் ஏறிக்கொண்டு வடதிசையை நோக்கி எழுந்தருளினர்.

இக் கனவில் என் மனத்தகத்தே எழுந்த புனித காட்சி இது ஆஹா! இவரிடமன்றோ நம் அரக்கமன்னன் அபராதஞ் செய்திருக்கிறன்?

இவரால் அவன் அழிவது நிச்சயம். பாவிகள் சுவர்க்கத்தை எவ்வண்ணம் எப்பொழுதும் அடைய முடியாதோ அவ்வண்ணமே தேவர்களாலும் மனிதர்களாலும ராட்சதர்களாலும் இத்தேஜோவானுன புருஷோத்தமனை வெல்லமுடியாது.

இவ்வற்புதக் காட்சியை யடுத்து மற்றெரு கோரமான காட்சியையும் கண்டேன். அது ராவணனுடையதும் நம்முடையவும் முடிவுக் காட்சி. கதி கலங்கும் கோரக் காட்சி. அதைச் சொல்கிறேன் கேளுங்கள். கேட்டு உடனே புகலிடம் தேடிக்கொள்ளுங்கள். இராட்சதத் தன்மையை விட்டொழியுங்கள். நலனடையுங்கள். ஒரு மொட்டைத் தலை. எண்ணெய் வழிந்தோடும் பேருருவம். அதுதான் ராவண உருவம். ரத்தவர்ண வஸ்திரம்; அலரிப் பூமாலைக் கழுத்து. மதுவுண்டு மதிமயங்கிக் கூத்தாடுகிறான். தடாரென்று புஷ்பக விமானத்திலிருந்து வீழ்த்தப்படுகிறான். உடனே இரத்த ஆடை கறுப்பு வர்ண மடைந்தது. ஒரு பெண் அவனைக் கர கர வென்று இழுத்துக் கொண்டு போகிறாள். கழுதைபூட்டிய ரதத்திலேறித் தெற்கில் விரைகிறான் அவன். சிறிது தூரம் சென்றதும் அகலமான ஒரு சேற்றுக் களம். அதில் தலைகுனிந்து வீழ்ந்து மூழ்கி மறைகிறான். அங்கு ஒரு கரியவள், சேறு பூச்சுடையவளாய் இரத்தாடை யுடுத்திக் கொண்டு, தசகண்டனின் கழுத்தைப் பிடித்து தெற்கில் இழுத்துச் செல்கிறாள். இத்திசையில் போகும போது எண்ணெயைக் குடிக்கிறான். வெறி பிடித்து நகைக்கிறான். கூத்தாடுகிறான். மதி மயங்கி, பொறி கலங்கி, ஒரு கழுதை மேலேறிக் கொண்டு தென் திக்கில் விரைகிறான். இன்னும் கொஞ்ச நேரம்! கழுதையினின்று தடுமாறி, பயந்து, அறிவிழந்து தலை கீழாகக் கீழே விழுகிறான். மறு படியும் எழுகிறான்; கட்குடித்து, வெறி பிடித்து நிர்வாணமாய்ப் பிதற்றிக்கொண்டு பேய்க்கோலங் கொள்கிறான். துர்க்கந்தம் நிறைந்து இருள் மூடி நரகத்தை நிகர்த்த கோரமான மலச் சேற்றில் நுழைந்து மறைகிறான்! கும்பகர்ணனும் இவ்வாறே காணப்பட்டான். ராவணனுடைய எல்லாப் பிள்ளைகளும் மொட்டையடித்துக் கொண்டு எண்ணெய்க் கடாரத்தில் போடப்பட்டவர்களாய்க் கண்டேன். பன்றியின் மீது அரக்கவரசனும், முதலையின் மேல் இந்திரஜித்தும், ஒட்டகையின் மேல் கும்பகர்ணனும் தெற்கு நோக்கி விரைந்து சென்றனர். விபீஷணர் மாத்திரம் வெண்குடையின் கீழ் வெண்மாலை அணிந்து, வெண்சந்தனம் பூசி, சங்கம், துந்துபி ஒலிக்க, ஆடல், பாடல், புடைசூழ விளங்கினர். அவ் விபீஷணர் நான்கு மந்திரிகளோடு நான்கு தந்தங் கொண்ட மேகத்தை யொத்த யானையின் மீதேறி ஸ்ரீ ராகவனை யடையக் கணடேன்! அரக்கர்கள் எண்ணெயையும கள்ளையும் குடித்து ரத்த வர்ணமான மாலை ஆடைகளுடன் களியாட்டத்திலிருந்தார்கள், அப்பொழுது திடீரென்று கோபுரங்களுடைந்தன; தோரணங்கள் அறுந்தன; வீடுகள் விழுந்தன; மதில்கள் சாய்ந்தன; எல்லாம கடலில மூழ்கி மறைந்தன. இந்த லங்காநகரம் முழுவதும் பரவிச் சூழும் தீப்புயலில எரிக்கப்பட்டது. ஸ்ரீ ராமதூதனுன ஓர் வீரக் குரங்கு நகரெங்கும் தீ யிட்டதைக் கண்டேன்! அரக்கிகள் கட்குடித்துக் கூத்தாடி ஆரவாரித்துச் சாம்பலாய்க் கொண்டிருந்த லங்கையை விடுத்துக் கறுப்பாடையுடுத்திச் சாணிக் குழியில் குதித்தார்கள். கோரமான கூச்சல் இன்னும் ஒலித்துக் கொண்டிருக்கிறது! ஐயோ! என்ன கதி இது! இதோ ஸ்ரீ ராகவன் லங்கையை அழிக்கப்போகிறார். ஸீதையை மீட்கப்போகிறார்; இதைக் காணப்போகிறீர்கள். எங்காவது ஓடி ஒளியுங்கள்! ராம கோபம

பொல்லாதது! ஆகையால் இத் தேவியின் திருவடிகளில் தஞ்சமென்றடையுங்கள்; போற்றிப் பணியுங்கள்; உங்கள் கண்ணீரால் அவள் பொற்பாதத்தை நனையுங்கள்; சீக்கிரத்திலேயே இவள் தன் பர்த்தாவை அடையப் போகிறாள். அடி பணிந்து அபயம் தரும்படி அவளை வேண்டுங்கள். பேராபத்து நெருங்கி விட்டது! இவள் தான் நம்மைக் காக்கும் கருணையங் கடவுள். இதோ! அவளது இடது கண் துடிக்கிறதைக் கவனியுங்கள். அது அவள் நன்மைக்கு அறி குறி. இடது தோள் துடிக்கிறதைப் பாருங்கள்! யானை துதிக்கையை யொத்த அவள் துடையும் அப்படியே! இதோ பக்ஷிகள் களிகொண்டு கூவுவதைக் கேளுங்கள்! அவை ஸ்ரீ ராகவருக்கு நல்வரவு கூறுகின்றன. உடனே அன்னையை அடி பணியுங்கள்'' என்றாள்.

---

## 28. அரக்கியின் பாக்கியம்

திரிஜடையின் சொப்பனத்தின் விரிவுரை, கேட்போரை பிரமிக்க வைத்தது. அரக்கிகள் கதி கலங்கினார்கள். ஐயோ! விடியுங் காலையில் கண்ட கனவு பலிக்குமென்பார்களே. கொடிய ஆபத்தைக் காட்டும் இக் கனவில் உணர்ச்சி ஒழிய மறுபடியும் தூங்கி விடுவது அதற்கு மாற்றாகுமென்றும் சொல்வார்கள். ஆகையால் இவ்வுணர்ச்சி கொண்டு உள்ளம் பதறுவதை விட்டு உடனே நித்திரை செய்துவிடுவது நலமென்று ஒருவர்க்கொருவர் யோசனை கூறினார்களோ என்னவோ எல்லோரும் மறுபடியும் உறங்கத் தலைப்பட்டார்கள்.

நடந்தது ஒவ்வொன்றையும் கூர்ந்து கவனித்தான் மரக் கிளையில் மறைந்திருந்த மாருதி. அன்னையைக் கண்டு விட்டதில் பேரானந்தம் கொண்டானெனினும் அவள் படும் துக்கம் இவனால் தாங்க முடியவில்லை. மனங் கலங்குகிறான். அவளைத் தேற்ற வேண்டுமென்று ஆவல் கொள்கிறான். இதை எவ்வாறு செய்வதென்று யோசிக்கிறான்.

[இன்னும் அவன் மனம் திரிஜடை கூறிய கனவுக் காட்சியிலேயே தயங்கி நின்றது. ஆஹா! இவள் கண்ட கனவுதான் என்னே! இவள் பாக்கியமே பாக்கியம். இந்த அரக்க ஜன்மத்தில் தன் மனக்கண்ணால் ராம லட்சுமணர்களைக் கண்ட மகிமை இவளுடையதல்லவா? இறைவன் அருள், எவ்வாறு, எவ்விடத்தில், எக்காரணமாக, சுரந்தோடுமென்று யார் சொல்ல முடியும்? கேவலம் ஒரு அரக்கி இவள்! ஸீதையின் சிறைக் காப்புச் சேவையில் ராவணனால் நியமிக்கப் பட்டவள். எனினும், முதலிலிருந்தே மெய் மறந்து உறங்கிக் கிடந்தாள் போலும். ஜானகியை அதட்டி மிரட்டி அல்லலுறச் செய்த கோர அரக்கிகளில் இவள் சேராதவள். ஸீதையினிடத்தில் இது காறும் ஒரு அப்பிரியமான சொல்லையும் உரைக்காதவள். பலன் கைமேல் கிடைக்கிறது. சொப்பனத்தின் மூலம் தெய்வக் கடாக்ஷம் பெறுகிறாள்!'' ராமத் தியானஞ் செய்து கொண்டு ஆஞ்ஜநேயன் அன்னையைத் தேடினான். உடனே லோக மாதாவான ஜனக நந்தினியைக் கண்ணுறுகிறான். இவள்தானோவென்று சற்றுத் தயங்குகிறான். உடனே அரக்கவரசன் காம பரமசனாய் அன்னையிடம் வந்து அருவருப்பான அதருமச் சொற்களைப் பேசுவதைக் கேட்கிறான். ஆஞ்ஜநேயன் ஆவி துடிக்கிறது! மிதிலைச்

செல்வியும் மனமுடைந்து மதி கலங்கிக் கதறுகிருள்; இதைக் காண ஹநுமானின் மனம் இன்னும் அதிகமாகத் துடிக்கின்றது. ஐயோ! என் செய்வேன்? இப்படி அன்னை துயருறும் போது நான் ஒன்றுஞ் செய்யாது மறைந்து பார்த்து நிற்பதாவென்று அடங்கா ஆத்திரங் கொள்கிருன். நெஞ்சம் துடித்து ஒன்றும் செய்ய முடியாத நிலையில் ஐயனை நினைக்கிருன்; ராம தியானத்தை அவன் வாய் தானகவே முணு முணுக்கிறது. இந்த அக்கிரமம் நடந்தேறுவதாவென்று துடி துடித்து, 'ஐயோ! என் செய்வேன்! என்று ஏங்கியிருக்கையில், ஆபத்தில் அருள்புரியும் அநாத ரட்சகன் நேரில் காட்சியளிப்பதாகத் திரிஜடையின் ஆயுரை வந்துதவுகின்றது! ஆஹா! இந்த ராமப் பிரபாவத்தின் மகிமைதான் என்னே! இதை உலகில் உள்ளபடி அறிவார்களுமுண்டோ, வென்று மனத்தில் வியப்பு கொந்தளிக்கிறது.]

மரத்தின் மேலிருந்த மாருதியின் மன வோட்டங்கள் இவ்வாறிருக்க, அம்மரத்தடியிலிருந்த வைதேகியின் நிலை இன்னெரு போக்கில் பெருக்கெடுக்கிறது. அரக்கி திரிஜடையின் கனவைக் கேட்டாள் "அப்பா! எத்தகைய காதிற்கினிய அன்பு விருந்து! உள்ளத்துக்கும் உடலுக்கும் என்ன உற்சாக உணர்ச்சி! ஆஹா! எவ்வளவோ கடும் தவங்கிடந்து தவிக்கும் எனக்கு இந்தத் திரிஜடையின் சொப்பன பாக்கியம் கூடக் கிடைக்கவில்லையே! எனினும் அக்கனவின் பேரின்பக் காட்சியைக் கேட்டுக் கேட்டு பாலைவனத்தில் கதிரவன் வெம்மை தாங்காது, உடல் சோர்ந்து, கண் சுழன்று கால் தளர்ந்து, மனமுடைந்து, 'தாகம்' 'தாகம்' மென்று தவித்துத் துடிக்கும் ஒருவனுக்குத் திடீரென்று வானம் பொழிந்து தன் கையார, வயிருர நீர் பருகித் தாகம் தீர்ந்தால் எத்தகைய ஆறுதலடைவனே, அத்தகைய ஆறுதலடைந்தாள் அன்னை ஜானகி திரிஜடையின் கனவைக்கேட்ட போது! உடனே அவள் மனமும் ஆவியும் ஐயனிடஞ் சொல்கின்றன. அரக்கியின் மனக் கண்ணில் தோற்றங் கொடுத்த அரும் பெரும் காட்சியைத் தானும் கண்டு களிக்கத் துடித்தது அவள் பேராவல்!

நாயகனை நினைக்கிருள்! "ஹா! நாதா! எங்கிருக்கிறீர்கள்? என் விஷயத்தில் ஏன் இன்னும் தாமதம்? ராமா! எங்கே போனீர்கள்? வாருங்கள் வாருங்கள்!" என்று வாய் விட்டுக் கதறினள் நாயகனைக் காணத் துடி துடிக்கும் வைதேகி.

ஒன்றும் சப்தமில்லை. அரக்கிகள் மௌனமாயினர். மைதிலி தன்னந்தனியாகயிருந்து கவனிக்கிருள். நாதன் வருகிருனு? இக்கனவு நனவுதானுவென்று அங்குமிங்கும் அவள் கண்கள் தேடித் தளர்ந்தன. ராமனையும் காணேம்; லட்சுமணனையுங் காணேம், நற்சகுனமென்ருர்கள். அருமையான சொப்பனமென்ருர்கள். எங்கே பலன்? என் நாதன் எங்கே? என்று உள்ளம் பதறித் திணறுகிருள். புத்தூக்கம் ஆத்திரங் கொண்டு அவளை அதிதூரம் இழுத்துச் சென்றது. கதறுகிருள்! கலங்குகிருள்! நாதா! நாதா! எங்குள்ளீர்களென்று ஆவி துடிக்கிருள். கண்ணின் வெள்ளப் பெருக்கு மடைதிறந்து மீறிப் பாய்கிறது! பதியைக் காணவில்லை. அரக்கிகளையே காண்கிருள். ராவணன் கடுஞ்சொற்கள் நினைப்பிற்கு வருகின்றன. சிங்கத்தினிடம் சிக்குண்ட யானைப்பேடு போல் மீட்சி காணுது நடு நடுங்குகிருள். அரக்கிகள் யாரும் இவளைக் கவனித்தாரில்லை

(சொப்பனத்தின் பயத்தைப் போக்கடிக்கத் திரும்பவும் உறங்குகிறார்கள் போலும் !) தனியே நின்று தவிக்கிறாள். விடியுமுன் இருட்டு ! பயங்கர மான சூழ்நிலை. ஐயோ ! என் பதியில்லையே ! என் நாதனெங்கே வென்று திகிலடைந்து மனமுடைகிறாள் ! சாமானிய மானிடத் தன்மையை வெளி யிடுகிறாள். (நம்மிடத்தில் சேர்ந்து கொள்கிறாள். நாம் அறியாமலே அவள் துக்கத்தைக் கண்டு நம் மனமும் கலங்குகிறது !) "மானிட வாழ்க் கையில் பிறப்பும் இறப்பும் விதிப்படியே" என்பார்கள் பெரியோர்கள். அது கொஞ்சமேனும் பொய்யாகுமோ ? யான் துக்கக் கடலில் ஆழ்ந்து மூழ்கி யும் புண்ணியமென்ற பாக்கியம் அறவே அற்றுப்போயும், இன்னும் என் உயிர் போகவில்லையே !சுகமழிந்து துக்கமடைந்த என் மனம் கல்லாய்த் தேங்கிவிட்டது. என் ராகவனைப் பார்க்கக் கிடைக்கவில்லை. ஒவ்வொரு நாளும் ஏமாற்றமே! என் ஆத்திரத்தின் கொதிப்பு இனி ஜீவித்திருப்பதில் என்ன பயன் என்று இடித்துக்காட்டுகிறது. ஆகவே இறப்பது நலம். நாத ரைக் காணாது உயிர்துடிக்கிறேன். இன்னும் ஏன் இருக்கவேண்டும் ? தவணை கழிந்ததும் அரக்கன் என்னை வெட்டிச் சமைத்துவிடுவான், அது வரைக் காத்துக் காத்து ஒவ்வொரு நாளும் ஒரு யுகமாகத் தவித்துத் துடித்து மரண தண்டனை விதிக்கப்பட்ட ஒரு கைதி தன் முடிவு தினத்தை எண்ணி எண்ணித் துன்புறுவது போல் வேதனையுடன் இருக்க வேண்டுமா ?

"ஹா! ராம! ஹா! லட்சுமணா! ஹா! சுமித்திரையே? நான் கொடிய நரக வேதனையில் சிக்குண்டு துன்புறுவது உங்களுக்குத் தெரிய வில்லையா? எனக்கு எமன் ரூபமாகவல்லவா அந்தப் பொய் மான் வந்து தோன்றிற்று. என் ஆசையை நிறை வேற்றவல்லவா என் நாயகரைப் பிரிந்தேன். பின் அறிவிலியாகிய நான் லட்சுமணரையும் வைது வெளியே துரத்தி விட்டேன் !

[இங்குத்தான் லட்சுமணனுக்குச் செய்த அபராதத்தை ஸீதை உணர்ந்து பரிதபிக்கிறாள். தான் புத்தி யிழந்தவளாக லட்சுமணனை அனுப்பி விட்டதை நினைத்து வருந்துகிறாள். ஆகையால், தான் செய்தது மகத்தான தப்பிதமென்று உணரவில்லை என்று சொல்ல முடியுமா ?]

"ஹா ராம! ஸத்திய விரத! ஆஜானுபாகுவே! பூர்ண சந்திர வதன முடையவரே! எல்லா ஜீவராசிகளின் நலனைக்கோரி அவைகளின் இன் னல்களை அகற்றுகிற நீங்கள் என்னை ராட்சதர் கையில் சிக்கவிட்டீர்களா? ஐயனே! என் அவஸ்தையை அறிந்திலீரோ? உங்களை யன்றி எனக்கு வேறு தெய்வமேது? உங்கள் வாழ்வே என் உயிராய்க் கொண்ட என் பதி பக்தி வீணாவதா ? சுவாமி ! உங்களை இனிக் காணப்போவதில்லை. என் தருமம் வீணே, என் கற்பு வீணே ! இதினின்றும் ஒரு மீட்சியும் காண்கி லேன். நீங்கள் தந்தை வாக்கைப் பூர்த்திசெய்து விரதம் முடித்துக் களை தீர்ந்து மீண்டும் அயோத்தியடைந்து களிப்புறப் போகிறீர்கள். ஐயோ ! என் கதியைக் கவனிக்கவில்லையே ! நீங்கள் என்னிடம் வரப்போவ தில்லையா? உங்கள் சுந்தரவதனத்தைக் காட்டிப் புன்முறுவலுடன் என்னை மீட்கப்போகிறீர்களா, இல்லையா ? ஐயனே ! இதுவரை துடித்துத் தவித்து ஏமாற்றத்தில் இதோ என் உயிரை விடப்போகிறேன். என்றால் இனி இத்துயரம் தாங்கமுடியாது ! விஷத்தாலோ, ஆயுதத்தாலோ நான் உயிர் துறக்கலாம். ஐயோ ! நானிருக்கும் இவ்விடத்தில் விஷம் கொடுப்பவனோ

ஆயுதங்கொடுப்பவனே ஒருவனையும் காணவில்லையே; இதுவும் என் துர்ப் பாக்கியந்தான். என்ன செய்வேன் !'' என்று பலவாறு புலம்பிப் பரிதபித் தாள்.

ஜானகியின் சோகம் நெஞ்சடைத்தது. எவ்வகையேனும் உயிரை மாய்த்துக்கொள்ள வேண்டியதுதான் என்று தீர்மானங்கொண்டாள். எழுந்தாள். கண்களில் நீர்ப் பெருக்கு வெள்ளமெடுக்கிறது. கணவனை நினைந்து நினைந்து ஐயோ அவர் இன்னும் வரவில்லையே என்று துடிக்கி ருள். நீண்டதான தன் தலை பின்னலைக் கையிலெடுத்தாள். இது ஒன்று தான் வழி. 'இந்தப் பின்னலை இரட்டையாய்ச் செய்து கழுத்தில் சுருக் கிட்டுக்கொண்டு யம ஸந்நிதானஞ் செல்வேன்' என்று ஒரு மரக்கிளையை மற்றொரு கையால் பற்றி நின்றாள் ! கடைசியாகக் கணவனைத் தியானிக் கிருள். வாய் புலம்ப கண்ணீர் சொரிய, மனம் பதைபதைக்க மரத்தடியில் நின்ருள். அவ்வளவுதான்! உடனே சடக்கென்று சில மங்களநிகழ்ச்சிகள் நேர்ந்தன. நலனளிக்கும் நற்குறிகள் தோன்றின. வித விதமான சுப சகுனங்களைக் கண்டாள். இவைகள் முன்பு அனுபவத்தில் நன்மையளித்து, மனத்தின்முன் வந்து என்ன இது! எத்தகை நம்பிக்கை யூட்டும் நற் சகுனங்கள்! உற்று நோக்கி உள்ளம் களித்தாள். நம்பிக்கை கொண்டாள்.

———

## 29. ஸீதைக்கு நற்சகுனங்கள்!

கணவனைக் காணுத கலவரத்தால் மனமுடைந்து உயிரை விட பிரயத்தனம் செய்யவிருக்கும் ஸீதா பிராட்டிக்குத் திடீரென்று சர்வ மங்களம் சொரியும் ஓர் ஆனந்த உணர்ச்சி எழுந்து பரவிற்று! மணம் நாரு கூந்த லழகு கொண்ட அவள் முகம் மலர்ந்து தெளிந்தது. மீனுல் அசைக்கப் பட்ட தாமரை மலர் போல் அவள் இடது கண் துடிக்கவாரம்பித்தது ! அப் பொழுது ஒரு புது ஜோதி பெற்றுத் திளைத்து விளங்கிற்று. அவள் மேனி வனப்பு. தனது அன்புள்ள நாயகனல் நெடு நாட்களுக்கு முன் தழுவப் பட்ட எழில் கொண்ட அவளது திரண்டுருண்ட இடது புயம் துடிக்க வாரம்பித்தது. இதைக் கவனிக்கிருள் ஜானகி! ''என்ன இது ! சுப சகுனங்கள் காணப்படுகின்றனவே! என் நாதனைக் காண்பேனு? வென்று அவள் மனம் கேட்கும் போதே இடது துடையும் துடிக்கத் தொடங்கிற்று. களிப்பினல் சிறு உதடுகள் சற்றகல, முல்லை அரும்பு போன்ற வெண் பற் கள் இலங்க, முகம் மலர்ந்து இன்பம் காட்ட, அவள் எல்லாப் பக்கங்களை யும் நிமிர்ந்து உற்று நோக்கும் போது தன் துடைத் துடிப்பால் புழுதி படிந்த பொன்னுடையும் சுபக் குறியை சூசிப்பது போன்று சற்றுக் குலைந்து நின்றது ! முன்பு இக்குறிகளைக் கவனித்திருக்கிருள் அவள். அவைகள் வெற்றிச் சின்னங்களென்று மனந்தெளிந்திருந்தாள். இப்பொழுது மறு படியும் அவைகள் தோன்றுவதைக் கண்டாள். ஆறுதல் அடைந்தாள். நம் பிக்கை கொண்டாள். எதிர் பாராத களிப்பெய்தினுள். நாதனைக் காணுங் காலம் கிட்டியதாக மனத்தில் ஓர் உறுதி எழுந்தது. வெகு நாளாய் வறண்டு போன நிலத்தில் கிடந்த வித்து மழை நீர் பெருக்கால் எப்படி மறுபடி புத் துயிர் பெற்றுத் தழைக்குமோ, அவ்வாறு அவள் மனம் ஒரு திருப்தி உணர்ச்சி பெற்றது. கோவைக் கனியை யொத்த உதடுகளும், அகன்ற

விசாலமான எழில் கண்களும், சுருண்டிருண்ட குழலும், வில்லையொத்த வளைந்த கரும் புருவங்களும், கோல நறும் பவளச் செவ்வாய் முறுவலும், அன்றலர்ந்த செந்தாமரை போன்ற திருமுக மண்டலமும், ராகுவினின்று விடுபட்ட வெண்மதி போன்று, புத்தொளி கொண்டு திகழ்ந்து விளங்கின. அவ்வுத்தமி துயரம் தொலைந்தவளாய், மன வேதனையிலிருந்து மீண்டவளாய், விண்மதியின் குளிர்ச்சியினும் காந்தியினும் பிரசன்ன வதனத்துடன் காட்சியளித்தாள்!

---

## 30. ஹனுமானின் ஆலோசனை

ஜானகியின் ஏமாற்றத்தின் கொதிப்பையும், அது அவளை எவ்வளவு விபரீத எண்ணத்திற்கு இழுத்துச் சென்று விட்டதென்பதையும் மாருதி மரக் கிளையிலிருந்து கண்டறிந்து மிகக் கவலையடைந்தான். பலவாறு யோசித்தான். ''இதுவரை ஆயிரக்கணக்கில் நான்கு திக்குகளிலும் வானரர்கள் இன்னும் யாரைத் தேடுகின்றனரோ அந்தப் பிராட்டி இங்கு என்னால் பார்க்கப்பட்டாள்; நான் தன்யனானேன். லங்கையில் புகுந்து ராவணனின் படை பலத்தையும் பராக்கிரம சக்திகளையும் ஒருவாறு கண்டறிந்தேன். அன்னையின் சோகப் பெருக்கையும் அவள் இப்பொழுது கொண்டுள்ள தீய நிலையையும் பார்த்து, அந்த சமயம் அவளைத் தேற்றாது நான் திரும்பிச் செல்வதா ? பதியின் தரிசனமொன்றையே வேண்டி நிற்கும் உலக உவமையாகிய இவ்வுத்தமியை இத்தருணம் அவளைச் சற்று மனச் சாந்தியடையும்படி செய்யாது போவேனாகில் என் பராக்கிரமும் முயற்சியும் என்னாகும் ? பூரண சந்திர குளிர் காந்தி பொழியும் இச் சுந்தரவதனி துக்கமென்பதையே அனுபவிக்கப் பெறாதவள், காலக் கேட்டால் இப்பொழுது துக்கத்தில் மூழ்கி கரை காணாது மனங் கலங்குகிறாள். இவளைத் தேற்றுவது என் கடமையேயாகும். இவளோ பிராணத் தியாகஞ் செய்யத் திடங்கொண்டிருக்கிறாள். இம்முயற்சியைக் கட்டாயம் தடுத்தே ஆக வேணடும். இல்லையேல் நான் கடல் கடந்ததும், இங்கு வந்து தேவியைக் கண்டதும், ஸ்ரீ ராகவனின் திட்டமும், சுக்கிரீவனின் முயற்சியும், பயனற்று முடிந்து போம். ஸீதா தேவியைக் காணத் துடித்துக் கொண்டிருக்கும் ரகுகுல திலகனுக்கு ஏமாற்றம் வராது பார்க்க வேண்டியது என் கடமையல்லவா ? இவளை இப்போதே தேற்றி மன அமைதியடைய வைப்பது என் பொறுப்பாகுமென்றோ ? 'அன்னை ஜானகியைக் கண்ணுற்றேன்' என்று ரகுநாதன் கேட்டவுடன், 'அவள் என்ன சொல்லியனுப்பினாள்' என்று கேட்டால் அவருக்கு நான் என்ன பதிலுரைப்பது ? ஆகையால் இந்த அற்புத தேவியாரை நேரில் கண்டு அடிபணிந்து உரையாடி 'நான் ஸ்ரீ ராம தூத' னென்று தெரியப்படுத்துவேன். அப்பெரு வீரன் அன்னையையடைய எல்லா பிரயத்தனங்களும் செய்து வருகிறாரென்று தெரிவித்து அவள் மனதிற்கு ஆறுதல் பயக்கும் முயற்சியை நான் இப்போதே எடுத்துக் கொள்வேன். பொழுது விடிவதற்கு இன்னும் சிறிது போதே இருக்கிறது. இதற்குள் இத்தேவி தன் பிராணனை மாய்த்துக் கொள்வாள்; நிச்சயம். அவள் அவ்வாறு செய்யப் பார்த்திருப்பது பெரும் தோஷமாகும். அதைத் தடுப்பதே இப்போது என் முதற் கடமை. தடங்கண்ணி மஹா லட்சுமி போல காட்சியளிக்கும் இவ்வுத்தமி விஷயத்தில் இத்தருணம் என் சேவையைச் செய்யாது தயங்கி நிற்பது கடமை செய்ததாகாது'',

"இது நல்ல சமயமாக அமைந்திருக்கிறது, என் புண்ணிய வசத்தால் அரக்கிகள் இவளைச் சூழ்ந்திருக்கவில்லை. இவள் தனியாகக் காணப்படுகிறாள்."

[அரக்கிகள் நித்திரையிலிருந்தன ரென்று ஹநுமான் பின்பு அங்கதன் ஜாம்பவான் முதலியவர்களைச் சந்தித்து இலங்கை விருத்தாந்தத்தைச் சொல்லும்போது தெரிவிக்கிறான்]

"இவளிடம் உரையாட இதுதான் ஏற்றகாலம். ஆகையால் இப்பொழுதே சம்பாஷணை துவக்க வேண்டும். சாதாரண மானிட பாணியிலேயே பேச வேண்டும். என்னை, இவன் ராவணனோ வென்று சந்தேகிக்காத படி உண்மையாகத் தன்னைத் தேடி வந்த ராம தூதனாகவே கொள்ளல் வேண்டும். அப்பொழுதுதான் அவள் மனம் சாந்தியடையும். மெதுவாகவும் நம்பிக்கை கொள்ளும்படியும் பேச வேண்டும். இல்லையேல் முன்பே அச்சமடைந்த இவள் என் உருவத்தையும் சொல்லையும் கவனித்து 'இவன் ராவணனோ' வென்று இன்னும அச்சமுற்று அலறுவள். இவள் கூச்சலைக் கேட்டதும் எல்லோரும் என்னைச் சூழ்ந்து கொண்டு என்னைப் பிடிப்பதிலோ கொல்வதிலோ முனைவார்கள். பின்பு என் எண்ணமெல்லாம் வீணாய்விடும். உத்தம தூதர்கள் தாங்கள் எடுத்து வந்த காரியங்களை வெற்றியுடன் நிறைவேற்ற வேண்டும். முதலில் ராமதுதி செய்து இவள் கவனத்தைப் பெறுவேன்" என்று எண்ணமிட்டான் ஹனுமான்.

---

## 31 ஹநுமானுடைய ராம கதாமிருதம்

இவ்வாறு தீர்மானத்திற்கு வந்த வானரோத்தமன், வைதேகி கவனமாய் கேட்கும்படி மதுரமான வாக்கியங்களை வழங்க வாரம்பித்தான்.

"ரதகஜ துரகபாதிகளையுடையவரும் மேன்மைக் குணமுடையவரும் புண்ணிய சீலரும, பெருங்கீர்த்திமானும், சத்திய சந்தரும், யாவர்க்கும் ஸௌக்கியத்தை விளைவிப்பவருமாய் விளங்கி வந்த தசரதர் எனும் ஓர் அரசர் இருந்தார். அவர் தவத்தில் ரிஷிகளுக்குச் சமானர். ராஜ ரிஷிகளுள் சிறந்தவர். சக்கரவர்த்திகளின் குலத்திலுதித்தவர். தேவேந்திரனையொத்த பலவான். அகிம்சா தருமத்தைப் பற்றியவர்; பெருந்தன்மை பொருந்தியதயாளு; உண்மை வீரியவான்; இக்ஷ்வாகு குலத்தில் தலை சிறந்தவர்; எல்லா சம்பத்தையும் பெற்றவர். நன்னெறியில் செல்வத்தை ஈட்டி வளர்த்தவர். அரச லட்சணங்கள் அமையப் பெற்றவர். லட்சுமி கடாக்ஷம் பெற்றவர்; பிரதாப சக்கரவர்த்தி. பாரெங்கும் வள்ளலென்று பெயர் பெற்றவர். அவருக்கு மிகப் பிரியமான புத்திரர் ஸ்ரீராமர் எனப்படுவர். அவர் தமது தருமத்தையும் தம்மை நாடி வந்தவரையும் ரட்சிப்பவர். ஸர்வலோக ரட்சகர். ஸத்தியமே வாழ்வாகக் கொண்டவர். தந்தையின் வசனத்தை மேற்கொண்டு அவ்வீர பத்தினியுடனும் தம்பியோடும் தவசி வேடங்கொண்டு வனமடைந்தார். வனமடைந்த அவ்வுயர் பெருவீரன், வனவாசத்தை வீணாக்கி வதைத்து வந்த பேய்க்குணங்கொண்ட அசுர அரக்கர்களை அறவே ஒழித்துக் கட்டி வனத்தைப் புனிதப்படுத்தியவர். ஜனஸ்தானம் என்ற காட்டுப் பிரதேசத்தில் தம்மை எதிர்த்து வந்த கரன்;

தூஷணன் முதலிய ராக்ஷஸர்களைச் சிதைத்து ஒழித்தவர். இதையறிந்து ராவணன் ஆச்ரமத்தை அணுகி, மாயையால் பொய்மான் உருவங்கொண்ட மாரீச அரக்கனின் உதவியால் ஸ்ரீராமரும் அவர் தம்பி லட்சுமணரு மில்லாத சமயம் பார்த்து ஸ்ரீ ஜானகியைப் பலாத்காரமாக அபகரித்துக் கொண்டு போய்விட்டான். ஸ்ரீ ராமச்சந்திரன் தம் பிராண நாயகியைத் தேடிக்கொண்டு வருகையில் அவர் சுக்கிரீவன் என்ற வானரத் தலைவ னுடன் நட்புக்கொண்டார்; அதன் காரணமாக ஸீதா தேவியைக் கண்டு பிடிப்பதாக வாக்களித்தார் வானர மன்னன். ரகுநாதரும் சுக்ரீவனுக்கு வானர அரசு கொடுப்பதாக வாக்களித்தார். அதன் மேல், சுக்ரீவரது தமையனை வாலியைத் தமது ஒரே பாணத்தால் அடித்து மாய்த்து, சுக்ரீ வர்க்கு முடிசூட்டினார். பின்னர் மகாசூரர்களான ஆயிரமாயிர வானரர்களை சுக்ரீவர் நான்கு திக்குகளிலுமனுப்பி ஸ்ரீ ராகவர் மகிஷியைத் தேடிவரும்படி ஆஞ்ஞாபித்தார். அவர்களும் அவவம்மையாரைத் தேடிக்கொண்டிருக் கின்றனர்.

பின்னர் சம்பாதி என்ற கழுகரசர் அத்தேவியார் இங்கிருப்பதாகத் தெரிவித்ததன் மேல், உடனே அந்த விசாலாட்சியைத் தரிசிக்க ஆற்றல் கொண்டு நூறு யோஜனையுள்ள இக் கடுங்கடலைத் தாண்டி வந்தேன். தன் பிரிய தேவியைப் பற்றி எந்த ரூபம், எவ்வர்ணம், எச்சோபை, எம் மேன்மை ஸ்ரீ ரகுநாதன் எனக்கு முன்பு தெரிவித்தினரோ அதே குணங் கள் பொருந்திய அன்னையை இங்குக் காணப் பெற்றேன்.'' என்று தேன னைய இனிய குரலில் உரைத்துவிட்டு மௌனமாயினன்.

உடனே மரத்தின் கீழிருந்த மாதுசிரோமணி, சுருக்கென்று ஒரு காந்த உணர்ச்சியை மனத்தில் கண்டாள்! மெய்சிலிர்த்தாள் "என்ன இது! மரணத்தறுவாயில் அமுதூட்டும் தேன் விருந்து! என் பிராண பதியை பற்றிய இன்னிசை!" நெஞ்சுப் பதைப்பு சற்றுத் தணிந்தது. பின்னர் செவிக்கினிய இன்பக் குரல் அம்மரக் கிளையிலிருந்து வந்ததாக உணர்ந்தாள்! என்ன ஆச்சரியம்! இங்கு யார் இந்த வேளையில் என் பிராணநாதரின் கதையைச் சொல்வது! ஆஹா! கேட்கக் கேட்க என்ன பேரானந்தம்! என்று ஜானகி முகத்தை நிமிர்த்தி மரத்தை உற்று நோக்கி னள்! அவ்வளவுதான்! (ஸ்ரீ மஹாலட்சுமி கடாக்ஷமல்லவா?) எங்கும் நல் லிருள், பொழுது புலருமுன் புடை சூழும் பாயிருள்! எனினும் அந்த நிமிஷத்தில் மரத்தின் மேல் கிளையைப் பற்றி ஒரு பேரொளி படர்ந்தது. அவ்வொளிச் சுவட்டில் ஓர் உருவம்! உடனே கீழே நான்கு திக்குகளையும் உற்று கவனிக்கிறள். ஒன்றும் தெரியவில்லை. இருள் சூழ்ந்த காலை சந்தியா காலம். மனம் சிந்தனையிலாழ்ந்தது. "சிந்தையிலும, சொல்லி லும், செயலிலும், உணர்விலும், கனவிலும், சிறையிலும் கடுமையான சிறுமைச் சூழ்நிலையிலும், ராமநாமமென்ற ஒரே தாரக மந்திரத்தைப் பற்றி யிருக்கும் எனக்கு திடீரென்று காதில் விழும் எச்சொல்லும் அவர் சொல் லாகவே ஒலிக்கின்றதே. இது உண்மைதானா? நான் கேட்ட மகாமந் திரச் சொற்கள் இன்னும் உயிர் தரிக்கத் தூண்டும் உயரிய சொற்கள் உண்மையில் வேறு யாராலும் சொல்லப்பட்டவைகள் தானா? யாரானாலும் சரி! அவைகள் உண்மையாகவே இருக்கவேண்டும். ஹா! இவை உண் மையாக எவராலுமே உரைக்கப்பட்டிருந்தால் அவற்றைக் கேட்ட எனது பாக்கியமே பாக்கியம். நாதா! உங்கள் நாமத்தின் பிரபாவமே ஓர் தனிச்

சிறப்பு !'' இவ்வாறு எண்ணங்கள் அவளை ஒரு திருப்தி நிலையில் கொண்டு விட, சுற்றுமுற்றும் மறுபடியும் உற்று நோக்குகிருள். பின்பு மேலே மறுபடியும் பார்க்க, முன்பு கண்ட உருவமே தென்படுகிறது. முகமும் தெரிகிறது. அதில் பக்குவமடைந்த புத்தி கூர்மை, அரச சபையினரின் பெருந்தன்மைப் பார்வை உதிக்கும் கதிரவனின் ஒளி. இவைகளைக் காண்கிருள் வைதேகி.

---

## 32. அன்னை ஹனுமானைக் காணுதல்

எத்தகைய நேர்த்தியான அற்புதக்காட்சி அது ! கிளை நடுவே பொருந்தியிருந்த உருவம் ஓர் அழகிய வானர உருவமொன்று கண்டாள் ஸீதா பிராட்டி ! வெள்ளை வஸ்திரம், மெல்லிய நுன்னிய உடலமைப்பு, மறைந்து மிளிரும் மின்னல் கொடியின் வசீகரம். இதைக் கண்டதும் அவள் மனம் களுக்கென்று கலவரமடைந்தது, மலர்ந்து குவிந்த அசோக மலர் போன்ற செம்மஞ்சள் செறிந்த உடல் காந்தி, அடக்கங்கொண்ட எளிமைத் தோற்றம், இன்பமளிக்கும் இலக்கிய மொழிகளைப் பகர்ந்த நூதனமான அத்தோற்றத்தைக் கண்டு மறுபடியும் சிந்தனையிலாழ்ந்தாள்.

உருவம் குரங்கினது; சாதாரணமாய்க் காண்பதரிது; அச்சமூட்டும் ஆணவத்தைக் காட்டும் தோற்றம் தான், ''இதை நிமித்தமின்றிக் காண்பதானல் அபசகுணமென்றல்லவா சான்ருேருரைப்பர் ? அபசகுனமாயின் எனக்கு இன்னும் அநுபவிக்கப் புவியில் துக்கமும் உளதோ'' என்று மனம் இன்னும் கலக்கமுற்றது. இன்னும் துன்பமாவென்று நடுங்கினுள. என் துயரத்திற்கு எல்லையுமில்லையா? வென்று வாய் புலம்பி அலற, கண்கள் நீர் மல்க; அப்படியே தயங்கி நின்று விட்டாள். சோகத்தில் மூழ்கிய உடலும் உணர்ச்சியும், பிடிப்பு தளர்ந்து வலிவிழந்து அளவிடற்கரிய களைப்பில் ஆழ்ந்தாள். 'ராமா! ராமா! வென்று அழுது புலம்பவராம்பித்தாள். மேலே உயர்ந்து நோக்கிய பார்வை, ஹநுமான் கண்ணில் இவள் உலக உத்தமியென்று உணர்த்தியது. அடங்கி ஒடிங்கி மரியாதையுடனிருந்த மாருதியைக் கண்டு' இது கனவா, நனவா' வென்று சந்தேகமடைந்தாள். மேலும் கவனிக்கிருள். அச்சமுறுகிருள். மதியிழந்தவளாய், நிலையிழந்தவளாய் துரும்பாய்க் குழைந்து போனுள். சற்று நேரஞ் சென்றதும் சுய நிலையை யடைந்து சிந்திக்கலானுள். ''பெரியோர்கள் சொல்லக் கேட்டிருக்கிறேன். கனவில் குரங்கைக் கண்டால் அமங்களம் என்பார்கள். என்ன செய்வேன்! ஒரு கெடுதலும் வரக் கூடாது, என்று கடவுளை வணங்குகிறேன். ஸ்ரீ ராகவருக்கும் அவர் தம்பிக்கும் என் தந்தைக்கும் க்ஷேமம் உண்டாகட்டும். ஆனல் நான் காணபது கனவில்லையே? துக்கத்திலாழ்ந்த எனக்கு தூக்கமேது ? வெண்மதி வதனனை விட்டுப் பிரிந்து ஒவ்வொரு நிமிஷமும் உயிர் துடிக்கும் எனக்த உறக்கம் வருமோ? சுகமென்பதை யறவே யொழித்த, பதியைப் பிரிந்த அபாக்கியவதிக்கு விழிப்பு உறக்கமென்ற பாகுபாடா? ஒரு வேளை இது கனவின்றி பிரமை நிலையோ? சதா ராமா! ராமா! வென்று புலம்பும் மனமும் மதியும் வாயும் எங்கும் ராம கதையையே கேட்கும் சுபாவம் என்ற பிரமை நிலையா இது ? அவரே என் உயிர் நிலை. அவரைப் பற்றியே எண்ணமும் பேச்சும், வருத்தமும்

கவலேயும் அவரையே திரும்பியடையும் ஆத்திரமும் ஆவேசமும், கவனமும் கண்ணீரும், சுவாசமும், அதைப் பொருந்தியது போலவே காட்சி காண்கிறேன். வசனங்கள் கேட்கிறேன், எண்ணங்கள் எண்ணுகிறேன். அக்களிப்பையே கோரி நிற்பவள் அக்களிப்பையடைவதாக உணர்கிறேன். இது என்ன விந்தை? உண்மை என்ன? என் சிந்தையின் தோற்றம் இந்நிலே! சதா பல்லக்கேறும் சிந்தனேயாளன் பல்லக்கேறும் உணர்ச்சியுறுவது போல் நானும் எதற்காகத் தவங்கிடக்கிறேனே அதையே காண்கிறேன் போலும்! அதையே அடைந்ததாகக் களிப்புறுகிறேன்; அத்தகைய பிரமைதானே இந்நிலே?

இருப்பினும், "எண்ணத்திற்கு உருவமில்லேயே! இங்கோ தெளிவுற உருவம் காணப்படுகிறதே! இது வெறும் பிண்டாகாரமான தோற்றமல்லவே! அவயவங்கள். நடை உடை, பாவனே, பேச்சு, இவைகள் யாவும் மனத் தோற்றத்திற்குக் கிடையாவே! ஆகையால் இது கனவில்லே. உண்மையேதான். இந்த உருவம் பேசுவதன் காரணமென்ன? பேச்சுக்களோ என் அன்பனேப் பற்றிய பேச்சுக்கள்! நற்பயனுகட்டும்! இந்திரனுக்கும், பிருகஸ்பதிக்கும், பிரம்மனுக்கும் அக்னி தேவதைகளுக்கும் என் மனமார்ந்த வணக்கங்கள்! இவ்வானரனின் வார்த்தைகள் உண்மையாய் வாய் விட்டுப் பேசின வார்த்தைகளாக விருக்கட்டும் இவைகளின் உண்மை உண்மையாய் திகழ்ந்து நிற்கட்டும்" என்று பணிந்தாள்.

---

## 33. மைதிலி — மாருதி சம்பாஷணே

மைதிலியின் மன நிலேயைக் காண்கிருன் மாருதி. தான் உரைத்த ராம கதை அன்னேயின் கவனத்தை இழுத்து அவள் கொண்ட தீர்மானத்தைத் தடை செய்ததைக் கண்டு சற்று ஆறுதலடைந்தான், எனினும் அவள் சந்தேகம் தீர்ந்த பாடில்லே. அரக்கிகள் கொடியவர்கள். இரக்கமற்றவர்கள், அவர்கள் விழித்தெழுவதற்குள் அன்னேயுடன் உரையாடி அவள் பயத்தைத் தவிர்த்து, மன நிம்மதி அடைய வைத்து, நம்பிக்கையூட்டித் திரும்ப வேண்டுமென்று திட்ட மிட்ட வாயு குமாரன் மெதுவாக மரத்தினின்று கீழிறங்கினுன். நற்பவழம் போன்ற சிவந்த முகம்; ஒப்பிட முடியா காந்தி வீசும் திருமேனி; இத்தகைய திவ்வியமான வடிவத்தைக் கண்டாள் ஜானகி. ஹநுமான் இறங்கி வைதேகியை யணுகித் தலே குனிந்து அடி பணிந்து கரங் குவித்துச் சற்று நேரம் வணக்கத்துடன் நின்று தலே குனிந்த வண்ணம் வருத்தம் காட்டும் தொனியில் சாவதானமாகப் பேசலுற்ருன் :—

"அம்மணி! பத்ம லோசனி! உங்கள் கசங்கிய பட்டாடை சோகத்தைத் தெரிவிக்கின்றது. தூய்மை வாய்ந்த சுப லட்சணங்கள் செறிந்த தாங்கள் ஏன் வருத்தம் மேலிட்டுக் கிளேயைப் பற்றிக் கொண்டு நிற்கிறீர்கள்? நீங்கள் யார்? அம்மையே! மடை திறந்த வெள்ளம் போல் உங்கள் தாமரைக் கண்களிலிருந்து நீர்ப் பிரவாகம் ஓயாது புரண்டோடி வழிந்து வருவதேன்? சர்வ மங்கள சுந்தரியான தாங்கள் ஏன் இப்படி மனங்கலங்க வேண்டும்? உங்கள் தரிசனம் தேவர்கள், கந்தர்வர்கள், முதலிய வானேர்

தலைவர்களைக் கண்முன் கொண்டிருக்கிறது. தேவியே! எழிலே உருக் கொண்டுள்ள ஒப்புயர்வற்ற மேனி கொண்ட தேவதையான தாங்கள், ருத்ரர்கள் மருத்துக்கள் வஸுக்கள் ஆகிய இவர்களில் யாரைச் சார்ந்தவர் கள்? சந்திரனை விட்டுப் பிரிந்த நற்குணங்கள் நிறைந்த ரோஹிணி தேவி யோ? கல்யாணி என்று மனமும் மதியும் நாவும் சதா கூவியழைக்க விரும்பும் நீங்கள் யார் அம்மா? வஸிஷ்டரை விட்டுப் பிரிந்த அருந்ததியோ? ஒப்பற்ற இடை எழில் பூண்ட திவ்விய மங்கள சொரூபியான தாங்கள் இவ்வுலகத்தா ரென்று நினைக்கிறேன். இல்லையேல் தங்கள் திருக்கமல பாதங்கள் இப்பூமி யைத் தொட்டு நிற்காதே அம்மணி! உங்கள் மென்மை பொலியும் அவய வங்களும் அவைகளின் இணையற்ற அமைப்பும் அரசு புரியும் மன்னவ குலத்தை வெளியிடுகின்றன! தனிப் பெரும் சிம்மாசனத்தில் செங்கோல் செலுத்தி வீற்றிருக்கப் பெறும் மகா ராணியாய் விளங்குகிறீர்கள். கொடிய அரக்க அரசனால் பலாத்காரமாக ஜனஸ்தானத்திலிருந்து அபகரிக்கப்பட்ட ஸீதா பிராட்டி தாங்கள் தானெனில் உங்களுக்கு சர்வ மங்களங்களுமுண்டா குக. உங்கள் துயரம் இதோ ஒழிந்து விட்டது! மானிட வடிவத்திலே தலை சிறந்த உத்தம அழகு வர்க்கப் பெற்றவர் நீங்களென்று யாவரும் உணர் வார்கள். தவவேடங் கொண்ட உங்கள் அபூர்வத் தோற்றம் ஒப்புயர் வற்ற லோகநாதனான புருஷோத்தமன் ஸ்ரீ ராகவ மகிஷியினதென்பதை அறி வூட்டுகிறது. தேவியே! நீங்கள் எங்கள் அன்னை ஜானகி தேவி தானே? விடையருளுங்கள்' என்று வணங்கினான் ஆஞ்ஜநேயன்!

வைதேகியின் செவியைக் களிப்பூட்டின இச்சொற்கள் அவளை ஒரு நிதானத்தில் சேர்த்தன. ஸ்ரீ ராம கீர்த்தனத்தால் மிகக் களிப்புற்று மரத் தின் மேல் அப்படியே சாய்ந்து கொண்டாள். அப்பொழுதுதான் அவள் உடலின் களைப்பு வெளியாயிற்று! உண்மைப் பக்தனான மாருதி அதைக் கண்டு மனம் விண்டான். ஆஹா! எவ்வளவு பொறுமை; இப்பொழுதுதான் இவ்வம்மையின் உடல் சிறிது ஆறுதல் அடைகிறது போலும்! இச்சிறு ஆறுதலால் இவள் எவ்வளவு காந்தி பொலியும் மேனி குளிர்ந்து சோபை யுறுகிறது! அவள் எத்தகைய துயரக் கடலில் மூழ்கியிருப்பினும் பொறுமை யுடன் கணவனை நினைத்த வண்ணம் இங்கு பொருந்தியிருக்கிறாள்! இவ்வம் மையின் சகிப்புத் தன்மைதான் எத்தகைய வலிவு கொண்டது! மானிட வர்க்கத்திற்கே ஒரு வீரச்சக்திக்கு எடுத்துக்காட்டாக இருக்கிறாள்'' என்று உணர்ந்ததும் கண்ணில் நீர் பெருக்கெடுத்தது.

சில நிமிஷங்கள் சென்றன. பின்பு நிதானமாக சாந்தி நிலவும் பார் வையில் எதிரில் நிற்கும் மாருதியைப் பார்த்து முதல் முதலாகப் பேச வாரம் பிக்கிறாள் வைதேகி.

''ஆம், பூவுலகில் வளம் பெற்ற அரசச் சிங்கங்களுள் தலைவரும் எதிரிகளின் சேனைகளை நீறு படுத்தினவருமான பெரும் புகழ் பெற்ற தசரத சக்ரவர்த்தியின் மருமகள் தான் நான்'' என்றாள். (மரியாதையும் எளிமைத் தன்மையும் ஒன்று கலந்த அடக்க ஒடுக்கமான இனிய சொற்கள்!) இன் னும் சொல்கிறாள்.

''மகாத்மா விதேக மன்னன் ஜனகரின் புதல்வி. ஸீதை என்று என்னை அழைப்பார்கள். தீமானான ராமருடைய மனைவி! அயோத்தியில்

ஸ்ரீ ராகவருடைய அரண்மனையில் பன்னிரண்டு வருஷகாலம் எல்லா இன்பங்களையும் அனுபவித்து வந்தேன். பின்பு தசரத சக்ரவர்த்தி ரகுநந்தனை ஸ்ரீ ராம சந்திரருக்குப் பட்டாபிஷேகஞ் செய்யச் சபையோர்களுடன் தீர்மானித்தார். அச்சமயம் கைகேயி தேவி – என் இளைய மாமியார் – சக்கரவர்த்தியைப் பார்த்து "ராமன் முடி சூடினல் உணவு உண்ணேன், நீர் பருகேன், என் வாழ்வு முடியும், என்று சொல்லுங்கள். முன்பு எனக்கு நீங்கள் கொடுத்த வாக்கை நினைப்பூட்டுகிறேன். அதை நிறைவேற்றுவதானல் முடி சூட விருப்பவனை ராமன் வனஞ் செல்லவேண்டும்; என் மகனை பரதன் முடிசூட வேண்டும்; இந்த இரண்டையும் இப்பொழுது கேட்கிறேன். உங்கள் வாக்குதத்தத்தைப் பூர்த்திசெய்யுங்கள். இது ஒன்றுதான் நான் உயிர்தரிக்க ஒரே வழி'' என்று திட்டமாய் விடுத்து விட்டாள். முன்பே வரங் கொடுத்திருந்ததால் அதற்குக் கட்டுண்டு விட்டார் மன்னர். மதி கலங்கினர். சத்தியத்திலும், தருமத்திலும், நிலை நின்றவர், சொன்ன சொற் சீலரான அவர் மூத்த குமாரரை, ராஜ்யத்தைப் பரதனுக்குக் கொடுக்கும்படி வேண்டி நின்றார். அக் குமாரரும் சத்தியங் காத்தலை விட முடி சூடுவது மேன்மையல்லவென்று கொண்டு தந்தை சொல்லைத் தலைமேற்கொண்டுக் கானக மேவினர். அந்த ராகவனெனும் பெருமான் உண்மைப் பராக்கிரமசாலி; ஈகைக் குண முடையவரேயன்றி எற்குங் குணமுடையவரல்லர். எத்தகைய கொடிய ஆபத்திலும் பிறரைத் துன்புறுத்துவரல்லர். பெரும் புகழ் பெற்றவர். தட்சணமே அரச உடை நீத்து மரவுரிதரித்து இம்மியளவும் வருத்த மின்றி முடி துறந்து கானகஞ் சென்றார். என்னைத் தனது அன்னையிட மிருக்கச் சொன்னர். ஆனல் அவரின்றிச் சுவர்க்கமும் வேண்டாத நான் அவருக்கு முன்பே காடு செல்ல ஆயத்தமானேன். நன்னெறியை நன்குணர்ந்த அன்பருக்கு அன்பளிப்பவரான அவர் தம்பி — ஸுமித்திரையின் புதல்வர் — லட்சுமணர் அண்ணனை விட்டகலாது அவர் குணத்துக்கு மெருகூட்ட அவரைப் பின் பற்றினர். சக்ரவர்த்தியின் வார்த்தையை உண்மையாகச் செய்ய உறுதியான விரதம் பூண்டவர்களாய் நாங்கள் வனவாசம் செய்ய வந்தோம். அப்படி நாங்கள் தண்டக வனத்திலிருக்கும் போது அவ்வீர தீரருடைய மனைவியான என்னைத் துராத்துமாவான ராவணனெனும் ராட்சதன் தனியே இருக்கையில் பலாத்காரமாக அபகரித்து, இங்குக் கொண்டு வந்து விட்டான். அப்பாவி எனக்கு இன்னும் இரண்டு மாதங்கள் கெடு விடுத்திருக்கிறன். அது கடப்பதற்குள் உயிரை மாய்த்து விட எண்ணியிருக்கிறேன் என்னல் இனி இத்துயரம் தாங்க முடியாது'' என்று மொழிந்து மௌனமாயினள் மைதிலி!

---

## 34. ராம லட்சுமணர்களின் செய்தியுரை

இவ்வாறு துக்கம் மேலிட்ட ஸீதா தேவியின் மொழியைக் கேட்டு வாயு குமாரன் தானும் வருந்தினன். ஒருவாறு மனந் தேறி சாவதானமாகவும் சாந்தமாகவும் ஸீதையிடம் பேசவாரம்பித்தான் —:

"தேவியே! நான் ஸ்ரீ ராகவரது கட்டளையால் உங்களைத் தேடிச் செய்தி சொல்ல வந்த தூதன். வைதேகி! ஸ்ரீ ராமர் சௌக்கியமாயிருக்கிறர். இதை உங்களுக்கு அறிவிக்கச் சொல்லியனுப்பினர், தேவி! எவர்

வேதமறிந்தவர்களுள் சிறந்தவரோ, எவர் வேதக் கருத்தையும் அஸ்திரத்தில் சிறந்த பிரும்மாஸ்திரத்தையும் அதன் மகிமையையும் அறிந்தவரோ, அந்த உயர் அறிவாளியான ரகுநந்தனர் உங்களுடைய க்ஷேமத்தை அறிந்து வரும் படி என்னை நியமித்திருக்கிருர். உங்களுடைய கணவருக்கு இனியவராய், அவருடன் கூடவே இருப்பவருமான மகாத்துமாவான லட்சுமணரும் தமது வணக்கத்தை உங்களுக்குத் தெரிவிக்கச் சொல்லியிருக்கிருர்'' என்று தலை வணங்கினன்.

இவ்வின்ப மொழிகளைக் கேட்டாள் அச்சர்வாங்க சுந்தரி. அங்கம் பூரித்தாள். என்று மடையாத ஆறுதலடைந்தாள். ஹநுமானை உற்று நோக்கி உரைக்கிருள்: அநேக காலம் வருத்தத்துடன் வாழ்ந்த எந்த துர்ப்பாக்கியனுக்கும் பல காலம் கழித்தாவது ஒரு நாள் வருத்தம் தீர்ந்து ஆனந்தமுண்டாவது சகஜம் என்னும் முதுமொழி என் விஷயத்தில் உண்மையாக விருக்கிறது போலும்! இன்று ஏதோ ஆறுதல் காண்கிறேன். உம் வரவு நல்வரவாகுக'' என்று ஆசி கூறினள்.

சற்றுக் களைப்பாறிச் சோகம் குறைந்து மனக் களிப்புற்ற மைதிலியை இன்னும் தேற்றும் பொருட்டு ஆஞ்ஜநேயன் அவள் அருகே அணுகினன். அணுகலும் உடனே அச்சமுற்ருள் வைதேகி. இவன் ராவணனே? என்று சந்தேகிக்கத் தொடங்கினள். மாறு வேடம் கொள்வதில் வல்லவனும், முன்பு தவசியாய் வந்து, அரக்கனய் மாறினவனுமான ராவணனே இப்பொழுது குரங்காய்க் காண்கிருனே? "நிச்சயம்; ஐயோ! இவனுடன் உரையாடுவதும் தவறு என்று எண்ணம்கொண்ட நான் இப்பொழுது பேசிவிட்டேனே! என்ன ஆபத்து நேர்ந்து விட்டது. ஆஹா! என்ன மூடத்தனம் இது" என்று ஸீதை மறுபடியும் துயருற்று அக்கிளையை விட்டுக் களைப்புடன் அம் மரத்தினடியில் உடல் சோர்ந்து உட்கார்ந்துவிட்டாள். ஹநுமான் அவளை மறுபடியும் பயங் கொண்டவளாகவும் தன்னைப் பற்றி தப்பெண்ணங் கொண்டவளாகவும் கவனித்து, அவள் ஆறுதலடையுமாறு தண்டனிட்டுப் பணிந்தான். அவளோ இவனை, "ராவணனே இந்த வேஷம் பூண்டு தன்னைத் தண்டனிடுகிருன். சாகசக்காரன்'' என்று நினைத்து அவனைக் கண்ணெடுத்தும் பாராமலிருந்து விட்டாள். ஹநுமானே அவள் விடையளிக்கும் வரை தலை குனிந்தவன் தலை குனிந்தவனே.

இப்படியே சில நேரம் சென்றது. பின்பு கொஞ்சம் தைரியமடைந்த ஜானகி, "நீ மாயையை உபயோகித்து இம்மாதிரி தந்திரங்கள் செய்யும் ராவணனேயாகில், என்னை மேன் மேலும் இவ்வாறு துன்புறுத்துவது தருமமாகாது. துறவியாய் வந்து அரக்கனய் என்னை அபகரித்துவந்த ராவணனயிருப்பாயாகில உபவாசத்தால் வாடி வதங்கித் தீனமடைந்து தவிக்கும் என்னை ஏன் இப்படி அடிக்கடி இம்சிக்கிருய்? இது உனக்கு நேர்மையாகுமா?" வென்ருள்.

ஒன்றும் பதிலில்லை. குனிந்த தலை குனிந்த வண்ணமே பணிந்து நிற்கிருன் மாருதி. சிறிது நேரம சென்றதும் மாருதியை உற்று நோக்கினள் மைதிலி. அவன் மரியாதையில் உண்மையைக் கண்டாள். சற்றுத் தெளிந்தாள். எனினும் திடங் கொண்டவளாக ஆகவில்லை. அவள் சொன்னள் :— "நீர் ஸ்ரீ ராமருடைய தூதராக வந்தது உண்மையாகில் உனக்கு

க்ஷேம முண்டாகட்டும். வானரப் பெரியாரே! ராம கதையைக் கேட்பதில் எனக்கு விருப்பமுண்டு. உம்மை நம்பி உறுதியடைய விரும்புகிறேன். என் பதியின் குணங்களைக் கேட்கத் தூண்டும் ஆசை வெள்ளம் கரையை அறுப்பது போல் என் மனத்தைக் கரைக்கிறது. ஆசையால் என் பிரிய நாதரான ஸ்ரீ ராமருடைய குணங்களைச் சொல்வீராக! நீர் அவரிடமிருந்து வந்த தூதரென்றே நினைக்கிறேன். அவரையே என் உயிராய்க் கொண்டிருக்கும் நான் அவரையே நினைந்துருகுகிறேன். கனவிலுங் கூட அவரைக் காணப் பெறாத நான் அவரைப் பற்றி அறியத் துடிக்கிறேன். மெய்மறந்தவளாய் இதை வேண்டுகிறதில்லை உண்மை என்று நம்ப வேண்டுமென்ற எண்ணத்தாலும் ஆசையாலும் உம்மைக் கேட்கிறேன்'' என்றாள்.

ஆசையென்று சொன்ன உடனேயே மறுபடியும் வைதேகியின் மனம் கலவரமடைந்தது. ஐயோ! என் ஆசையும் மன வோட்டமும் தாள் இவ்வுருவத்தையும் வார்த்தைகளையும் எழுப்புகின்றனவோ! வென்று முகம் வாடினாள்

வாயு குமாரர் ஸீதா தேவியின் கவலையை யறிந்தார். ஐயோ! இவள் அடிக்கடி இவ்வாறு அச்சமுறுகிறாள். எத்தகைய வேதனைக்கு ஆளாகி விட்டாள் என்று அவன் மனம் பொருமிற்று. செவிக்கினிய சொற்களைச் சொல்லி அவள் திடமான நம்பிக்கை அடையுமாறு பணியாற்ற வேண்டுமென்று உறுதி கொண்டு வானரேந்திரன் மிக்க சாந்தமான குரலில் உரைக்கலுற்றான் :—

''அம்மையே! ஸ்ரீ ராகவர் முன் நிற்க முடியாது நாளையே ராவணன் வீழ்ந்து மடியப் போவதைக் காணப் போகிறீர்கள். இந்த அல்ப அரக்கனா அவரை எதிர்த்து நிற்பவன்? அன்னையே! ஸ்ரீ ராகவர் கதிரவன் போல் காந்தி பொருந்தியவர்; சந்திரனைப் போல் உலகுக் கினியவர்; குபேரனைப் போல் எல்லோர்க்கும் வீறு பெற்ற அரசராய் விளங்குபவர். இல்லையென்றென்னாது கொடை யளிக்கும் அன்புப் பிரபு; மகா கீர்த்தி கொண்ட மகா விஷ்ணுவை ஒத்த பார் புகழும் பராக்கிரம சாலி; பிருகஸ்பதியை யொத்த சொல்லின் செல்வர்; மதுரமான வாக்குள்ளவர்; சத்தியமே அவர் வாக்கு; உருவெடுத்த மன்மதன் போல் வைத்த கண் வாங்காத வனப்புடையவர்; மகா சூரர்; இடமறிந்து சினங் கொள்பவர்! சீரிய நெறி முறை கொண்டவர் உலக உத்தமர்; எந்த மகாத்மாவின் ஆக்ஞையால் உலகம் முற்றும் நெறி முறையிலிருக்கிறதோ அவ்வுயரிய உத்தமரை, மாயாவியான மாரீசன் உதவியால் வஞ்சித்தான். இக் கொடிய அரக்கவரசன், உங்களைப் பலாத்காரமாகத் திருடியதன் பயனை இப்போதே அடையப் போகிறான். அதை நீங்கள் உங்கள் கண்களால் இப்போதே காணப் போகிறீர்கள். எவருடைய சீறி எழுந்து பாய்ந்து கொளுத்தும் பாணங்களால் இந்த லங்காபுரி எரியுண்டு சாம்பலாகப் போகிறதோ, அப்பெரு வீரனிடமிருந்து உங்களைத் தேடித் தரிசிக்க அனுப்பப் பட்ட தூதன் நான். தாயே! உங்களை விட்டுப் பிரிந்ததால் துக்கத்திலாழ்ந்திருக்கிறார் அவர். லட்சுமணரும், சுக்கிரீவ மன்னரும் உங்களிடம் க்ஷேமம் தெரிவிக்கச் சொன்னார்கள். ஸ்ரீ ராகவன் நினைப்பும் பிழைப்பும் உங்களைப் பற்றியவையே. தெய்வாதீனமாய் உங்களை நேரில் காணக் கொடுத்து வைத்தேன். வைதேகி! இதோ உங்கள் பிராண நாதர் லட்சுமணருடனும், கோடி கோடி வானரர்களுடனும் அதி சீக்கிரம்

சுமணர்களும் திருப்தி கொண்டார்கள். பின்பு மானிட ராஜரும் வானர ராஜரும் அக்கினி சாட்சியாய் நட்புக்கொண்டு அளவளாவினர். இருவரும் முன் நடந்த நிகழ்ச்சிகளை ஒருவர்க்கொருவர் தெரிவித்துக் கொண்டனர். அதனால், இருவரும் சற்று மனக் கலக்கம் விட்டொழிந்தனர். ராஜ்யத்தினின்று துரத்தப் பட்டு, மனைவியைப் பறி கொடுத்து விட்டு அண்ணனின் கொடுமை தாங்காது தவித்துத் தத்தளிக்கும் தம்பி சுக்கிரீவருக்கு அவர் குறையை நீக்கிக் கொடுப்பதாக ஸ்ரீ ராகவர் வாக்களித்தார். அப்பொழுது ராமானுஜர் உங்களை ராவணன் திருட்டுத் தனமாய் அபகரித்துச் சென்றதைச் சுக்கிரீவருக்குத் தெரிவித்தார். அதைக் கேட்டு சுக்கிரீவர் மனங்குன்றி ஸ்ரீ ரகுநாதர் துக்கத்தில் கலந்துகொண்டார் அரக்கனல் அபகரிக்கப் பட்டு ஆகாயத்தில் செல்லும் போது நீங்கள் கீழே எறிந்த, எங்களால் பத்திரமாய் வைக்கப் பட்டிருந்த உங்கள் திருவாபரணங்களைச் சுக்கிரீவர் உத்தரவுப்படி ஸ்ரீ ராமர் முன் வைத்தோம். அவற்றைக் கண்டதும் அவர் கரை காணாத துயரத்திலாழ்ந்தார். பின்னர் ரகுபதி சிறிது தேறி, அவ்வாபரணங்களைக் கண்டவுடன் பிரஜ்ஞை தெளிந்தவராய் ஆவலுடன் எழுந்து அவைகளை எடுத்து வைத்துக் கொண்டு, உங்களைக் காண்பது போலவே கண்ணுங் கண்ணீருமாய் அவைகளைக் கண்டு களித்தார். அவைகளைத் தன் மடியிலிட்டுப் பலவாறாய் நினைத்து நினைத்து கேட்போர் நெஞ்சுருகும் வண்ணம் உங்கள் பிரிவாற்றாமையைக் குறித்துப் பிரலாபித்தார். அவைகளை ஒரு தரம் காண்பர்; சோகம் மேலிட்டுப் பரிதவிப்பார். மறுபடியும் கண்ணுற அவர் சோகாக்கினி கொழுந்து விட்டெரியும். வருத்தந் தாங்காது ஐயன் அப்படியே தரையில் சாய்ந்து விடுவர். என்னல் அக்காட்சியைத் தாங்க முடியாது மெள்ள மெள்ள அவரைத் தேற்ற முனைந்தேன். அவர் எழுந்தார். பின் அவ்வாபரணங்களை மறுபடியும் கண்ணுற்று, உங்களைப் பிரிந்த விசனத்தால் மனம் விண்டு அவைகளைச் சுக்கிரீவருக்குத் திருப்பித் திருப்பிக் காட்டி உங்களைக் கூவி யழைத்து வாய் விட்டுப் புலம்பினர்.

"அம்மா! உங்களைக் காணப் பெருது அவர் ஆவி துடிக்கிரர். பரிதவித்துப் பதறுகிரர். நீங்களில்லாமையினல், நித்திரை யின்மையும், துயரமும், உங்களைப் பற்றி இடை விடாச் சிந்தனையும் ஒன்று சேர்ந்து அவரை ஓயாது வேதனை செய்து வருகின்றன. பூகம்பத்தில் சிதறுண்ட பர்வதம் போல் அவர் மனம் சிதறுண்டிருக்கிறது. அரசிளம் குமரியே! அழகிய சோலைகளிலும், நதிகளிலும், தேனருவிகளிலும், தாமரை ஓடைகளிலும் நீங்கள் இல்லாமையால் அவை அவர்க்கு மகிழ்ச்சி யளித்தில. அவ்விடங்களில் உங்களைக் கூவி யழைக்கிரர். நீங்கள் அவைகளைக் கண்டு களிப்புறுவீர்களே என்று கதறுகிரர். அப் புருஷோத்தமன் அனுக்கிரகத்தால் நான் உங்களைத் தேடி அடைந்தேன். நான் அவரிடம் நீங்கள் இங்கிருப்பதைத் தெரிவிக்க வேண்டியது தான் தாமதம். உடனே மறு விநாடி அவர் விரைந்து வந்து இவ்வரக்கனை அரை நிமிஷத்தில் மாய்த்து லங்கையைச் சுட்டெரித்து உங்களை அடையப் போகிரர். அம்மையே! இது நடந்தே தீரும். இதை உறுதியாய் நம்புங்கள். ஸ்ரீ ராம சுக்கிரீவர்கள் ஒன்று கூடி அன்றே வாலியைக் கொல்வதற்கும் உம்மைத் தேடிக் கண்டு பிடிப்பதற்கும் இருவரும் உடன்படிக்கை செய்து கொண்டு விட்டார்கள்.

"அவ்வாக்கின் படியே வாலியும் போரில் ராகவரால் கொல்லப் பட்டான். பிறகு அந்த ரகுநாதர் சுக்கிரீவருக்கு வானர அரசை வழங்கினர்.

பின்பு அரசரான ஸுக்ரீவர் உங்களைத் தேடும் நிமித்தம் அநேக ஆயிர வானரவீரர்களை நாலுதிக்கிலும் போய்த் தேடிவரும்படி கட்டளையிட்டார். நான் ஸ்ரீ தாசரதியின் தூதன். ஸுக்கிரீவ அரசரால் அனுப்பப்பட்டவன். ஹநுமானெனப்படுபவன். வாலியின் குமாரனை அங்கதன்—சீமானை ஸீதாபதியாலும் ஸுக்ரீவராலும் கிஷ்கிந்தையின் யுவராஜாவாகப் பட்டாபிஷேகம் செய்யப்பட்டவன்—தலைமையில் ஜாம்பவான் முதலிய வானர முக்கியர்கள் தெற்குத் திக்கில் அனுப்பப்பட்டார்கள். அடியேனும் அவர்களில் ஒருவன், நாங்கள் எல்லோரும் உங்களைத் தேடி வரும் வழியில் விந்தியமலைக் குகையை யடைந்தோம். இரவு பகல் தெரியாமல் உழன்றோம். எங்கள் தவணை கழிந்துவிட்டது. திரும்புவதில் பயனில்லையென்றும், உயிர் நீப்பதே யுக்தமென்றும் ஏங்கிக் கலங்கிக் கொண்டிருந்தோம். நாட்டிலும், காட்டிலும், மலையிலும், சுனையிலும் உங்களைத் தேடித் தேடி அலைந்தோம். உங்கள் தரிசனம் கிடைக்கப் பெறாது மனந் தளர்ந்து மெய் சோர்ந்து பட்டினி கிடந்து உயிர்விடத் தீர்மானித்தோம். அவ்வாபத்து வேளையில், சிக்கலான நெருக்கடியில், ஸம்பாதியென்னும் ஒரு கழுகரசர் எங்களுக்கு உற்ற விடத்தில் உதவி புரிந்தார், அவர் ஜடாயுவின் சகோதரராம். அரக்கனின் அட்டூழியத்தால் ஜடாயு மடிந்ததைக் கேட்டு ஆவேசங்கொண்ட அக்கிழக் கழுகரசர் உங்களைப் பற்றிச் சில செய்திகள் வெளியிட்டார். "வானரோத்தமர்களே! இங்கிருந்து நேரே தெற்கில் நூறு யோஜனை தூரத்தில் கடல் மத்தியிலுள்ள ராவணனுடைய லங்கைத் தீவில் தேவி, அரக்கிகள் சூழக் காவலிலிருக்கிறாள். அங்குச் சென்று அன்னையை தேடுங்கள்" என்றார்.

"இப்புத்துயிரளிக்கும் ஆனந்தச் செய்தியைக் கேட்டு ஒரே குதூகலத்தில் நாங்கள் கடற்கரையடைந்தோம். கடலைக் கண்டதும் 'இதை யார் கடப்பது?' என்ற பிரச்னை மீண்டும் பயத்தை அளித்தது. அப்பயத்தைப் போக்கி அடியேன், கடலைத் தாண்டி நேற்று ஸூர்யாஸ்தமனத்தின் போது இங்கு வந்தேன். மற்றவர்கள் அங்கேயே தங்கி என் வரவை எதிர்பார்த்திருக்கின்றனர். இரவு முழுவதும் இந்நகரம் முற்றும் (ராவணக் கிருஹம்) நுழைந்து உங்களைத் தேடினேன். 'அன்னையைக் காணவில்லையே; எங்கும் தேடியாய்விட்டதே' என்று கலக்கமுற்றிருக்கையில் ஸ்ரீ ராமானுக்கிரகத்தால் இவ்வசோக வனிகையில் தங்களைத் தரிசித்தேன்! எல்லாம் நடந்தபடி உரைத்தேன். நான் தாசரதியின் தூதன்தான் தாயே! என்னை அங்கீகரியுங்கள். தேவி! வாயுகுமாரனும், ஸுக்கிரீவர் மந்திரியும், ஸ்ரீ ராகவாரல் நியமிக்கப்பட்டு ஊக்கங்கொண்டவனுமான என்னை உங்கள் நிமித்தமாய் இங்கு வந்தவனாகக் கொள்ளுங்கள். போரில் அஸ்திர சாஸ்திரங்களை (மந்திர பலம் பொருந்திய நுண்ணிய ஆயுதங்களை) திறனோடு கையாளும் வல்லாளர்களின் முன்னணியிலிருக்கும் உங்கள் கணவர் காகுத்தர் க்ஷேமமாயிருக்கிறார். அண்ணன் பணியிலீடுபட்ட லட்சுமணரும் சௌக்கியம். உங்களைப் பற்றி அறிய அக்கரையில் காத்து நிற்கும் மற்ற வானர வீரர்களுக்கு நான் கடல் தாண்டி வந்தது பலிதமாயிற்றென்றுரைக்கும் ஆனந்தம் உங்கள் திவ்விய தரிசனத்தால் எனக்குக் கிடைத்தது. அரும் பெரும் பாக்கியம் இது! அம்மணி! கவலையை அறவே ஒழியுங்கள். உற்றார் உறவினர் யாவரையும் ராவணனையும் சேர்த்து நொடிப்பொழுதில் மாய்த்து உங்களையடையப் போகிறார் ஸ்ரீ ஜயராமர்." என்று முடித்தான் மாருதி.

துயரில் துவண்டு போன மிதிலைச் செல்வி ஹநுமானுரைத்த காரணங்களையும் ஒத்திருக்கும் அடையாளங்களையும் நன்கு கவனித்து, இவன் ராமதூதனே யென்று நம்பிக்கை கொண்டாள், அவ்வளவுதான் உடனே கண்களில் ஆனந்த பாஷ்பம்! அவள் ஒப்பற்ற திருமேனி ராகுவினால் விடப்பட்ட வெண்மதி போல் புதிதாக மிளிர்ந்து பிரகாசித்தது. குளிர்ந்த மேனியைத் தரிசித்தான் தாசரதியின் தூதன்!

———

## 36. ஹனுமான் திருவாழி அளித்தல்

[இப் பூமண்டலத்தில், முன்பு, ராமராஜ்ய சாம்ராஜ்யத்தில் சூரிய குல சகாப்தத்தில் அயோத்தி மாநகரில், அமையப் பெற்ற கோமதி நதிக் கரையில், நைமிசாரணிய மென்ற புனித க்ஷேத்திரத்தில், திவ்வியமான அசுவமேத யாகசாலையில், சபை விளங்க அமர்ந்திருந்த மாமுனிவர்கள், ரிஷி கணங்கள், நாட்டு மக்கள், நகர மாந்தர்கள், வானர வீரர்கள், அரக்கப் பிரமுகர்கள், முன்னிலையில், நீலமேக வர்ணனும், ஸர்வ மங்கள விக்ரகனும், ஸர்வலோக ரட்சகனுமான சாட்சாத் ஸர்வேச்வரன் ஸ்ரீமந் நாராயணன் அயோத்யா புரீசனக தருமமும், சத்தியமும், செறிந்த செங்கோலுடன் தனிப் பெரும் பெருமை வாய்ந்த வீர சிங்காதனத்தில் இனிது வீற்றிருக்க, இளம் சூரியர் போன்ற குசலவர் என்ற பாலர்கள் பதினெட்டாவது தினத்தில், ஸ்ரீமத் வால்மீகி ராமாயணம், சுந்தர காண்டம் முப்பத்தாறுவது ஸர்க்கம் முதல் நாற்பத்தேழாவது முடியும் வரை கானஞ் செய்து, அமுதூட்டி ஆநந்தம் பொழிந்த பிரகாரம் பின்வருமாறு:-]

அன்னையின் அருள்பொழியும் ஆநந்தக் கடாட்சத்தைக் கண்டு மெய்சிலிர்த்துப் பேரானந்தங்கொண்ட ஆஞ்ஜநேயன், வைதேகியின் நம்பிக்கையை இன்னும் அதிகரிக்க அவா கொண்டு மிகவும் மரியாதையாகப் பின்வருமாறு விண்ணப்பஞ் செய்தான்.

"புண்ணியமே உருவெடுத்த புனித தேவியே அடியேன் அவ் வீரச் செல்வனை ரகுகுல திலகனின் தூதனாக வந்த வானரன் என்ற உண்மையை விளக்கவும், உங்கள் சந்தேகம் தீர்ந்து மன உறுதியடையவும் அம்மகாத்மாவால் என்னிடம் உங்களுக்கு அனுப்பப்பட்ட இதோ இந்த ஸ்ரீ "ராம" நாமம் பொறித்த அவருடைய திவ்வியகணையாழி! இதைக் காட்சித் தருளும்! உங்களுக்கு மங்களம்; உங்கள் துக்கம் தொலைந்தது; க்ஷேமம் வந்துவிட்டது; தைரியமடைந்து மன உறுதி கொள்வீர்களாக!" என்று வணங்கிய வண்ணம் மிக்க பய பக்தியாய் அவள் கரங்களில் தான் கொண்டு வந்த கணையாழியைச் சமர்ப்பித்தான். ஜானகி தன் பதியின் மோதிரத்தை இருகரங்களாலும் பெற்று, அதைப் பன்முறை உற்று நோக்கி, கணவரைக் கண்டது போலவே களிப்புற்று அதைக் கண்களில் ஒற்றிக்கொண்டு இருதயத்துடன் அணைத்து லாலனை செய்து, அன்புப் பெருக்கில் ஆழ்ந்து முகமலர்ந்து, புன்முறுவல் பூத்து, ஆனந்த ஸாகரத்தில் அமிழ்ந்தது போலானாள். கணையாழியைப் பார்த்துப் பார்த்துப் பெருமிதங்கொண்டாள்.

[அக்கணையாழியின் பெருமைதான் என்னே! உயிருக்குயிரான கணையாழி! கணவரைப் படம் பிடித்துக் காட்டும் கணையாழியன்றே! கலியாணத்தில் தன் விரலில் கலியாண ராமன் பொருந்திய மங்கள மோதிரமல்லவா அது? கானகஞ் செல்லும் போது, தன் பட்டாடை மேல் பர்த்தா மர்வுரியைப் புனைய முனைந்த போது அக்கடும் முயற்சியில் கழன்று விழுந்த கணையாழி, இருவரும் மரவுரி கோலத்தில் ஒருவரையொருவர் கண்டுகளிக்கும்போது அவள் அதை எடுத்து அவர் விரலில் பதிக்க இருவரும் அப்புது உடையில் மறுமணஞ் செய்ததாக வேடிக்கை செய்து நகைக்க காரணமான மோதிரமல்லவா அது! ஆகா! அதை நினைக்க என்ன பரமானந்தம்! அன்றொரு நாள் ஆரணியத்தில் தாமரைத் தடாகத்தில் இருவரும் நீராடுகையில் அன்னப்பேடைக் கண்டு மோகித்தவர் போல் அதன் அழகை விவரித்துக்கொண்டே போக, தன் எழிலையும் அமைப்பு வனப்பையும் அவ்வன்னத்தினிடத்தில் காண்பதாக ஸ்ரீ ராகவன் சொற்றொடர் தொடுக்க, ஜனக நந்தினி அதைத் தாங்காது, நீரில் மறைந்து முகத்தைத் திருப்பி கோபத்தைத் தெரிவிப்பதாக எதிர் கரை நோக்கி விரைந்து செல்ல, ''ஓகோ! மோதிரம் காணுமே!'' வென்று காதலன் குரலைக் கேட்டு அவள் திரும்பி, தெள்ளெனக் கண்ணாடி போல் காட்டும் களங்கமற்ற நீரோடையில் நீந்தி விளையாடும், அன்னத்தின் முன்பு சிறு மணல் குவியலில் மேல் விழுந்திருந்த கணையாழியை எடுத்து அவள் நாதன் விரலில் திரும்பிப் பொதிக்க, உடனே இருவரும் சமாதான மடைந்து அந்நீரோடையில் வெகுகாலம் களியாட்டம் காணக்கொடுத்த அதே கணையாழியல்லவா இது! என்று அவள் மனத்திரை முன் பழைய இன்மக் காட்சிகள் புதிது புதிதாகப் புனையப்பட்டு எழுந்தன! ''எப்படித் தனியே சென்று அம்மானுடன் இவ்வளவு நேரம் விளையாட்டில் மறைந்திருந்தாய்? என்று, கவலையும், கோபமும் கொண்டு இன்னொரு நாள் மாலை ராகவன் சற்று உரத்த குரலில் தேவியைக் கேட்க ''எனக்குப் பயமென்ன? உங்கள் கணையாழியை என் விரலில் பொதித்திருக்கிறேனே. நீங்கள் என்னுடனே இருப்பதாகவே இம்மோதிரம் ஆதரவில் இவ்வளவு நேரமிருந்துவிட்டேன். மன்னியுங்கள்'' என்று பணிந்து கோபமுடன் விற்றிருந்த அவர் விரலில் அதை அமர்த்த, அவர் கோபம் பறந்து போன காரணம் இம்மோதிரமேயல்லவா? கரதூஷணர் வதம் முதல் இக்கணையாழியை ''என் கையில் அணைய வைத்து குகைக்கனுப்பினர். அதைக் கொண்டு தைரியங்கொண்டேன். பின்பு வெற்றியுடன் அவரைக் கண்டதும் கணையாழியை அவருக்கிட்டுக் கட்டியணைந்து கணவரை திரும்ப பெற்றவளாக உள்ளம் பூரித்தேன். அத்தகைய சரித்திர பெருமை பூண்ட விரக் கணையாழி இது! ஐயோ! அவர் பொய்மானைப் பின்பற்று முன் இக்கணையாழியை என்னிடம் கொடுத்துவிட்டுச் செல்லவில்லையே யென்று ஏங்கித் தவித்தேன். இதோ இப்போதே இதைக் காண்கிறேன். அன்பரைக் காண்கிறேன்'' என்று அவள் உள்ளக் களிப்பு பொங்கி எழுந்து பரவிற்று. உடனே இதை விளைவித்த காரணகர்த்தா எதிரில் காணும் ஆஞ்ஜநேயனல்லவா வென்றுணர்ந்து, அவனை நோக்கி ஆனந்தக் கடாட்சஞ் செய்தாள்.]

''வானரோத்தம! நீர் கலைஞர்; நீர் விக்கிரமர்; நீர் சமர்த்தர்; உம் ஒருவரால் இந்த அரக்க அரணும் பாதுகாப்பும், பெயரும் புகழும் ஓர் அல்பத்துரும்பாகச் செய்யப்பட்டு விட்டன, முதலை திமிங்கலம் முதலிய

ஜலஜந்துக்கள் நிரம்பிய இம் மாக்கடலை ஒரு பசுக்குளம்படி போல் விளையாட்டாகத் தாண்டி வந்ததால் உமது விக்ரமம் நன்றாக விளங்குகிறது. நீர் சாதாரண வானரமல்லவென்று தீர்மானிக்கிறேன். இந்த ராவணனைப் பற்றியோ மற்றைய அரக்கர்களைப் பற்றியோ சேனைகளைப் பற்றியோ எள்ளளவும் உமக்கு அச்சமில்லை. கவலையுமில்லை. கவித்தலைவ! நீர் ஜிதேந்திரியர்; நற்குண செய்கைகளை உடையவர்; வீர தீரனான ஸ்ரீ ரகு வீரனால் அனுப்பப் பட்டவர்; ஆதலின் என்னுடன் உரையாட உரியவராகிறீர். ஏனென்றால் வீரியத்தையும் தைரியத்தையும் சீலாதி குணங்களையும் ஆராய்ந்தறியாமல் எவரையும் தமது தூதராக அவர் அனுப்ப மாட்டார். அத்தருமாத்மா ரகுராமன் என் அதிர்ஷ்ட வசத்தால் க்ஷேமமாயிருக்கிறாரென்று சொன்னீர். அதை நம்பட்டுமா? சுமித்திரையின் ஆனந்தத்தை விருத்தி பண்ணும் காந்திமானான அந்த லட்சுமணரும் சௌக்கியமென்று நினைக்கிறேன். அப்படியானால் அவர்கள் என்னைத் தேடிவந்து இவ்விலங்கையை தமது காலாக்கினி போன்ற சினத்தினால் ஏன் இன்னும் சாம்பலாக்காதிருக்கின்றனர்? தேவர்களோ, கந்தர்வர்களோ அபராதஞ்செய்தவர்கள் எவராகிலும் அவர்களைத் தண்டிப்பதில் பின்வாங்காத சூரர்கள் அவர்கள். என் துக்கம் ஒழியாதபடி இன்னும் ஏன் பொறுத்திருக்கிறார்கள் ? என்னை விட்டுப் பிரிந்ததால் அதிகமாக மனக்கலக்கம் கொள்ளாது என்னை மீட்க வகை தேடிக்கொண்டிருக்கிறாரா என் பிராணநாதர்? தைரியத்தை விடாது எல்லா பிரயத்னங்களையுஞ் செய்துகொண்டிருக்கிறாரா ? தெய்வானுக்கிரகத்தை நாடி முயற்சிகள் பலனடைய இறைவனை வழிபாடு செய்து வருகின்றாரா? எட்டாத தூரத்தில் சிறை கிடக்கும் என்னிடத்தில் ஸ்ரீ ராகவருடைய அன்பு குன்றாமலிருக்கின்றதா ? வானர! இந்த இன்னலிலிருந்து என்னை விடுவிக்க அவர் வானர சேனையுடன் இங்கு வந்து ராக்ஷச ராஜனான ராவணனை புத்திர மித்திர பந்துக்களுடன் புடைக்கப் பார்ப்பேனோ? சுகங்களையே சதா அநுபவிக்கப் பெற்றவரும் துக்கத்திற்குரியவரல்லாதவருமான என் நாதர் என்னை விட்டுப்பிரிந்த சோகத்தால் தாமரை போன்ற அவரது மலர்ந்த திருமுகம் வாடாதிருக்கிறதா ? அவ்வப்போது கௌசல்யா தேவி, சுமித்திரை, பரத சத்துருக்கனர் இவர்களுடைய க்ஷேம சமாசாரம் அறியப் பட்டு வருகிறதா? அயோத்தியின் குசலத்தையும் கேட்கப்படுகிறதென்று எண்ணுகிறேன். என்னை மீட்க ஆற்றல் கொண்டு மனஞ்சோர்வுறாது இங்கு விரைந்துவந்து என்னைச் சீக்கிரம் விடுவிப்பாரா? என் நிமித்தம் துணைபுரிய பரதன் தமது சைனியத்தை அனுப்புவாரா? வானராதிபதியான சுக்கிரீவரும் தமது வானர வீரப்படைகளுடன் இங்கு வருவாரா? சுமித்திரை நந்தனரான லட்சுமணரும் இங்கு வந்து இக்கொடிய அரக்கர்களைத் தமது பாண வரிசைகளால் வெட்டி வீழ்த்துவாரா? ஸ்ரீ கோதண்ட தீக்ஷா குரு சிறிக்கிளம்பி இந்த ராவணனையும் அவனைச் சேர்ந்த அரக்க இனத்தையும் அறவே பற்றிப் பிடித்து எரித்து சாம்பலாக்குவதைக் காண்பேனோ? காண்பதற்கரிய காந்தி பொலியும் அவர் ஸௌந்தரவதனம் என்னை விட்டுப்பிரிந்த சோகத்தால் வாடாமலிருக்கிறதா? தருமத்தில் நிலை நின்று, அரசைத்துறந்து, சத்தியமே தருமமென்றுரைத்து, காடடைந்து, அதை நற்கருமத்தால் புனிதமாக்கி, அன்புடன் என்னுடனிருக்கையில் கவலையின்றிக் களிப்புற்றிருந்த தர்மப்பிரபுவான ஸ்ரீ ராமமூர்த்தி இப்பொழுது என்னைப் பிரிந்ததனால் தைரியத்தை விடாதிருக்கின்றாரா? ஸ்ரீ ராகவதூத!

எனது அன்பனிடத்திலிருந்து வந்தவர் நீர்; அவரைக் கண்டு களித்தவர் நீர்; ஆதலால் தன்யர் அவருக்கு நிகரானவர் எவருமிலர். அவர் எனக்கே உரியவர். அவரைப் போல் எனக்கு மாதாவுமில்லை; பிதாவுமில்லை; அவரே என் உயிர்; உடல் ஆவியும்! அவரைப் பற்றிக் கேட்கவும் அறியவுமே இவ்வுயிர் தரித்திருக்கிறேன். அவரைப் பற்றி இன்னும் ஏதாவது சொல்லுமே, என் தாகம் தீரும்'' என்று பரிவு தோன்றக் கூறி முடித்தாள் மைதிலி. ஸீதையின் செவிக்கினிய செஞ்சொற்கள் மாருதியின் மனத்தில் குதூகலத்தை உண்டாக்கின. புது உணர்ச்சி கொண்டு மிளிரும் பக்திப் பரவசத்தால் ஆஞ்ஜநேயன் கண்களில் ஆநந்தக் கண்ணீர் சொரிந்த வண்ணம் தாயை முடி தாழ்த்திப் பணிந்து பேசலுற்ருன்:—

''சகல ஜீவராசிகளுக்கும் ஜீவன் கடைத் தேற அருள் பொழிய வல்ல கருணைக் கண்களையுடைய தேவியே! என் ஐயனும் மஹாபாகுவான லட்சுமணரும் இங்கு இதுவரை விரைந்துவராத காரணம் உங்களை இங்கிருப்பவர்களாக அறியாதிருப்பதே. இனி இதை அறிந்ததும் எப்படி அனுஹலாதன் என்ற அஸுரன் சசி தேவியைத் தன் பதியிடமிருந்து அபகரித்து வந்து ஒளித்து வைத்திருந்த போது, அதை அறிந்த நிமிஷத்திலேயே இந்திரன் பறந்து வந்து அவளை மீட்டு அழைத்துச் சென்றனரே, அதே போல் இதோ ஒரு விநாடியில், ஸ்ரீ ரகுகுலோத்தமர் இங்கு விரைந்தோடி வந்து உங்களைத் திரும்பியடைவதைக் காணப் போகிறீர்கள். இதோ கணக்கிட முடியா பாணங்களை இக்கடலில் பரப்பிப் பாலம் வேய்ந்து ஆயிரக்கணக்கான சேனையை யழைத்துவந்து இலங்கையை ராட்சத பூண்டில்லாமல் வேரோடு களைந்து உங்களை திரும்பியழைத்துச்செல்லவிருக்கிருர். அவர் வெற்றியைத் தடுப்பவர் இம் மூவுலகிலுமில்லையே! ஆரிய மாது சிரோமணி! அவர் உங்களைக் காணுது வருத்தமுறுவதை என்னென்றுரைப்பேன்! அன்னையே! அவரது அழகிய தாமரைக் கண்களையும், இன்பமூட்டும் கொவ்வைக் கனி இதழையும், திவ்விய குண்டலங்கள் அணியப் பெறும் கர்ணங்களையும், பூர்ண சந்திர திருமுக மண்டலத்தையும் விரைவிலேயே கண்டு களிக்கப்போகிறீர்கள். அவைகளில் தேங்கிய துயர் களங்கத்தைத் துடைக்கப்போகிறீர்கள். மலைய மலையின் மேலும், விந்திய மலையின் மேலும், மேரு மலையின் மேலும், மந்தர மலையின் மேலும், தர்துர மலையின் மேலும், (இவைகள் எங்கள் வசிக்குமிடங்கள் பேரிலும்) நான் உண்ணும் கிழங்கு பழங்கள் பேரிலும், ஆணையிட்டுச் சொல்கிறேன். வைதேகி! சீக்கிரத்திலேயே உங்கள் நாயகரைத் தரிசிக்கப் போகிறீர்கள்.

''ஸ்ரீ ராகவரோ, உங்களை நினைத்து நினைத்து தேனிலும் இனிய பழங்களிலும் வெறுப்புக்கொண்டு அவைகளைத் தொடுவதில்லை. வேறு ஆகாரங்களையும் உட்கொள்ளுகிறதில்லை. அவர் நீர் பருகும போது உங்களையே கூவியழைக்கிருர். உங்களிடத்திலேயே அவர் மனம் லயித்து விட்டபடியால் அவர் திருமேனியில் ஈக்கள், கொசுக்கள், உட்கார்ந்தால் அவைகளை ஓட்டுவது கூட இல்லை. உங்கள் கணவர் தமது உடலை உங்களுக்கென்றே அர்ப்பணம் செய்துவிட்டார். அதைப் பராமரிப்பதும் உங்களுடையதாகையால் அதைப் பற்றி அவர் கவனிப்பதில்லை. எப்பொழுதும் உங்களையே நினைந்து நினைந்து உருகுகிருர். ''ஸீதே! ஹா! ஸீதே! என்று வாய் வெருவுகிருர். நித்திரை நீத்தார். பழமோ,

புஷ்பமோ, மானோ. மயிலோ, அன்னப்பேடோ, முழுமதியோ, செஞ்சாந்தோ, பறவை, பிராணிகளின் இன்னிசையோ, இன்பமூட்டும் பொருள்களனைத்தும் உங்களைக் கூவி யழைத்து நீங்கள் வரக்காணாது, ஏமாற்றமடைந்து மனங்கலங்கி சாய்ந்துவிடுகிறார். அம்மணி! அதை நினைக்கும்போது என் மனம் நீராய்க் கரைகிறது. "இது ஸீதைக்கு இனியது, அதை ஸீதை மிகவும் விரும்புவள்" என்று எந்த இனிய பொருள்களைக் கண்டாலும் இவ்வாறு பேசி சோகிக்கிறார், இதைக் கேட்டுக் கேட்டு உங்களுக்கு விருப்பு வெறுப்புள்ள பதார்த்தங்கள் இவையென்பது எங்கள் எல்லோருக்கும் பாடமாய்விட்டது. தேவி! மஹாத்மாவான அந்த அரசகுமாரர் உறுதியான விரதங்கள் பூண்டு எப்பொழுதும் கவலையிலாழ்ந்தவராய், இடையிடையே அன்பால் உங்கள் திருநாமத்தைக் கூவி அழைப்பவராய் உங்களை அடைய எல்லாவித பிரயத்தனங்களையும் செய்து வருகிறார்."

ஹநுமானின் ராம ஸங்கீர்த்தனையைக் கேட்கக் கேட்க, மைதிலியின் மனம் மகிழ்ச்சியடைந்தது. மாருதியின் சொல்லமுதம் அவள் கண்ணீரைத் துடைத்து சோகத்தை அகற்றிப் புளகாங்கித உணர்ச்சியைப் பரப்பியது. ஓர் புது இன்பங் கலந்த மனவாட்டம் எழுந்தது. தன்னை நினைத்து கலங்குகிறானே காகுத்தன்! என்று இவள் கவலையுறுகிறாள். மாருதி திரும்பிச் சென்று தன் நிலையைத் தலைவனிடம் சொல்ல, அவர் மேலும் கலங்குவரே, என்பதை நினைத்து, தேவி இன்னும் கலங்குகிறாள்.

---

## 37. ஹனுமானின் விச்வரூபம்

இவ்வண்ணம் சோகமும் களிப்பும் மாறி மாறிப் பெற்று ஒரு நிலையில்லாது கலவரத்துடனிருந்த வைதேகி, சிறிது நேரஞ் சென்று ஹநுமானை நோக்கி, 'அப்பனே, ஸ்ரீ ராகவர் வேறொன்றிலும் மனஞ் செலுத்தவில்லை யென்றுரைத்தது எனக்கு அமிர்தமாயிருக்கிறது, ஆயினும் என்னை விட்டுப் பிரிந்ததால் துக்கத்திலாழ்ந்திருக்கிறாரென்றுரைத்தது அவ்வமிர்தத்தில் விஷங் கலந்தது போலிருக்கிறது. இம்மானிடப் பிறவியின் தன்மையைத்தான் எவ்வாறுரைப்பது! கரை புரண்ட ஐச்வரியத்திலும், வரையற்ற துக்கத்திலும் முன் பிறப்பில் செய்த வினைகளின் பயனான விதியென்பது விடாது. ஜீவனைப் பற்றியிருக்கிறது என்றார்கள் சான்றோர். இவ்விதி என்ற பிணைப்பிலிருந்து எவரும் விடுபடுவதற்கில்லையென்பதை எங்கள் வாழ்க்கையே நிருபித்துக் காட்டுகிறதல்லவா? இல்லையேல், ஸ்ரீ ரகுநாதரும் நானும், லட்சுமணனும் ஏன் இங்ஙனம் எல்லையற்ற துயரத்திற்காளாக வேண்டும்? எனினும் இதையும் மீறிக் கடந்து, வெற்றி எய்தும் இலட்சியத்தையும் சக்தியையும் இதே மானிடப் பிறவி கொண்டுள்ளதென்று விளங்க. புயல் காற்றில் கொந்தளிக்கும் கடலில் அகப்பட்ட பாய்மரமில்லாத மரக் கலம்போல் துடித்துக்கொண்டிருக்கும் ஸ்ரீ ரகுவீரரும் என்று தான், தம் மனோ தைரியத்தால் கரை சேர்ந்து என்னையும் கைதூக்கிவிடப் போகிறாரோ? அரக்கர்களை அறவே அழித்து, அவர்களின் அரசனை அமர்களத்தில் ஆழ்த்திப் புதைத்து, இலங்கையை அடியோடு அழித்து, என்னை அழைத்துப் போகும் காலமும் வருமா?

இதோ ஒரு வருஷ காலம் முடிவடையப் போகிறதே! அதற்குள்ளாகவே என்னை மீட்கும் காரியம் நடந்தாக வேண்டும் என்று அவருக்கு அறிவுறுத்துவீரா? இன்னும் இரண்டே மாதங்களே எஞ்சி இருக்கின்றன. ஆகையால் காலதாமதத்திற்கு கொஞ்சமுமிட மில்லையென்று அறிவிப்பீரா? என்னுடைய நிலைமையையும், நெருக்கடியான சூழ்நிலையையும் அவர் உணர உரைப்பீரா?

"இக்கொடிய ராட்சதனால் எப்பொழுது என்ன நேரிடுமோவென்று துடித்து நடுங்கிக்கொண்டிருக்கிறேன். இன்னும் அநேக நாள் இதைச் சகிக்க இயலாது. ராவணன் உடன் பிறந்தவரான விபீஷணர் என்னைக் கணவருடன் திருப்பிச் சேர்த்துவிடுமாறு பலதடவை வேண்டியும் இவன் அதைக் கேளாதிருக்கிறான். லங்கையின் ஆபத்தை அவர் எச்சரிந்தும் அவன் வாளாவிருக்கிறான். ஹும்! அவன் கவனிப்பானா? யுத்தகளத்தில், எமன் அவனை எதிர்பார்த்திருக்கையில் நற்புத்தி புகட்டப்பட்டு அவன் திரும்புவனா? விபீஷணரின் மனைவி தன் மூத்த மகள் அனலை என்பவளை அனுப்பிவைத்தாள். அவள் மூலம் இச்செய்திகளை அறிந்தேன். என் நாதன் இதோ விரைந்து வரப்போகிறாரென்பதையும் அறிகிறேன். அதற்கு ஸூசகமாக முதலாவதாக நீர் வந்திருக்கிறீர். அதனால் என் மனமும் உணர்ச்சியும் கலங்கமற்றிருக்கின்றன. எனதுள்ளத்தில் அவர் வந்துவிட்டதாகவே ஓர் உணர்ச்சி பரவுகிறது. எனது ஐயன் உற்சாகமும், ஆண்மையும், வீரமும், சத்தியமும், செயலாற்றவிருக்கின்றனவென்றும் உணர்கிறேன். ஆகா! ஒரு துணையுமின்றி, தன்னந்தனியராய் தோள்வலியாலேயே ஜனஸ்தானத்தில் அவ்வளவு அரக்கர்களையும் அழித்துக் கட்டிய தனிப்பெரும் வீர தீரனின் ஆற்றலை நேரில் கண்ட எனக்கு, இங்கு அம்மகான் வந்து வெற்றிக் கொடி நாட்டுவாரென்பதில் எள்ளளவும் சந்தேகமில்லை! இந்திரனுடைய சக்தியையறிந்த இந்திராணியைப் போல், என் பிராணபதியின் பிரபாவத்தை முற்றிலுமுணர்ந்தவள் நான். ஸ்ரீ ராமனாகிய கதிரவன் பாணங்களாகிற கிரணங்களால் இவ்வரக்கர்களாகிற கொடிய கடலை, ஒரே நிமிஷத்தில் வற்றடிக்கப் போகிறாரென்றும் நன்குணர்கிறேன்." என்றாள்.

மேலும் கணவனைப்பற்றிப் புகழ்ந்துகொண்டே சோகத்தால் கண்ணீர் பெருக்குகிறாள்! இப்படித் துயரம் தாங்காது தவித்துப் புலம்பும் மைதிலியைக் கண்ணுற்ற ஹனுமானும் சோகங்கொண்டு, வாடிவதங்கினான். பின்பு சற்று மனந்தேர்ந்து, சொல்கிறான்:—"தாயே! வருந்தாதீர்கள். ஸ்ரீ ராகவன் நான் போய்ச் செய்தி சொன்ன உடனேயே வானரக் கூட்டங்களுடனும் கரடிக் கூட்டங்களுடனும் குதூகலங்கொண்டு, இங்கு வரப்போவதைக் கண்டு களிக்கப் போகிறீர்கள்! கமலம் போன்ற குளிர் முக அம்மையே! ஸ்ரீ ராமச் சந்திரரை நீங்கள் இப்போதே இந்த ராவணனிடமிருந்து, தலைவரிடம் கொண்டுபோய்ச் சேர்க்கிறேன். தயைசெய்து என் முதுகில் ஏறிக்கொள்ளுங்கள். வெகு ஜாக்கிரதையாய்த் தூக்கிக்கொண்டே கடலைத் தாண்டுவேன். ஏன்; வேண்டுமென்றால் இந்த லங்கையையே பெயர்த்து எடுத்துகொண்டு போய்விடுவேன். அம்மா! தேவியே! அக்னி பகவான் ஹோமாக்னியில் இடப்பட்ட பொருள் (ஹவிஸ்ஸை) எப்படி இந்திரனிடம் சமர்ப்பிக்கிறானோ, அப்படியே, பிரஸ்ரவணம் என்ற மலைக் குகையில் எழுந்தருளியுள்ள ஸ்ரீ ராம

மூர்த்தியிடம் உங்களைக் கொண்டுபோய்ச் சமர்ப்பிக்கிறேன்! கமலலோசனி! அஸுரர்களை யழிக்கும் விஷ்ணுவைப் போல் பராக்கிரமமுள்ளவரும் இந்திரனைப் போல் வெற்றியுள்ளவரும், உங்களைக் காண்பதில் ஆற்றல் கொண்டவரும், அதற்காக முயற்சியில் முனைந்தவருமாகிய ஸ்ரீ ராகவரை இப்பொழுதே காண்பீர்களாக! என் முதுகின் மேல் ஏறியருளும். சந்தேகம் வேண்டாம். ரோகிணி சந்திரனையடைவது போலும், இந்திராணி இந்திரனையடைவது போலும் நீங்களும் ஸ்ரீரகுநாதரை இப்போதே அடைவீர்கள்! என் சக்தியையும் பராக்கிரமத்தையும் கண்டருளுங்கள்! ஆகாயத்தில் அனாயாசமாகப் பறந்து செல்லும் ஆவேசத்தைக் காண்பீர்களாக!'' என்று தலை வணங்கினான் வாயு குமாரன்.

வைதேகியின் மனநிலை, இவ்வசனத்தைக் கேட்டதும் எவ்வாறிருந்ததென்று யார் உரைக்கமுடியும்? ஒரு பக்கம் மட்டிலடங்கா உள்ளக் களிப்பு; இன்னொரு பக்கம், எல்லாமறிந்தவன். இப்படி அடாத வார்த்தை சொல்லுகிறானே. பிறர் முதுகில் ஏறிச் செல்வதாவென்ற அருவருப்பு. இன்னொரு பக்கம், நாதனை இப்போதே அடைந்துவிடும் துடிதுடிப்பு, ஒருவேளை இவன் சொல்வது உண்மைதானோ வென்ற யோசனை; ராவணனுக்கும் இவ்வேகமும் சக்தியும் உண்டே, மதிம்பிட முடியா மாயாவியுங் கூடவல்லவா அவன், என்ற சந்தேகம் மறுபுறம் எழ இவ்வாறு எண்ணங்கள் மாறி மாறி உதித்து வந்தன போலும்!.

சற்று நேரம் சிந்திக்கிறாள் மிதிலைச் செல்வி. பின்பு சொல்கிறாள்:— ''வானரத் தலைவ! ஹனுமானே! நூறு யோஜனைக்கு மேல் என்னைத் தாங்கிச் செல்வதாக நினைப்பது உம்முடைய குரங்கு யோசனைதான் என்று எண்ணுகிறேன். இவ்வளவு சிறிய சரீரமுடைய நீர் எவ்வாறு என்னை ராகவரிடம் சேர்ப்பீர்? இது என்ன வார்த்தை?

அப்போது வல்லவனான வாயுபுத்திரன் ''அம்மணி! என் பலமும் பாரக்கிரமும் உங்களுக்குத் தெரியாது. இந்தச் சரீரமில்லை. இதோ பாருங்கள்!'' என்று சொல்லித் தன் சக்தியை விளக்கிக் காட்டும் ஒரு பேருருவத்தை அமைத்துக்கொண்டான். வானளாவி நின்றான்! கொழுந்து விட்டெரியும் கனல் காந்தி கண்ணைப் பறித்தது! மலை போன்ற பேருருவம்! சிவந்த முகத்தின் கம்பீரப்பார்வை! வஜ்ராயுதம் போன்ற பற்களும் நகவரிசையும், ஆண்மையே உருவெடுத்த, கதிகலங்க வைக்கும் பூதாகாரமான அற்புதத் தோற்றம்! ஆம்! இம்மகத்தான சக்தி வாய்ந்த வடிவம் லங்கையையே, ஏன் உலகையே பெயர்த்துப் புரட்டியெறியும் ஆற்றலுள்ளதுதான். இனி மனக் கவலையை விட்டு தன் முதுகில் ஏறிச் சென்று கணவனை யடையலாம் என்று உணரச் செய்தது!

இவ்வாச்சர்யமான நிகழ்ச்சியைக் கண்ணுற்றாள் வைதேகி. அவள் மனம் என்ன நினைத்ததோ, மாயையினால் உருவங்கள் மாற்றும் சக்தியையே சந்தேகித்தனளோ என்னவோ? ஹனுமானைப் பார்த்துச் சொல்லலுற்றாள்:

''வானரச்சிங்கமே! உமது சக்தியை அறிந்தேன். நூறு யோஜனை கடல் கடந்து இங்கு வந்து சேர்ந்த உமது சக்தி சாமானியமானதல்ல

வென்று சொல்லவும் வேண்டுமா? என்னைத் திரும்பி எடுத்து விரைந்து செல்லும் வேகத்தையும் அறிவேன். எனினும், அத்தனையும் எளிதில் செய்து முடிக்க வல்லவரான காகுத்தரின் எண்ணத்தையறிந்தல்லவோ நாம் செயலாற்ற வேண்டும்! அவருக்கு இது சம்மதமாகுமோ? இது முறை யாகுமோ? இவ்வாறு அவர் உம்மிடம் யோசனை விடுத்தனரா! மேலும் என்னுடைய நிலையில் உம்முடைய வேகம் என்னை மெய் மயங்கவைக்கும், மயக்கமடைந்தவளாய்க் கீழே வீழ்ந்து விடுவேன். திமிங்கிலம், முதலை முதலிய பிராணிகளடங்கிய கடலில் ஆகாயத்திலிருந்து விழுந்தவர்களுக்குப் பிழைப்பேது? உம்முடன் வரமுடியாததற்கு மற்றொரு காரணமும் உண்டு நீர் என்னைத் தாங்கிப் போவதை அறிந்த அரக்கர் அரசன் வாளா விருப்பனு? மாயாவிகளை உம்மை எதிர்க்க அனுப்புவனே! அப்பொழுது என்னைக் காத்து நிற்பீரா, அல்லது அவர்களுடன் போர் புரிவீரா? (ராவணன் ஜடா யுவுடன் போர் செய்தபோது நடந்த சம்பவம் மனதிற்கு வருகிறது போலும்!) கடலின் மேல் தாண்டி விரைகையில் எதிர்க்கும் அரக்கர்களுடன் போர் மூண்டால் என் கதி என்னவாகும்? உம் கதிதான் யாதாகும்? நான் நழுவி விழும்போது அப் பாவிகள் என்னைப்பற்றி மறுபடியும் ராவண னிடம் கொண்டு போய் விடுவார்களே! போர் கடுமையானுல் என்னை அவர்கள் கொல்லவும் கூடும். ஆகவே உம்முடைய முயற்சி எல்லாம் வீணு குமே! ஸ்ரீ ராகவனுடைய கீர்த்திக்கு குறைவு வராதபடியல்லவா நாம் நடக்க வேண்டும்! இது முக்கியமாய் கவனத்தில் இருத்தல் வேண்டும். அவர் உம்முடன் இங்கு வருவது அவர் கீர்த்திக்கு எவ்வளவு பொருத்த மான தென்று யோசித்துப் பாரும்.

மேலும், இன்னுமொரு முக்கியமானதும், மிகவும் பொருத்தமானது மான ஒரு காரணத்தால் உம்முடன் செல்ல முடியாதவளாக விருக்கிறேன். அதைக் கேளும். நான் எனது கணவருக்குச் சொந்தமானவள். அவர் ஒரு வரே என்னைத் தொடுவதற்கு உரியவராகிருர். அப்படியிருக்கையில் நான் வேறொரு சரீரத்தைத் தீண்ட எவ்வாறு இசைவேன்? அது தரும விருத்த மல்லவா? ராவணனுடன் வரவில்லையாவென்ருல் ராமர் இல்லாத சமயத் தில் பலாத்காரமாய் இழுக்கப்பட்ட அனுதையான நான் தனியாய் என்ன செய்ய முடியும்? ஆகையால் ஸ்ரீராகவர் இங்கு வந்து அரக்கர்களை மாய்த்து என்னை மீட்பதே அவர் புகழுக்கு ஏற்றதாகும். அவரை எதிர்ப்பவன் இப்புவியிலேது? ஆகவே, ஹநுமானே! ஐயனை உடனே இங்கழைத்து வாரும். அவரும் லட்சுமணரும் வந்து ராவணனைப் போரில் வென்று அரக்கர்களை அறவே ஒழிக்க வேண்டாமா? இதுதானே முறையாகும? இதுவே என் எண்ணம். அது நிறைவேற வேண்டிய பிரயத்தினம் செய் வீராக!'' என்று முடித்தாள்.

———

## 38. சூடாமணி அளித்தல்

வைதேகி தன்னுடன் வந்து விடுவது உசிதமல்லவென்று காரணங் கள் உரைத்ததைக் கவனித்து ஹநுமான் கடைசியாகக் கூறிய தருமத்தை மிகவும் போற்றினன். "தரும வழி காட்டும் தாயே! நீங்கள் உரைத்த

காரணங்கள் மிகவும் யுக்தமானவைகளே. அவை உங்களைப் போன்ற மேன்மையுடையாருக்கே தகும். உங்களைப்போன்ற மகா பதிவ்ரதைகளின் குணத்திற்கும் கௌரவத்திற்கும் பெண் தன்மைக்கும் பொருந்தினவைகளே! ஆம்! திண்கற்புடைய பெண்கள் தம் கணவரைத் தவிரப் பிறரை மனத்தினாலும் நினையார். அவரையன்றி மற்றொருவருடைய உடலையும் தொடவுங் கூடாதென்றுரைத்தது அம்மகாத்மாவின் கற்புடைய மனைவியான உங்களுக்குச் சரியானதே. உங்களையன்றி எவர்தாம் இத்தகைய குணமான சொல்லைச் சொல்லவல்லவர். தேவி! நான் இதோ விரைந்து சென்று, என்னிடம் நீங்கள் மொழிந்த அனைத்தையும் காகுத்தருக்குத் தெரிவிக்கிறேன். அன்னையே! ஸ்ரீராகவருக்குத் திருப்தியுண்டாக்கவும், உங்கள் பிரிவாற்றாமையால் அவருக்குண்டான வருத்தத்தைப் போக்கவுமே, என்றால் இச்சொல் சொல்லப்பட்டது; மற்றபடி அடியேனை வேறு விதமாக நினைக்க வேண்டாம். என் அறியாமையைப் பொறுத்தருள வேண்டும். 'கடலைத் தாண்ட வேண்டுமே! ஒருவரும் புகுதற்கரிய இந் நகரில் உட்புக வேண்டுமே' என்ற யோசனை பேரிலும், ஒருவருக்கும் சிரமம் தராமல் நான் சுலபமாய்த் தங்களைக் கொண்டு சேர்க்க முடியுமென்ற உறுதியாலுமே அவ்வாறுரைத்தேனே யல்லாது வேறில்லை. உங்கள் துயரத்தைக் காணச் சகியாமல் இப்பொழுதே உங்கள் பதியிடம் உங்களைச் சேர்த்துவைக்க எண்ணினேனே தவிர வேறில்லை. அவர் என் மேல் வைத்திருக்கும் விச்வாஸத்தாலும் எனக்கு அவரிடமுள்ள பக்தியாலுமே இந்த யோசனை சொன்னேன். அடியேனை மாறாகத் திருவுள்ளத்தில் நினைக்க வேண்டாம். மாசற்ற மன்னவன் மகிஷியே! உங்களிடமிருந்து, ஏதேனுமோர் அடையாளத்தை அவரிடம் கொண்டு போக எண்ணுகிறேன். அதைக்கண்டு ஐயன் களிப்புறுவார், தயை செய்தருளும்'' என்றான்.

ஹநுமானுடைய பக்தி யதிசயத்தையும் அன்புடைமையையுங் கண்டு வைதேகி மிகவும் ஆறுதலடைந்தாள். ஸ்ரீராமனின் பிரபாவத்தை நினைத்து, நீர் நிறைந்த கண்களுடன் மெல்லிய குரலில் ஹநுமானை குளிரக் கடாக்ஷித்து சொல்கிறாள் :— அப்பனே! நான் சொல்லப்போகும் சிறந்த முக்கியமான அடையாளங்களை அப்படியே அவரிடம் தெரிவிக்கவும். அன்றொரு நாள், சித்திரகூட மலையின் வடகிழக்குக் குன்றின் அடிவாரத்தில் மந்தாகினிக்குக் அருகேயுள்ள, ரமணீயமான சித்தாச்ரமத்தில் நாங்கள் இருந்தோம். அப்போது ஒரு நாள் பலவித மலர்ச் செடிகள் மிகுந்த சோலைகளில் புகுந்து வெகு தூரம் அலைந்து களைத்து விட்டதனால், என் நாதர் என் மடியில் அயர்ந்து நித்திரை கொண்டார். அப்பொழுது இறைச்சியை விரும்பிய ஒரு காக்கை வந்து தன் கூர்மையான மூக்கால் என் மார்பைக் குத்தியது. நான் ஒரு கல்லை விட்டெறிந்து அதைத் துரத்தினேன். அப்பொல்லாப் பறவை அக் கல்லைப் பொருட்படுத்தாது அங்கேயே இருந்துகொண்டிருந்தது. இதைப் பொறுக்காது வேகத்துடன் எழுந்தேன. அப்பொழுது என் வஸ்திரம் சற்று விலகிற்று. என கணவர் அப்போது கண் விழித்து என்னைப் பார்த்ததும் நான் வெட்கினேன். அவர் என்னைப் பரிகாசம் செய்ததாக உணர்ந்து, நான் அதைப் பொறுக்காது அழுதுகொண்டே அவர் மடியில் அமர்ந்தேன். களைப்பால் நானும் உறங்கினேன். அவரும் என் மேல்

சாய்ந்த வண்ணம் உறங்கிவிட்டார். கொஞ்ச நேரம் சென்றிருக்கலாம். அக்கொடிய காகம் மறுபடியும் வந்து என் மார்பில் குத்திக் காயப்படுத்தியது. நான் விழித்து அதைத் துரத்த முயன்றேன். அது என்னை விட்ட பாடில்லை. பல தடவை வந்து என்னைக் கீறிக் குத்திற்று. அப்பொழுது அக் காயத்தினின்று வருங்குருதித் துளிகள் துயிலுறும் என் கணவர் மேல் சிந்தின. அபராதஞ் செய்கிறவர்களைத் தண்டிக்கும் அவ்வழகர் உடனே விழித்தெழுந்தார்; என் காயத்தைக் கண்டார். சீறி எழும் சர்ப்பம் போல் சினங்கொண்டார். "துடையழகுடையாளே! உன்னை எவன் மார்பில் குத்திக் காயஞ் செய்தான். கோபங் கொண்ட ஐந்து தலை நாகத்துடன் எவன் விளையாட எண்ணினன்?" என்று கர்ஜித்த வண்ணம் எதிரே குருதி படிந்த கூரிய நகங்கள் கொண்ட காக்கையைக் கண்டார். அவ்வளவு தான்! அக்காகம் சாதாரணப் பறவையன்று. காக்கை வடிவங் கொண்டு வந்த இந்திரனுடைய மைந்தன் ஜயந்தனும் அவன். அவர் கோபத்துக் கஞ்சி, உடனே அது பூமிக்குள் மறைந்து விட்டது. அப்போது திண் டோளரும், ஞானியர் திலகருமான என் நாதர் அக் காகத்தின் அபராதத் திற்குத் தண்டனை விதிக்க எண்ணி அருகிலிருந்த ஒரு தருப்பைப் புல்லை எடுத்து அதில் ப்ரும்மாஸ்திரத்தை மந்திரித்து அக் காக்கையைக் குறித்து எறிந்தார். அவ்வளவுதான்! அத் தருப்பைப் புல் காலாக்கினியாய் ஜொலித்துக் கொண்டு காக்கையைப் பல விடங்களிலும் துரத்திக்கொண்டு பின் தொடர்ந்தது. ப்ரும்மாஸ்திரத்தால் பிராணபத்திலிருந்து தப்புவதற்காக அக் காகம் மூவுலகங்களையும் அநேக தரம் சுற்றி வந்தது. அதைக் காப்பாற்ற முன் வருவோர் எவருமில்லை. தந்தையும், தேவர்களும், ரிஷி கணங்களும் அதை காக்க முடியாமற் கைவிட்டார்கள். ஆபத்து நெருங்கவே வேறு மீட்சி காணது அலைந்து திரிந்து கடைசியில் 'ராகவா! சரண' மென்று அவர் காலிலேயே வீழ்ந்திளைத்தது. சரணடைந்தவரைக் காக்கும் பிரபுவான ஸ்ரீ ரகுநாயகர் அது தன்னைச் சரணாகதி செய்ததாக நினைத்து, அதனிடம் கருணை காட்டி உயிரை வாங்காதுவிட்டார். 'பிரம்மாஸ்திரம் வீண் போகாதது; அதற்கு எதாவது அர்ப்பணஞ் செய்' என்று அவர் குறிப்பிடவும் அது தனது வலது கண்ணை அதற்கு இலக்காகக் கொடுத்துத் தசரதருக்கும் ராமருக்கும் நமஸ்காரம் செய்து உயிரைக் காத்துக் கொண்டது.

[இப்படி ஸீதை காகாசுரன் கதையை ஹனுமானிடம் அடையாளமாகச் சொல்லி, பிரிவாற்றுமைத் துயரத்தால் ஸ்ரீ ராகவனை நினைந்து அவரிடம் பேசுவது போல் பேசுகிருள்.] "லோகநாதா! இப்படி எனக்காக ஒரு அற்பக் காகத்தின் விஷயத்தில் ப்ரும்மாஸ்திரத்தை உபயோகித்த நீங்கள் என்னைப் பலாத்காரமாய் அபகரித்து வந்த இக்கொடிய அரக்கன் விஷயத்தில் பொறுமை கொண்டிருப்பது என்ன காரணமோ? புருஷோத்தமர் அளவிடற் கரிய உற்சாகங் கொண்ட நீங்கள் என்னைப் பற்றிக் கவனியாததேன்? நாதா! நலை சிறந்த நாதனைப் படைத்த நான் அனாதையாய்க் கிடப்பது தகுதியாமோ? பிறர் துயரத்தை அகற்றும் விரதங் கொண்டவர் நீங்கள் என்பதை அறிவேன். அவர்களுள் யான் ஒருத்தி யல்லவோ? ஐயனே! நீங்கள் மகா வீரிய சாலி; அபாரமான ஆற்றலும் ஆண்மையுங் கொண்ட தனிப் பெரும் தீரர்; வரையறை யற்ற உங்கள் ஆற்றலைக் கலக்க வல்லவன் எவனுமில்லை என்பதையும் அறிவேன். வீர விலாஸத்தின் ஒப்

பற்ற பெருமையையும் சக்தியையும் படைத்தவர்களென்பதையும், நீங்கள் இந்திரனுக்கு மேலான பராக்கிரமம் வாய்ந்தவரென்பதையும் நன்கறிவேன். அஸ்திர வித்தையிலும் பயிற்சியிலும் வல்லுநர்; தருமமூர்த்தி: சத்தியவான்; மகா பலவான்; சுவாமி! நீங்கள் ஏன் இன்னும் இவ் வரக்கர்களை விட்டிருக்கிறீர்கள்?'' [ஹனுமானை நோக்கி]

“ஹநுமானே! என் துன்ப நிலையை இவ்வாறே உரைப்பீராக! ஆஞ்ஜநேய! ஸ்ரீ ராகவரை எதிர்ப்பவர்கள் தேவர்களோ, கந்தர்வர்களோ, அஸுரர்களோ, மருத்கணங்களோ எவருமில்லை. ஆகவே, அம் மகா வீரர் என்னை இன்னும் கவனியாதது ஏன்? என்று கேளும். மகா பலவானும் எதிரிகளை எரிப்பவரும் வீரருமான அந்த லட்சுமணர் தான் அண்ணலின் அநுமதி பெற்று இங்கு வந்து என்னை ஏன் இன்னும் மீட்காதிருப்பது, என்பதையும் கேளும். அவ்விரு ஆண் சிங்கங்களும் வாயு, அக்கினியின் வலிவுள்ளவர்கள்; தேவர்களையும் நடுங்க வைப்பவர்கள்; இன்னும் ஏன் அவர்கள் இங்கு வராமலிருக்கின்றனர், என்று நான் கேட்டதாகச் சொல்லும். இத்தகைய மகான்கள் என்னை அசட்டை செய்கிறார்களென்றால் நான் மகத்தான பாபம் செய்தவளாயிருக்கவேண்டும். இதில் சந்தேகமில்லை.'' என்று வாய்விட்டுப் புலம்பினாள் வைதேகி. வருத்தக் கண்ணீர் கரை புரண்டு அலை மோதியது.

[தம்பி லட்சுமணனை கணவனிடம் கொண்ட கவலையால் கடுஞ் சொற்களை அள்ளி வீசிக் கடிந்து கொண்டதை இப்பொழுது நினைத்து நினைத்து வருந்துகிறாளென்பதை இம்மொழிகள் ஸூசிப்பிக்கின்றன போலும் !]

மைதிலியின் வசனங்களைக் கேட்டு மாருதியின் மனம் அனல் வாய் மெழுகு போல் உருகி விட்டது. அவளைத் தேற்ற முற்படுகிறான். “அம்மணி அருள் புரியுங்கள். சோகத்தை ஒழியுங்கள். சத்தியத்தின் மேல் ஆணையிட்டுக் கூறுகிறேன். உங்களை விட்டுப் பிரிந்த ஸ்ரீ ராமரின் துயரம் அளவு கடந்தது. ஐயோ ! அவர் தவிப்பை எவ்வாறுரைப்பேன் ? சோகத்தில் மூழ்கியிருக்கும் அவரைக் கண்ட லட்சுமணரின் மனக் கலக்கமோ அவர் கலக்கத்திலும் பெரிதாகக் காணப்படுகிறது. நற்குணங்களையே அணிகலமாகப் பூண்டு பொலியும் பெருந் தேவியான உங்களைத் தரிசிக்கக் கொடுத்து வைத்த என் பாக்கியமே பாக்கியம் ! தாயே ! துக்கத்தைத் தவிருங்கள். இதோ துக்கத்தின் முடிவைக் காண்பீர்கள் ! கண்ணீரைத் துடையுங்கள், சாந்தியடையுங்கள். அதோ அவ்விரு வீரசிகாமணிகள் விரைந்து வருவதையும் அவர்கள் இவ்விலங்கையைச் சுட்டுச் சாம்பலாக்குவதையும் கணப்பொழுதில் காணப் போகிறீர்கள். விசாலாட்சி ! ஸ்ரீ ராகவன் ராவணனைப் போரில் மாய்த்து அவன் பந்துக்களையும் சேனைகளையும் மடித்து வெற்றியுடன் உங்களை அழைத்துக் கொண்டு போகப் போகிறார். இதில் எள்ளளவும் சந்தேகம் வேண்டாம். நான் திரும்பிப் போய்ச் செய்தி சொல்ல வேண்டியதுதான் தாமதம். ஆகையால் இதோ விரைந்து செல்லுகிறேன். இன்னும அவர்களுக்குச் சொல்ல வேண்டிய செய்தியிருந்தால் சொல்லியருளுங்கள்.'' என்று பணிந்தான் வாயு குமாரன்.

ஸீதா பிராட்டியின் கண்கள் மலர்ந்தன. ஒருவாறு மனந்தேறினள். புத்தூக்கம் கொண்டாள். "தரும தேவதையான கோசலா தேவி எந்த உத்தமரை மகனைப் பெற்றரோ அவரை நான் பணிவதாகத் தலை வணங்கிப் பணிவீராக! அவருடைய க்ஷேமத்தை நான் விசாரித்ததாகச் சொல்லும்; பின்பு அவர் தம்பி லட்சுமணரையும் விசாரித்ததாகச் சொல்லும். அவர் சுமித்திரா தேவியின் சத்புத்திரன்; தருமாத்மா; எல்லா ஐசுவரியத்தையும் எல்லா ராஜ போகங்களையும் தன் சுக வாழ்வையும் தியாகஞ் செய்தவர். அண்ணலின் பக்தி ஒன்றையே மேலானதாய்க் கொண்டவர். நாட்டை நீத்து பெற்றோர்களை விட்டுத் தமையனை ராகவரைப் பின் பற்றிக் கானகம் வந்தவர். கண்ணை இமை காப்பது போல் காகுத்தரைக் கானகத்தில் கண் விழித்துக் காத்து வரும் களங்க மற்ற மகாத்மா. மகா சக்திமான்; இணையற்ற சூரன். சிங்க வேறு போல் கம்பீரமான தன்மை கொண்டவர். தூய மன முடையோன்! என்னையும் ஸ்ரீ ராமரையும் சாட்சாத் தாய் தந்தையராகவே கருதிச் சேவை செய்யுஞ் சத்திய சீலன். ஐயோ! இக்கொடிய வரக்கன் என்னை அபகரிக்கும் போது அவர் இல்லாது போய் விட்டாரே. இருந்தால் என் கதி இப்படியாகுமா? ஸ்ரீ ராகவருக்கு என்னைக் காட்டிலும் அன்பு கொண்டு எப்பொழுதும் சேவை செய்யும் தம்பி! ஸ்ரீ ராகவர் எவரைக் கண்டு தந்தையைக் கூட நினைத்து வருத்த முறாதிருக்கின்றனரோ, எந்தக் காரியத்தில் ஏவப்படினும், அதைக் குறையின்றிச் செய்து முடிக்கும் ஆற்றலுடையார் அவர். மிருதுபாஷி. வெகு ஜாக்கிரதை யுடனிருப்பவர். ஒழுக்கத்தை உருவாக்குபவர். அத்தகைய லட்சுமணனிடத்தில் நான் க்ஷேமம் கேட்டதாகச் சொல்ல வேண்டும். வானர வீர! எவ்விதம் ஸ்ரீ ராகவர் என் துக்கத்தை அகற்றுவரோ அக்காரியத்தை வெற்றி பெறச் செய்யும் கடமை உமதேயாகும். எந்த ஸ்ரீ ராகவர் உமது முயற்சியால் எனது பிரயத்தினத்தில் இறங்குவரோ அதைச் செய்வது உமது பொறுப்பேயாகும். அச்சூரரான என் நாதருக்கு அடிக்கடி நீர் இதை அறிவுறுத்த வேண்டும். "இது சத்தியம்! தாசரதி! ஒரே மாதம் தான் உயிர் தரிப்பேன் வீர! எப்படிக் கௌசிகி என்பவளை உசத்தியர் எனும் அவள் கணவர் வருணனிடமிருந்து பாதாளத்திலிருந்து மீட்டனரோ, அப்படியே என்னை இக்கொடியனின் சிறையிலிருந்து மீட்க வேண்டும் என்று உடனே உரைப்பீராக" என்று ஹநுமானுக்கு அறிவுறுத்தி தன் ஆடையில் முடிந்து வைத்திருந்த தன் சூடாமணியை (ஜடை பில்லை ஆபரணத்தை) எடுத்து, "இதை ஸ்ரீ ராகவரிடம் என் அடையாளமாகச் சேர்க்கக்கடவீர்" என்று மாருதியிடம் ஒப்படைத்தாள் வைதேகி.

அவ் வாபரணத்தைப் பெற்ற ஹநுமான் அதைக் கண்களில் ஒற்றிக்கொண்டு வைதேகியை அடி பணிந்து, வலம் வந்து, கரங் குவித்து, எதிரே வந்து விடை பெற்றுப் போகக் காத்து நின்றான். அத்தலை சிறந்த ரத்தினாபரணத்தை அடையாளமாகப் பெற்ற ஹநுமான் அளவிட முடியாத உள்ளக் களிப்புடன் தலைவனிடம் திரும்பிச் செல்லும் புது உற்சாகங் கொண்டான். வீரத்தின் வேகம் வைரம் பாய்ந்து, உடல் காந்தி பெற்றது. ரகுநாதனைத் திரும்பி யடைந்து காணப் போகும் பேராவலில் குதூகலங்கொண்ட மனமுடையவனாய்த் துடித்து நின்றான் வாயு குமாரன்.

---

## 39, ஹநுமான் அன்னைக்கு ஆறுதல் அளித்தல்

சூடாமணியைப் பெற்றுக் கொண்ட பின்னர் திரும்பிச் செல்ல ஆயத்தமாகும் ஹநுமானைக் கவனித்து, அவன் உற்சாகத்தை உணர்ந்து நடக்க வேண்டியதைப் பற்றி எச்சரித்தாள் ஜானகி தேவி.

அவள் சொன்னாள் :—

''ஹநுமானே ! ஸ்ரீ ராகவர் நன்ருய் அறிந்த ஆநந்தமளிக்கும் ஆபரணமிது. இதைக் கண்டவுடனே அவருக்கு என்னைப்பற்றியும், என் தாயைப் பற்றியும், தசரதரைப் பற்றியும் எண்ணங்கள் எழும். எனினும் அவைகளில் காலங் கழிக்காது நடக்க வேண்டிய காரியம் மகத்தானது என்பதை மனத்தில் வைக்கவேண்டுமென்றும் எச்சரிப்பீராக. இதன் சித்திக் குரிய முயற்சிகள் உடனே ஆரம்பமாக வேண்டும். வானரத் தலைவ ! இந்த லட்சியம் ஈடேறுவது உமது பொறுப்பு என்பதை மறக்க வேண்டாம். உம் முயற்சியே என் துயரத்தை ஒழிப்பதாகும். உமது முழு ஜாக்கிரதையும் இச் செயலில் புகுத்த வேண்டும்'' என்ருள்.

ஆஞ்ஜநேயன் இந்த எச்சரிப்பு வார்த்தைகளைத் தலை மேற்கொண்டு பணிந்தான். தகுந்த உறுதி அளித்து விட்டு விடை பெறக் காத்து நின்ருன். அவன் பிரயாணமாகத் தயாராயிருப்பதைக் கவனிக்கிருள் மைதிலி. ''ஐயோ இவனுடன் பேசிக் கொண்டிருந்ததால் என் துக்கம் கொஞ்சம் மறைந்திருந்தது. இவன் போன பின்பு என் கதி என்ன வாகுமோ''வென்று எண்ணமிட, மறுபடியும் துயரமடைந்தாள். கலங்கிய கண்களுடன் ''ஹநுமானே ! ஒருவரையொருவர் விட்டுப் பிரியாத அந்த ராம லட்சுமணர்களுக்குக் குசலம் பகர்வீராக! உமது அரசர் ஸுக்கிரீவருக்கும், அவர் மந்திரிமார்களுக்கும் வானரத் தலைவர்களுக்கும் நான் குசலம் விசாரித்ததாகச் சொல்லி, என்னை மீட்பதில் ஊக்கங்கொண்டவர்களாகச் செய்யும். எப்படி என்னை ஸ்ரீ ராகவன் இச்சோக ஸாகரத்தினின்று விடுவிப்பரோ, அவ்வாறு செய்யவேண்டியது உமது கடமை என்பது நினைவிருக்கட்டும். என் துயரத்தை போக்குவது மகத்தான காரியம். இந்த வாக்குச்சகாயம் செய்வீரனல் உமக்கு மகத்தான புண்ணியமுண்டு. ஸ்ரீ ராகவன் இங்கு விரைந்து வருதல் உம்மொழிகளிலிருக்கின்றது. அவர் எவ்வண்ணம் உடனே விரைந்து வருவரோ அவ்வண்ணம் உம்மொழிகள் தூண்டட்டும்'' என்ருள்.

மாருதி மனமார்ந்து மைதிலியை அடி பணிந்தான். மன முருகிக் கண்ணில் நீர் சொரியச் சொல்கிருன். ''தாயே ! தைரிய மடையுங்கள். கவலையை யொழியுங்கள். எதிரிகளைத் துரும்பு போல் சிதற வடித்து எவர் உங்களை அடையவிருக்கிருரோ அக்காகுத்தரை, வானரச் சேனையுடன் இதோ காணப் போகிறீர்கள். இதைச் சத்திய மென்று கொள்ளுங்கள். சரமாரி பொழியும் சுத்த வீரனை ரகுவீரன் முன் எதிர் நிற்பவன் எவன் ? உங்களுக்காக சூரியனே, சந்திரனே, அக்கினியோ, இந்திரனே எவனையும் போரில் முறியடிக்கும் வல்லாளர் அவர். தாம் செய்யும் தொழில்களில் வெற்றியைக் காண்பவர். ஜனக நந்தினீ ! உங்கள் நிமித்தம் என்ற ஒரு லட்சியத்தைக் கொண்டே திண்டோளனை ராமருக்கு வெற்றி உண்டாகப்

போகிறது. இது நிச்சயம். ஆகையால் இக் கடலைக் கடப்பதும் ராவணனை மாய்ப்பதும் அவருக்கு எம்மாத்திரம்? இது உறுதியான உண்மையாகையால் உற்சாகத்துடனிருக்க வேண்டுகிறேன்'' என்று வீராவேசத்தில் ஊக்கமளித்தான்.

ஜானகியின் ஆறுதல் சற்று நிலை பெற்றது. களிப்புற்று, மனங் குளிர்ந்து, வாத்சல்யம் பெருகி ஹநுமானைப் பார்த்து, ''வெற்றி வீரனே. ஒரு வேளை நீர் இங்கிருக்க வேண்டு மென்று விரும்பினால், தனியான ஓரிடத்தில் ஒரு தினம் தங்கி நாளைப் போகலாம். நீர் அருகே இருக்கிறீர் என்பதால் கொஞ்ச காலம் சோகத்திலிருந்து எனக்கு விமோசனம் கிடைக்கும். மறுபடியும் திரும்பி வருவதாகச் சொல்லி விட்டுப் போனாலும் எனக்குத் திகிலாய்த்தானிருக்கும். நீங்கள் யாவரும் திரும்பி, யுத்த சன்னத்தர்களாய் வரும் வரை நான் எத்தகைய வேதனையுற வேண்டுமோ அறிகிலேன். இருக்கட்டும். உம்மை ஒன்று கேட்கிறேன்; கரடிக் கூட்டங்களும் வானரச்சேனைகளும் இந்த மகத்தான கடலைத் தாண்டுவதெப்படி? கருடனுக்கும் வாயுவிற்கும் உமக்கும் தானே இச் சக்தி உண்டு. மற்றவர்கள் இங்கெய்வது எவ்வண்ணம்? காரியத்தை முடித்து வைப்பதில் நீர் ஒருவரே போது மென்றாலும், ராகவர் சேனையுடன் இங்கு வந்து ராவணனைப் போரில் மாய்த்து, அரக்கர்களை அறவே யொழித்து, முழு வெற்றி பெற்று, என்னை அழைத்துப் போவதல்லவோ மேன்மையான முறையாகும்? பகைப்படையைப் புடைத்து, லங்கையை சிதறவடித்து, இட மெங்கும் பாணங்களால் பரப்பி, வெற்றி வீரனாய் அவர்கள் என்னை அழைத்துப் போவது அவருக்கு ஏற்றதன்றோ? அவர் பராக்கிரமத்திற்கு உற்ற உதவி எதுவோ அது உம்மால் தான் ஆக வேண்டும்.

பொருத்த மானதும் பொருள் பொதிந்ததுமான இச் சொற்களைக் கேட்ட ஆஞ்சநேயன் அன்னையைப் பாராட்டி, ''தேவி, வானரப் படைகளின் தலைவரான வானராதிபதி ஸுக்கிரீவர் இந்த விஷயத்தில் கொண்டிருக்கும் தீர்மானத்தை உங்கட்குத் தெரிவிக்க விரும்புகிறேன். அவரால் தேர்ந்தெடுக்கப்பட்ட பிரபலமான வானர வீரர்கள் அநேகம், அவர்கள் எங்கும் செல்ல வல்லவர்கள். ஆகாயத்தையும் கடலையும் அனாயாசமாய்க் கடக்க வல்லவர்கள். மலைகளையும் மரங்களையும் மதில்களையும் பொடியாக்கும் மகா பலிஷ்டர்கள். உலகை வாயு வேகத்தில் பன்முறை சுற்றி வந்தவர்கள். அந்த ஸுக்ரீவ சன்னிதானத்தில் என்னைக் காட்டிலும் மேலானவர்கள் அநேகர். சமமானவர்கள் சிலரே. எனக்குத் தாழ்ந்தவர்கள் ஒருவருமேயில்லை. அவர்கள் தூதனாய் வந்தவன் நான். சாதாரணமான ஒருவனைத் தானே தூதனையனுப்புவது முறை. உயர்ந்தவர்கள் அனுப்பப் படுவதில்லையே! நானே கடல் தாண்டி இங்கு வந்துவிட்டேனென்றால் மற்றவர்களைப் பற்றி கேட்க வேண்டுமா? ஆகையால், தேவி! பரிதபிக்க வேண்டாம். உங்கள் சந்தேகம் ஒழியட்டும்; சோகம் தொலையட்டும். வானரத் தலைவர்கள் ஒரே பாய்ச்சலாக இங்கு வந்து குதிக்கப் போகிறார்கள். அவ்விளஞ் சிங்கங்களான ஸ்ரீ ராம லட்சுமணர்கள் என் முதுகில் அமர்ந்து இதோ விரைந்து வருவதைக் காண்பீர்கள். வீரரும், புருஷோத்தமரும் ஈடும் எடுப்பு மற்றவர்களுமான ரகுவீரர்கள் இருவரும் இதோ இந்நகரில் சரமாரி பொழிந்து அரக்கர்களை யழித்தொழிக்க விருக்கிறார்கள்.

பெண் திலகமே! எழில் பொழிலம்மையே! ரகுகுலத்தை ரஞ்சிப்பிக்க வைக்கும் ரகுநாதனான ஸ்ரீ ராமச்சந்திர மூர்த்தி இந்தா ராவணனை அவன் உற்றார் உறவினருடன் ஒருங்கே யொழித்து உங்களை அழைத்துக் கொண்டு அயோத்தி யடையப் போகிறார். ஆகவே, கவலையை விடுங்கள் கொஞ்சகாலம் பொறுத்திருங்கள். கொழுந்து விட்டெரியும் அக்னியின் வேகங்கொண்ட ராம கோபத்தை இந்த லங்கை காணப் போகிறது. சிறிதும் சிந்தனை வேண்டாம். ஸீதாதேவி! ராவணனும் மற்றும் அவன் குலமும் பூண்டோடு நாச மடைவதைக் காணப் போகிறீர்கள்! சுத்த வீரனின் வெற்றி விலாசத்தில் கோதண்டபாணியாய் இளையவருடன் லங்கை வாயிலில் இதோ தோன்றப் போகிறார் தாசரதி! மேன்மை தாங்கிய மைதிலி தேவி! இந் நகரின் மலையும் மதில்களும் மண்டபங்களும் வீடுகளும் நகங்களையும் பற்களையுமே ஆயுதவகளாகக் கொண்ட வானர சைனியங்களால் தவிடு பொடி யாவதைப் பார்க்கப் போகிறீர்கள், உங்கள் பால் பேராவல் பூண்ட அப் பெரு வீரர் ஸ்ரீ வீரராகவர், உங்களை யடையத் துடித்து நிற்கிறார் என்று உணர்ந்து உற்சாகங் கொள்ளுங்கள், தாயே! இனிக் கண்ணீர் விட வேண்டாம். மனக் கலக்கம் சற்றேனும் கொள்ள வேண்டாம். உண்மையை யுரைக்கிறேன், தேவி! இந்திராணி இந்திரனுடனிருப்பது போல் நீங்களும் இதோ உங்கள் பதியுடன் சேரப் போகிறீர்களென்பது ஸத்யம்! ஸ்ரீ ராகவருக்கும் லட்சுமணருக்கும் நிகரானவர்கள் எவர் இருக்கின்றனர்? அவர்களை எதிர்த்து நிற்பவன் இங்குளனோ? உங்களுக்குத் தெரியாதா? அம்மணி! அக்கினி, வாயு இவைகளின் சக்தியையும், ஆண்மையுங் கொண்ட அவர்கள் இதோ வருகின்றனர். ஐயம் வேண்டாம்! தேவி! இந்த ராட்சதக் கூட்டங்களிடையே நாசமாக விருக்கும் இங்கே நீங்கள் நீண்ட காலம் இருக்கப் போவதில்லை யென்று உறுதி கூறுகிறேன். இதோ உங்கள் நாதரின் வரவு. நான் அவர்களிடம் போய்ச் சேரும் வரை சிறிது பொறுத்தருளுங்கள். இதோ வெற்றி காண்பீர்கள்! வெற்றிக் கோமான் விரைந்து வருகிறார், உள்ளம் தெளியுங்கள்'' என்று வேண்டினான்.

---

## 40. அன்னை ஆஞ்ஜநேயனுக்கு விடை யளித்தல்

ஆஞ்ஜநேயனின் வீர மொழிகளைக் காதாரக் கேட்ட வைதேகி மிக்க ஆறுதலடைந்தாள். "மனங் குளிரப் பேசின மாருதி! பாதி முளைத்து வாடிப் போன பயிர், மழை பொழியப் பெற்று மிளிர்வது போல் நான் உம் வார்த்தைகளைக் கேட்டு மகிழ்ச்சி யடைகிறேன். என் நாதனை யடைய உள்ளமும் உடலும் துடிக்கின்றன; இவ்வாசை நிறைவேறுவது உம் வசத்திலிருக்கிறது. ஆகவே, விரைந்து அவரைக் கூட்டு வாரும். என்னைத் தீண்டிய அல்ப காகத்தின் மேல் எறிந்த ஒரு துரும்பின் பிரபாவத்தை அவருக்கு நினைப்பூட்டும். ஒரு நாள் நாங்கள் இருவரும் ஓடியாடிக் களிக்கும் போது என் திலகம் அழிந்ததைக் கண்ணுற்ற அவர் அருகிலிருந்த காவிக் கல்லை உறைத்து என் கன்னத்தில்

அன்போடு அவர் திலகமிடவில்லையா வென்பதை அவருக்கு நினைப்பூட்டும். "இப்படி உம்முடனே விளையாடிக் களிப்புறச் செய்த உமது பிரிதநாயகி அபகரிக்கப்பட்டதையும் அரக்கிகள் மத்தியில் காவலிலிடப்பட்டயையும் எவ்வளவு காலம் தான் சகித்திருக்கப் போகிறீர்?" என்று கேட்டதாகச் சொல்லும். "இதோ நான் கொடுத்தனுப்பிய சூடாமணியைப் பாருங்கள்! இதை எவ்வளவு தடவை என் தலையில் சூட்டி மகிழ்ந்தீர்கள்? கூந்தலையும் கையிலெடுத்து வைத்துக் கொண்டு மகிழ்ந்தீர்களே? அக் கூந்தலாள் இப்போது எங்கிருக்கிறாள்? எத்தகைய வேதனைக்குட்பட்டிருக்கிறாள் தெரியுமா? திருப்பவும் அச் சூடாமணியை அக் கூந்தலில் உங்கள் கையினால் சூட்டவேண்டாமா? அவ்வாபரணம் உங்களால் பல தடவை கையாளப்படலாலனையடையப் பெற்று என்னிடமிருந்து உங்களை நினைப்பூட்டிக் கொண்டிருந்தது. இப்பொழுது அதை உங்களுககு அனுப்பி விட்டேன். இதன் கருத்தை நீங்கள்தான் அறிய வேண்டும்" என்று நான் சொன்னதாக நீர் அவருக்கு வற்புறுத்திக் கூறுவீராக. அவர் இங்கு வரும் வரை என் உயிர் துடித்துக் கொண்டிருக்குமென்று நினைப்பூட்டும். "இங்கு உங்களை நம்பி இவர்களின் கடுஞ் சொற்களைப் பொறுத்திருக்கிறேன். இனி அதிக காலம் தாங்க முடியா" தென்றும் அவருக்கு எச்சரிப்பீராக! "ஒரு மாதம் தான் காத்திருப்பேன். அதற்குள் நீங்கள் வரவில்லையாகில் நான் உயிர் துறப்பேன். இது என் பிரதிக்ஞை" யென்றும் அவர்கள் ஞாபகத்திற்குக் கொண்டு வாரும்! இக்கொடிய அரக்கனின் கொடிய பேச்சுக்களையும் அவன் குரூரத்தையும் கண்ட நான் இனி என் நாதனின்றித் தனியே உயிர் தரியேன், என்றும் அவர் கவனத்தில் உணர்த்துவீராக" இப்படிக் கணவனை நினைத்து நினைத்து, சொற்கள் ஞாபகத்தில் குவிய, கண்களில் நீர் தாரை தாரையாகப் பெருக, நெஞ்சடைக்க, பேச முடியாமல் கலங்கினாள், ஜானகி!

இத் துயரக் காட்சி ஹநுமான் மனத்தைப் பிளந்தது. அவன் உடல் பதறிற்று! 'ஆகா! கற்பிற் கனிந்த கனி. இவள் எங்ஙனம் நேரில் கணவன் அன்புப் பொழிலின்றி வாடி வதங்கித் தத்தளிக்கிறாள்?' என்று ஆவிபோகத் துடித்து, கை பிசைந்து, கண்ணீர் வழிந்தோட, வருத்தத்தால் வாய் தழை தழைக்கத் தலை குனிந்து தெரிவிக்கிறான்:—"தாயே, வருந்தாதீர்கள். மனந்தேறுங்கள். இப்படித் தவிப்பது தங்களுக்கேற்றதாகுமா? அம்மையே சத்தியத்தின் மீது ஆணையிடுகிறேன். இதோ நொடிப் பொழுதில் ஸ்ரீ ராகவர் உங்களை யடையப் போகிறார். உங்களைப் பிரிந்து அவர், ஐயோ! என்ன பாடுபடுகிறார் தெரியுமா? உங்கள் துக்கத்தில் எதையும் வெறுத்திருக்கிறார். உங்களை மீட்பது என்ற ஒரே எண்ணத்தால் மூச்சு வைத்திருக்கிறார். தம்பி லட்சுமணரும் அவ்வாறே ஏங்கித் தவித்துக் கொண்டிருக்கிறார். உங்கள் மீட்சியால் ஏதாவது தாமதமெனில் சர்ப்பம் போல் சீறுகிறார், இவ்விஷயத்தில் ஒன்று கூறுகிறேன். அம்மணி! ஸுக்கிரீவர் உங்களைத் தேட வானரங்களை அனுப்பச் சற்றுத் தாமதமாயிருந்தாரென்று நினைத்த அந்த ராகவர்களின் கோபம் ஊரையே எரித்து விடும் போலிருந்தது. அக் கோபத்தின் வேகத்தை நானறிந்திருக்கிறேன்! ஆகையால் உங்களை யடையும் முயற்சியில் சிறிதளவேனும் பின் வாங்குகிறவர்களல்ல அவ்விரு சகோதரர்களும். ஆகையால், ஸீதா பிராட்டி! துக்கத்தை விடுங்கள். கண்ணைத்

துடையுங்கள்; சாந்தி கொள்ளுங்கள்; சற்றுப் பொறுங்கள். இதோ அவ் விரு புலிகளும் இந் நகரத்தைச் சுட்டெரிக்கப் போவதைக் கண் குளிரக் காணப் போகிறீர்கள் ! அரக்கர் பூண்டையே அறவே ஒழித்து உங்களை அழைத்துச் செல்ல விரைந்து வருகிருர்கள். பயப்படாதீர்கள்; துளியும் சந்தேகம் வேண்டாம்; இதோ நான் திரும்பிச் செல்ல வேண்டியது தான் தாமதம் ! தாயே நான் செல்லுமுன் இன்னுமேதாவது அடையாளமிருந் தால் அதையும் அளித்து அனுப்புங்கள்'', என்ருன்.

சற்று ஆறுதலடைந்த வைதேகி ''ஹநுமானே ! நான் கொடுத் தனுப்பும் தலையணி அடையாளம் ஒன்றே எல்லாவற்றிலும் சிறந்தது. இதை அவர் கண்டதும் நம்பிக்கை யடைவார். மேற் கொண்டு ஆக வேண்டியது உம் கையிலும் உம் வசனங்களிலுமுள்ளது !'' என்று திட மாக உரைத்தாள்.

வானரச்ரேஷ்டன் ''அப்படியே அம்மணி'', யென்று ஆபரணத்தை வெகு ஜாக்கிரதையுடன் வைத்துக் கொண்டு அன்னையைத் தலை சாய்த்து அடி பணிந்தான். விடை கொள்ளக் காத்து நின்ருன். மைதிலி கவனிக் கிருள். கண்ணெதிரே ஹநுமான் உருவம் திரும்பிச் செல்லும் ஆற்றல் கொண்டு வளர்ந்து ஓங்கி வந்தது. சரி ! இதோ இவன் ஸ்ரீ ராகவனிடம் பாய்ந்து பறந்து போகப் போகிருன் என்று உணர்ந்தாள். தானும் அவ் வரைக் கனப் பொழுதில் கணவனை யடைய முடிய வில்லையே என்று மனம் வருந்தினள். பின்பு, ''ஆஞ்சநேய ! போய் வாரும், வழியில் ஒரு தடையும் இல்லாதிருக்கட்டும். ஸ்ரீ ராம லட்சுமணர்களையும் மற்ற வான ரத் தலைவர்களையும் குசலம் வினவும், என் நிலையை அவர்கட்கு நன்குணர்த் தும்'' என்ருள். ஹநுமானும் திரும்பும் எண்ணத்தில் முன்பே ஸ்ரீ ராம னிடம் திரும்பிச் சென்றதாய் உணர்ச்சி கண்டான். உற்சாகம் கொண் டான் !

---

## 41. அடட்வணை யில்லா நிகழ்ச்சி

[வனிதையர் திலகமான வைதேகியின் பிரிவுரையைப்பெற்ற வாயு குமாரன் ஆசிகளுடன் திரும்பிச் செல்ல ஆயத்தப்பட்டு, அன்னையிடம் விடைபெற்று அவ்விடம் விட்டு அகன்ருன். இதோ நொடிப்பொழுதில் நாயகனிடம் தாவிப் பாய்ந்து செய்தி யுணர்த்தப்போகிருன், என்று மன நிம்மதியடைந்த மாதிரி, ரகுவீரர்கள் அதிவிரைவில் லங்கையில் வந்து குதிப்பது நிச்சயம் என்றும் எதிர்பார்த்துக் குதூகலம் கொண்டாள். உண்மைப் பக்தி கொண்ட தூதன், சொன்னகாரியத்தைத் தலையால் செய்து முடிக்க ஆற்றலுடையவனுதலின், காற்று வேகமாய்ப் பறந்து சென்று, பதியினிடம் தன் நிலையை நன்கு விளக்குவானென்று நம்பி ஸ்ரீ ராகவனை விரைவிலே காணப் பேராவல் பூண்டு துடித்துக்கொண்டிருந் தாள். 'இவ்வளவு காலத்திற்குள் ஹநுமான் பாதிதூரம் கடந்திருப்பான்; இப்போது முக்கால் தூரம் சென்றிருக்கலாம்; இப்போது கடல் தாண்டி

அக்கரை சேர்ந்து என் துயரை என் பிரிய நாதரிடம் கூறிக் கொண்டிருப் பான்' என்று பிரலாபித்துக் கொண்டே பொழுது போக்கிக் கொண்டிருந் தாள் காகுத்தன் காதலி; ஆனால் இவ்வெண்ணம் அச்சமயம் ஓர் ஏமாற் றங் கண்டது.]

அன்னை ஆசி கூறியனுப்பி விட்டாள்; தலையணியை அடையாள மாகக் கொடுத்து விட்டாள்; ஐயனைக்காணத் துடித்திருக்கிருள். இதை ஆஞ்சநேயன் நன்கறிந்தவன் தான், எனினும் மைதிலியை விட்டு விடை பெற்று வெளிவரவும், அவன் மனம் ஆராய்ச்சியில் ஆழ்ந்தது.

''அன்னையைத் தேடிக்கண்டு தரிசித்தேன். ஐயனை இங்கழைத்து வரும் பொறுப்பு எனதேயென்று நியமித்திருக்கிருள் தேவி. எனினும், ரகுநாதர் லங்கையின் சேனையைப்பற்றியும், கோட்டை மதிள்களின் அமைப்பைப் பற்றியும், முக்கிய அரண்களின் அணியைப்பற்றியும், பிரபல தடவாளங்கள், முஸ்திப்புகளைப் பற்றியும் விரிவாக விசாரித்தால் எனக்குத் தெரியாதென்றுரைப்பது தூதனின் அவிவேகத்தை யன்ருே காட்டும்? ஆகையால் லங்கையில் நிகழவிருக்கும் யுத்த நடவடிக்கைகளுக்கு அனு குணமாக இங்குள்ள அரக்கர்களின் பலாபலத்தை அறிந்து செல்வேன். ஏவப்பட்ட காரியத்தை முதலில் சரிவர முடித்து, அதே சந்தர்ப்பத்தில் அதைச் சார்ந்த மற்றக் காரியங்களையும் சாதிப்பவனே சிறந்த தூதனு வான். இரவில் எங்கும் நுழைந்து எல்லாவற்றையும் பார்த்தாய்விட்டது. இனி நேரில் இந்நகரின் அரண் அமைப்பையும் சேனைத் தலைவர்களின் மனப்பான்மையும் அறிந்து செல்ல வேண்டும். இதற்குச் சிறந்த வழி என்ன? இவர்களோ அரக்கர்கள். இவர்களிடத்தில் நட்பு என்ற, ஸாமோபாயமுறையைக் கொள்வதில் பயனில்லை. கொடையால் உட் படுத்தல் என்ற தானேபாயம் இச்செல்வ செருக்கர்களிடம் செல்லாது. பிரித்துப் பகுத்துப் பிணைப்ப தென்ற பேதோபாய முறையும், ராவண னிடம் ஒரு முகமாய் ஈடிபட்டிருக்கும் இவர்களிடம் உபயோகிப்பது பல னற்றதாகிவிடுமோ என்னவோ; ஆகையால், பராக்கிரமத்தால் புடைத் துப் பிளக்கும் நான்காவது உபாயமான தண்டோ பாயத்தைக் கைக் கொள்ள வேண்டும். இவர்கள் சேனையைக் காண வேண்டும். அவர்கள் தலைவர்கள் சிலரைமாய்க்க வேண்டும். இவர்கள் கொட்டம் கொஞ்ச மடங்கினதும் அரசனையே நேரில் கண்டு பேசி அவன் மனப்போக்கையு மறியவேண்டும். அவர்களின் யுத்த முறையையும் அணிவகுப்புகளையும் இவர்களின் வலிவின் அளவையும் நன்கறிந்து செல்ல வேண்டும். அப் பொழுது தான் எஜமானன் கட்டளையை சரிவரச் செய்தவனுவேன்,'' என்று தீர்மானங்கொண்டான். இக்காரியம் இப்பொழுது தான் அவன் மனதில் எழுந்தது போலும்! இதை ஜானகியிடம் தெரிவிக்கவில்லை யென் பதை அவன் கவனித்தவனல்லன். இப்போது எழுந்த ஆலோசனையை எப்படி நிறைவேற்றுவதென்றே அவன் மனம் சிந்தனையிட்டது.

''இவ்வரக்கர்களுடன் வலிவில் போர்செய்வதெங்ஙனம்? போர் மூண்டு வலுக் கொண்டாலல்லவா அரக்க அரசனையும் அவன் சேனைப் பலத்தின் அமைப்பையும் நேரில் காண முடியும்! நல்லது. இதோ கண்ணைப்பறிக்கும் கவர்ச்சிகரமான இவ்வசோகவனம் அரக்க மன்ன

னுக்குப் பிரியமான இடம். இதை நினைத்த மாத்திரத்தில் வாயு புதல்வனுக்கு கோபமெழுகிறது. "இத்தகைச் சிங்காரவனமும் தோட்டமும் இப்பாவிக்கு இனி விட்டு வைப்பதா? ஆகையால் இதையழித்து முறிப்பேன். ராவணன் கோபங் கொண்டு, சேனையையும், சேனாதிபதிகளையும் என்னை எதிர்க்க அனுப்புவான். அவர்களைக் கடும்போர் புரிந்து மாய்த்து, அறிய வேண்டியவைகளை அறிந்து, கபீச்வரரிடம் தடையின்றிச் செல்வேன்" என்று உறுதிகொண்டான். [இது ஜானகியிடம் வாக்களித்ததற்குப் புறம்பானதென்று ஹநுமான் கவனிக்கவில்லை. தன்னை விட்டகன்றதும் நேரே நாயகரிடம் தாவிச் செல்வான் என்று நம்பியிருந்தாள். அவள் இப்புது நிகழ்ச்சி ஹனுமான் அவளிடம் திட முறுத்திய அட்டவணையிலில்லை. அரக்கருடன் போர் புரிந்து நிற்கிறான் என்று அவள் கேட்டதும் அவள் மனம் கலவரமடைவது சகஜம் தானே.]

இவ்வாறு தீர்மானித்த ஆஞ்ஜநேயன் பீமவிக்கிரம உணர்ச்சியடைந்து கடுஞ் சினங்கொண்டு அசோகவனத்திலுள்ள மரங்களை பட படவென்று முறித்து வீழ்த்தினான். தடார் தடாறென்று மாபெரும் விருட்சங்கள் தலைசாய்ந்து கவிழவே, பூகம்பம் போல் எங்கும் ஓர் அதிர்ச்சி ஒலித்துப் பரவிற்று. அழகியவனம் கணப்பொழுதில் சிதறுண்டது! நீர் நிலைகள் தகர்க்கப்பட்டன. இன்னும் சில அழகிய கொடிகளடங்கிய ஒய்வு விடுதிகளும், மணல் திட்டுகளும் பொடியாயின! வனம் விகார முற்றது. பறவைகளும் மிருகங்களும் வீறிட்டுப் பறந்தன. கலைந்த வேலிகள்; அறுபட்ட கொடிகள்; உதிர்ந்த மலர்க்குவியல்கள்! சிதைக்கப்பட்ட சித்திரமண்டபங்கள்! நசுக்குண்ட பெரும்பாம்புகள்! இடிக்கப்பட்ட கல்மேடைகள், எங்கும் அலங்கோலம்! அரண்மனைக்கே அழகூட்டும் அசோகவனம் வானருடைய பலத்தால் சிதைந்து முறிந்து அழகிழந்ததாக ஆய்விட்டது. ஓயாத கோரச் சப்தம் காதைப் பிளந்தது! பயம் பொழியும் பூகம்பமும் புயல் காற்றும் அவ்வனச் சாலையை கிடுகிடுக்க வைத்தன. வழி இழந்த நீரோடைகள் அடைபட்டுக் கண்டவிடங்களில் நீர்ப்பெருக்கு! ஆஞ்ஜநேயன் ஆண்மையின் வேகம், வீறு கொண்டெழுந்தது. திடீரென்று ஓர் பயங்கரமான வீரகர்ஜனை! கோட்டை வாசல் மேல் தாவிக்குதித்தான் ஸ்ரீ ராமதூதன்!

## 42. வைதேகி பொய்யுரைக்க வில்லை

நிச்சப்தமாய் அமைதி நிலவிக்கொண்டிருந்த விடியற் காலையில், திடீரென்று இவ்வதிர்ச்சி கண்ட லங்கை நகரம் அப்படியே துள்ளி எழுந்து அலறிற்று. பறவைகளும் விலங்குகளும் கோரமாய்க் கூச்சலிட்டன. தூக்கத்திலிருந்தவர்கள் தம் படுக்கையைவிட்டுத் துள்ளிக் குதித்து வெளிக் கிளம்பி 'என்ன, என்ன' வென்று கேட்டு மருண்டு நின்றனர். காவலர்கள் அங்குமிங்கும் ஓடினர். மகத்தான கொந்தளிப்பு! பேரிரைச்சல்! அமளியின் அலங்கோலம் எங்கும் அபசகுணங்கள் தோன்றின. அவைகளைக் கண்டு நகரவாசிகள் கதிகலங்கினர்.

பூகம்பம் போன்ற இம் முழக்கமும் மரங்கள் பெயர்ந்து விழும் பேரொலியும் அசோக வனத்தின் மைதிலியின் காவலிலிருந்த அரக்கிகளை

நடுக்கமுறச் செய்தன, திரிஜடையின் சொப்பனத்தைக் கேட்டு மனம் பதறி 'இது பலிக்காதிருக்கட்டும்' என்ற எண்ணத்தில் மறுபடியும் அயர்ந்து நித்திரை கொண்டவர்கள் இவ்வரக்கிகள். இப்பொழுது இக் கதி கலக்கும் பேரொலி அவர்களைத் திடீரென்று எழுப்பிற்று. கண் விழித்துப் பார்க்க கோரமான காட்சி தென்பட்டதால் அவர்கள் அப்படியே மன முடைந்து விட்டனர். வனம் அழிந்து அலங்கோலமாயிற்று. சிதறுண்டு அறுபட்ட கொடி செடிகளும், முறிந்து சாய்ந்த பெரு மரங்களும், வாய் விட்டு அலறின போல் ஏங்கி நின்று சாய்ந்தன. இது என்ன விபரீதம்? அழகு நிறைந்த அசோக வனம் இவ்வாறு அழிந்து போயிற்றே யென்று நான்கு பக்கங்களிலும் கவனித்தார்கள்.

அதோ! ஓர் உருவம்! பிரமிக்க வைக்கும் பேருருவம்! குடல் குலைக்கும் குரங்குருவம்! அவ்விருள் செறிந்த இடை வேளையில், மின்னல் கொடி போன்ற வெண்ணிற உருவம் வானளாவி நிற்கின்றது! காந்தி வீசும் கூரிய நகங்கள். வலிமை தாங்கிய வைரம் பாய்ந்த கால்களின் அழுத்தமும் புஷ்டியும் வாய்ந்த பருத்த இரும்புத் தூணை யொத்த மேனி, பயங்கரமான முகம், வீரப் பார்வை. ஆஹா! இது என்ன காட்சி! அப் பேருருவத்தைக் கண்டு வெருண்டு மருண்டனர் அரக்கியர். ஐயோ? இவன் நம்மைக் கால் விரலால் நசுக்கி மாய்க்கும் காலனே! உடல் நடுங்கி, உள்ளம் பதறி, ஜானகியிடம் ஓடோடியும் வந்தனர்.

அப்போது அந்த நகரே கதி கலங்குமாறு ஒரு கர்ஜனை கேட்டது. அவர்கள் அப்படியே பதை பதைத்து மனம் நடுங்க "ஸீதே! இது என்ன? இவன் யார்? இப் பேருருவம் எங்கிருப்பது? இங்கு எப்படி வந்தது. எதற்காக வந்தது? இவன் எப்படி உன்னுடன் உரையாடினன்? விசாலாட்சி! உன்னுடன் என்ன சொன்னன்? எங்களுக்குத் தெரியச் சொல்லு? அச்சம் வேண்டாம்" என்று மூச்சுத் திணறி அடுக்கிக் கொண்டே கேட்டனர்.

ஸீதை பதிலளிக்கிருள்:— "இஷ்டப்படி உருவமெடுப்பவர்கள் அரக்கர்கள் தான். அவர்கள் போக்கைப் பற்றி எனக்குத் தெரியாது. அதைப் பற்றி எனக்கு ஆக வேண்டிடியது என்ன? இவன் எதைச் செய்கிருனே, இதை நீங்களே நன்கறிவீர்கள். பாம்பின் கால் பாம்பிற்குத் தானே தெரியும்? இதோ இங்குக் காண்பவன் வேண்டுமென்ற உருவ மெடுப்பவன் என்று அறிகிறேன். இவன் உண்மையில் யாரென்று அறியேன். நானும் உங்களைப் போல் பயமடைந்திருக்கிறேன்" என்ருள்.

[இது உண்மையல்லவா? ராம தூதனென்ருன், ராமனிடம் இதோ போகிறேன், என்ருன். அவன் திரும்பிப் போய் ராமனை அழைத்து வந்தாலல்லவா அவன் உண்மை ருஜுப் பெற்றிதாகும். அதின்றி, ஒன்றைச் சொல்லி விட்டு மற்ருென்றைச் செய்து, உருவத்தைப் பெருக்கி இங்கேயே நிற்கிருன். அவள்படும் வேதனை நிலையில் எவர்தான் அவன் உண்மையாக ராம தூதனுக வந்தவன் என்று நம்பிக்கை கொள்ள முடியும்? ஒரு வேளை அப்படி நம்பிக்கையடைந்திருந்தாலும் அதை அறவே போக்கடித்து விட்டார்கள் அரக்கிகள் தங்கள் வார்த்தைகளினுல்,

'உன்னிடம் பேசினவன்' என்று தெரிவித்ததால் இவர்கள் அதை அறிந்திருக்கிறார்கள். அறிந்தும் ஏன் பேசாதிருந்தார்கள்? என்ன சோதனை? இதன் உண்மைதான் என்ன?]

[இக் காண்டத்திலேயே மிக்க ருசிகரமான இடம் இது. பெரியோர்களும் வியாக்யாதாக்களும் வித விதமாகச் சமாதானம் வழங்கியிருக்கின்றார்கள். வைதேகி இவ்வினாவிற்கு, அப்பேருடல் கொண்டு அந்நகரையே நடுங்க வைக்கும் ஆற்றல் கொண்டவனை பற்றி உண்மை தெரியாதென்று மொழிந்தது ஒரு பொய்யுரை யென்று கருதி அதற்குப் பரிகாரம் தேடி உதவியிருக்கிறார்கள். அவர்கள் சொல்கிறார்கள் :— ஆபத்து வந்த காலத்திலும், ரதி கேளியிலும், மணம் முடிக்கும் காலத்திலும் பொய் சொல்வது பழுதாகாதென்று முடிவு கட்டுகிறார்கள். இது சாஸ்திர சம்மதமென்றும் வேதத்தில் விளக்கியிருக்கிறதென்றும் வலியுறுத்துகிறார்கள்.]

[இதற்கு இங்கு இடமுண்டாவென்று பரிசீலனை செய்வதே ஆழ்ந்து கருத்தறியும் ஆராய்ச்சியாகும். நன்று கவனிக்க வேண்டும். மைதிலியின் சூழ்நிலையை ஊன்றிப் பார்க்கவேண்டும். முதலிலிருந்து வேதனையுற்றிருக்கிறாள் அவள். கடைசியில் வேதனை தாங்காது, தலைப் பின்னலால் சுருக்கிட்டுத் தற்கொலை செய்துகொள்ள நினைக்கிறாள். இச்சிக்கலான ஆபத்து வேளையில், காற்றில் வருகிறது ஸ்ரீ ராம கீதம்! மனம் கலுக்கென்று தீர்மானத்தைத் தடை செய்கிறது. என்ன இது என்று மேலே பார்க்கிறாள் தொப்பென்று கீழே குதிக்கிறது ஓர் குரங்குருவம்! அதை மாயாவியான ராவணனென்று கொள்கிறாள். அது அவளை மெல்ல மெல்ல அணுகவே அவ்வப்போது மேலும் மேலும் அச்சமுறுகிறாள். மாயாவிகளையே இது வரை கண்டு துன்புற்றவள் ஸீதை, முன்பு சூர்ப்பனகை, பின்பு பொய்ம்மான், அதற்கு மேல் ஓர் துறவி; கடைசியில் அரக்கனின் சுய ரூபம்! இப்பொழுது தற்கொலை செய்யவிருந்த போது ஓர் குரங்குருவம். அவள் மனம் பட்ட பாடு எவர் அறியக் கூடும்? பின்பு அதனுடன் உரையாடினதும், அதே குரங்கு விசுவரூபமெடுத்து வானளாவி நிற்கிறது. எல்லாம் ஓர் மாய சம்பவங்களடங்கிய நீண்டதொரு நாடகமா? ராமனிடமிருந்து வந்தவன் என்று அவன் சொல்லிக் கொண்டான். ராமனின் அங்க அடையாளங்களை விவரித்தான். அதைக் கேட்டு ஸீதை சற்று மனம் தேறுகிறாள். சந்தேகம் சிறிது குறைகிறது. ஆனால் அவன் உடனே தன்னுடன் வரும்படி அவளைக் கேட்கிறான். உடனே திரும்பவும் சந்தேகம். இது மானிட சுபாவமே. அவனுடன் செல்ல முடியாதென்று காரணம் கூறுகிறாள் மைதிலி. அவன் ராமனிடமிருந்து கொண்டு வந்த மோதிரம் இது என்று தகுந்த அடையாளம் காட்டுகிறான். அதைக் கண்டு, அதைக் கொண்டு உள்ளம் பூரிக்கிறாள். சந்தேகம் தெளிகிறாள். இன்னும் ஒரே மாதம் தான் உயிர் தரிக்க முடியும் என்று தன் நாயகருக்கு எச்சரிக்கும்படி செய்தி சொல்லுகிறாள். உருக்கமான அந்தரங்க நிகழ்ச்சிகளை எடுத்துரைத்துக் கணவனை நினைப்பூட்ட வேண்டுகிறாள். வந்தவன் அவளிடமிருந்து ஓர் அடையாளத்தை யாசிக்கிறான். இது அரசியல் முறைதான் என்று உணருகிறாள். ஒரு வேளை இது உண்மையாயிருந்தால்—எதிரியிடம் சிக்குண்டு சிறையிருக்கும்போது அந்தரங்கமாக ஒரு தூதன் வந்தால்—தான் செய்தியை அறிந்ததாகவும்,

தனது செய்தியை தெரிவிக்கவும், இது உண்மை என்று அங்கீகாரம் பெறவும், அதன் உறுதியின் பேரில் செயலாற்றவும், உதவுமாறு, ஓர் அடையாளம் கொடுத்தனுப்புவது தான் அரசியல் முறையாகும். அப்போதிருக்கும் நெருக்கடியான சூழ்நிலையில் அது ஒன்றே மீட்சி காணும் வழி யென்றுணர்ந்து, தன் ஜடை பில்லையை அடையாளமாகக் கொடுக்கிருள் கோசலையின் மருமகள். இவ்விதம் சந்தேகமும் ஆறுதலும் மாறிமாறி எழுந்த மன நிலை பெற்றிருந்தாள் மைதிலி. சம்பாஷணை முடிந்து விடை பெற்றுச் செல்கிருன் வந்திருந்த தூதன். இதோ நேரே கணவனிடம் விரைந்து சென்று செய்தி அறிவிப்பதாக அவன் உறுதி கூறிச் சென்றிருக்கிருன். கண் மறைந்ததும், தூதன் விரைந்து கணவரிடம் சென்று கொண்டிருக்கிருன் என்று எண்ணமிட்டுக் கொண்டிருந்தவளுக்குத் தீடீரென்று மனம் பதைக்க அதிர்ச்சி ஏற்படுகிறது. "என்ன இது ? நம்மிடம் விடை பெற்று ரகுபதியிடம் விரைந்து செல்வதாக வாக்குறுதி அளித்த பிறகு இவன் செல்ல வில்லையே ! ஏன் ? நிலை இன்னதென்று நிர்ணயிக்க முடியாத இவன் செயல்களின் கருத்தென்ன ? வனத்தை யழித்து நொறுக்குகிருன். இது அவன் சொல்லிப் போன அட்டவணையிலில்லையே !பயங்கரமாய்க் கர்ஜனைசெய்து, கோட்டை வாயிலில் பூத உருவமடைந்து ஏன் இன்னும் இங்கு காத்திருக்கிருன் ? இவனும் ஓர் மாயாவியா ? ராவணனுக்கு விரோதியா ? இவன் செய்யும் அட்டகாசத்தின் கருத்தென்ன ? இவர்கள் எல்லாருடைய கவனத்தையும் இழுத்துத் தன்னைப் பகிரங்கமாக தெரியப்படுத்தும் காரணம் தான் என்ன ? என்னை ஏன் இவன் திகைக்க வைக்கிருன் ? இதை என்னிடம் முன்பே ஏன் அறிவிக்கவில்லை ? விடை பெற்று காலதாமதமின்றி நேரே கணவனிடம் தான் வாக்குறுதி செய்த பிரகாரம் திரும்பிச் செல்வேன் என்று அடித்துப் பேசினனே ! இங்கு திடமாய் நின்று விடுகிருனே ? ஏன் ?" என்று யோசிக்கிருள்.]

[மேலும் மனதை முற்றிலும் கலக்க வைக்கும் இன்னொரு முக்கியமான காரணம் அவள் கண் முன் தெள்ளென விளங்குகிறது. மனதைப் பிளக்கிறது. எதிரியிடம் ரகசியமாய் வந்திருக்கிருன் இவன். அரக்கிகள் தூங்கும் போது, மெதுவாக சம்பாஷித்தான். இப்பொழுது இவ்வரக்கிகள் தன்னிடம் ஓடோடியும் வந்து கேட்பதென்ன ? 'உன்னிடம் உரையாடினவன் யார் ? அவன் என்ன சொன்னுன் ?' என்றல்லவா கேட்கிருர்கள். அவர்கள் என்னிடம் உரையாடினதை இவர்கள் எப்படி அறிந்தார்கள் ? சிலராவது கண் விழித்திருந்தாலல்லவா என்னுடன் பேசினதை இவர்கள் அறிந்திருக்க முடியும் ! கண் விழித்திருந்தால், இவனை என்னிடம் உரையாட அவர்கள் அனுமதித்திருக்க வேண்டுமே. இல்லையேல் அந்நியன் இவன் என்று இவர்கள் அறிந்த மாத்திரத்திலேயே, காவலிலிருப்பவளிடம் வந்து பேசுகிருனென்பதை ஒரு நிமிஷமாவது பொறுத்திருப்பார்களா ? தட்சணமே, ஆர்ப்பாட்டஞ் செய்து ராவணனிடம் தெரிவிப்பார்களன்ரே ? இப்படிச் செய்யவில்லையே ! என்னுடன் பேசினதைக் கண்டும் அவ்வரக்கிகள் சும்மாவிருக்கிருர்கள், ஏன் ? தங்களைச் சேர்ந்தவன் தான் இவன் என்று வாளாவிருந்தார்களா ? இப்பொழுது அவன் குழப்பஞ் செய்வதைக் கண்டு நடுங்கி இவன் யார் என்று என்னிடம் கேட்கிருர்கள். அப்படியாயின் இவர்களுக்குத் துரோகம் செய்கிருனு ?

இது என்ன மாயம்! என்னுடன் உரையாடினதை அறிந்திருக்கிறார்கள் இவர்கள். அந்நியனானால் சம்மதியார்கள். உடனே கூக்குரலிட்டிருப்பார்கள். ஆகையால் இவன் அவர்களுக்குத் தெரிந்தவனே! அவர்களைச் சார்ந்தவனே! இவன் மர்மத்தை நான் அறிந்துவிட்டேனோவென்று தெரிந்து கொள்ளவா, என்னை, 'உன்னிடம் பேசினவன் யார்' என்று கேட்கிறார்கள்? இது என்னவோ சூதான சூழ்நிலையாய்க் காண்கிறதே! அவனோ என்னிடம் சொன்னதைச் செய்யாமல் வேறு எதையோ செய்து கொண்டிருக்கிறான். என் கணவரிடம் விரைந்து செல்வதாக உறுதியளித்துவிட்டு இங்குத் தாமதித்து கும்மாளமிட்டுக் கர்ச்சிக்கிறான். இவர்களோ, அவன் என்னிடம் பேசினதை அறிந்திருக்கிறார்கள். இப்பொழுதோ, ஒன்றும் தெரியாதவர்கள் போல், என் எண்ணத்தைப் பரீட்சித்தறிய 'இவன் யார்' என்று என்னைக் கேட்கிறார்கள். இவர்களையும் ஏமாற்றிவிட்டானோ இவன்? இவன் இன்னவன் தான் என்று யார் சொல்ல வல்லவர்? உண்மை எவருக்கு விளங்கும்''? இவ்வாறு வைதேகியின் மனம் ஒரு நிலையிலில்லை யென்பதை யார் மறுக்க முடியும்? தனக்கு இவன் யார் என்பது தெரியாதென்று சொல்வது பொருத்தமல்லவென்று கருதுபவர் அவள் சூழ்நிலையை ஊன்றி கவனிக்க வேண்டும். அவள் உரைத்தது பொய்யாகுமா? அவள் மன நிலையில், ஹநுமான் கீழே குதித்து மெள்ள மெள்ளக் கிட்டே வந்தது முதல், அவன் வனத்தை யழித்து மரங்களைச் சாய்த்து கர்ஜித்து கோட்டை வாயிலில் நிற்பது வரை சந்தேகமும், ஆறுதலும், ஏமாற்றமும், திடுக்கமுறும் நிகழ்ச்சிகளும், மாறி மாறி எழுந்து கொண்டேயிருந்தன. அந்நிலையில் இவன் யாரென்று திடமாய் அறியவில்லையென்பது அவள் உண்மை மன நிலையை அச்சுறுத்திய தாகுமே தவிர, வேண்டு மென்று பொய்யுரைத்தாளென்று கூறுவது ஏற்றதாகுமா?]

[அவனைக் காப்பாற்ற எண்ணி இப்படி மொழிந்திருக்கலாமென்கிறார்கள் சிலர். சுய வலுவில் வந்தவன், ரகசியமாகப் பேசி அடையாளங் கொண்டு போய் வருகிறேனென்று விடை பெற்றுப் போனவன், இப்பொழுது வனமழித்துத் தனிமையில் கர்ஜித்து வலுவில் எதையோ நினைத்துக் கோட்டை வாயிலில் நிற்கிறான். அவனை இவள் எவ்வாறு காப்பாற்றுவதாகும்? பகிரங்கமாக எல்லோர் கவனத்தையும் இழுத்து, எல்லோரையும் நடுக்கமுறச் செய்து நிற்கிறவனை இவள் தெரியாதென்று சொன்னால் எப்படி அவனைக் காப்பாற்றுவதாகும்? நூறு யோஜனை கடல் தாண்டி வந்ததாக உரைத்தவனின் பலமும் தீரமும், இவள் பொய்யுரைத்துக் காப்பாற்றுவதிலா எதிர் பார்த்து நிற்கும்? அவன் ராமனிடமிருந்து வந்த தூதன் என்று உண்மையைச் சொன்னால் அவனுக்கு ஆபத்து நேரும் என்று நினைத்து இவள் இவ்விதம் கூறியிருக்கலாமென்றும் வாதிக்கிறார்கள் சிலர். ஆனால் நடந்தது என்ன? அரக்கிகள் அவனை வந்து கேட்பதற்கு முன்னமேயே அசோகவனத்தைச் சிதைத்தெறிந்துவிட்டான். அது போதாதென்று வீர கர்ஜனையுடன் தீரமாகக் கோட்டை வாயில் முன் பேருருவங்கொண்டு கர்ஜித்து நிற்கிறான். அத்தகையவன் ஆபத்துக்குப் பயந்து நிற்பவனா? ஜானகி தனக்கே ஆபத்து வந்துவிடுமென்று அஞ்சியிருக்கலாம் என்கிறார்கள். அரக்கன் ஒரு மாதம் கெடுவு கொடுத்திருந்தும், பின்னலை மாட்டித் தற்கொலை செய்ய நினைத்தவள்—

உயிரை மாய்த்துவிட தயாராயிருந்தவள்—இனி வரப் போகும் ஆபத்தைப் பற்றியா அஞ்சிப் பொய் பேசுவாள்? நன்கு யோசித்து முடிவிற்கு வர வேண்டும். அவள் சூழ் நிலையையும் மனம் மாறி மாறி மாறுதலடைவதையும் கவனிக்க வேண்டும். வந்தவன் பேசி முடித்து விட்டுப் போய் எதிர்பாராது தன் போக்காக வனமழித்த போது அவள் மனநிலை மாறவில்லையென்பதை யார் சொல்ல முடியும்? அம்மனநிலை, அரக்கிகள் விரைந்தோடி 'உன்னுடன் உரையாடினனே அவன் யார்'? என்று கேட்டபோது இன்னும் வெகுதூரம் மாறுதலடைந்திருக்க வேண்டும். அடிக்கடி எழுந்த சந்தேக உணர்ச்சி உச்சநிலை எய்திருக்கவேண்டும். சொன்னபடி செய்யாமல் உறுதி செய்த அட்டவணை பிரகாரம் நிறைவேற்ருது தனிப் போக்காய் செயலாற்றுபவனைப் பற்றியும் அவன் கருத்து என்ன வென்று அறியமுடியா மன நிலையில் அவன் யாரோ வென்றுரைத்தது உண்மை மொழியே தவிர, வேறல்ல. இம் மனநிலையே தெளிவாக்குகிறது அவள் அரக்கிகளிடம் அளித்த விடை. இதையறிய சாதாரண பகுத்தறிவே போதுமானது. ஆதரவும் அத்தாட்சியும், வேத வாக்கியமும், வாக்குவாதமும் எழுவதற்கு இடமேயில்லையென்று விளங்குமென்பது துணிவு.]

வைதேகியின் வசனத்தைக் கேட்டு ராட்சதிகள் அப்படியே நின்றுவிட்டனர். சிலர் உள்ளம் சிதறினர். மற்றுஞ் சிலர் ராவணனிடம் தெரிவிக்க விரைந்தோடினர். அவனிடம் சென்று பீமரூபமான வானரத்தைப் பற்றிச் சொல்லவாரம்பித்தார்கள்.

''மகாராஜா! அசோகவன நடுவில், அளவிட முடியா விக்கிரமம் படைத்த பூதாகாரமான உருவங் கொண்டு ஸீதையுடன் பேசிக்கொண்டு ஓர் வானரம் நிற்கிறது! அநேகவிதமாய் அந்த மான்விழியாள் ஜானகியை நாங்கள் கேட்டும் அக்குரங்கைப் பற்றின வரலாற்றைச் சொல்ல அவள் இசையவில்லை. [இவ்வார்த்தைகள் ஒவ்வொன்றும் உண்மையில்லாத வார்த்தை என்று நிதரிசனமாகிறது.] இங்கு வந்தவன் இந்திரன் தூதனே? குபேரன் தூதனே, அல்லது ஸீதையைத் தேடிக்கண்டுபிடிக்க அனுப்பப்பட்ட ராமதூதனே அறியோம், அற்புத ரூபங்கொண்டிருக்கிருன் அவன். மனேகரமான ஈடு இணையற்ற, உங்கள் அந்தப்புரத்து அசோகவனத்தை அறவே அழித்துச் சின்ன பின்னமாக்கிவிட்டான். ஆனல், ஸீதையிருக்குமிடம் மாத்திரம் அப்படியே விடப்பட்டிருக்கிறது. ஒரு வேளை அவளைக் காக்கத்தானே, அல்லது சிரமத்தினலோ, அவள் இருக்குமிடம் மாத்திரம் நாசமாக்கப்படவில்லை. அக்குரங்கின் சொரூபத்தைக் கண்டால், களைப்பென்று ஒரு நிலை இருப்பதாகத் தெரியவில்லை. அவள் வீற்றிருக்கும் சிம்சுபா விருட்சம் தவிர மற்ற மரங்களையெல்லாம் முறித்தொடித்து மண்ணில் சாய்த்துவிட்டான் அவன். எவன் ஸீதையுடன் உத்திரவின்றி உரையாடினனே, அழகிய அசோகவனத்தை அழித்தானே, அவனுக்குக் கடுந் தண்டனை இடுவீர்களாக. நீங்கள் மனமுவந்து கொண்டு வந்த ஸீதையிடம் தானகப் பேச தைரியங்கொண்டவன், தலையிழக்க வேண்டியவனே!'' என்று ஓலமிட்டார்கள். (தாங்கள் அஜாக்கிரதையாய் இருந்துவிட்டார்கள் என்பதை மறைத்துக் கூறிவிட்டார்கள்) ஸீதையுடன் இன்னெருவன் சம்பாஷித்தான் என்று கேட்டதுமே, அவ்வளவு தான்! துடிதுடித்தெழுந்தான் ராவணன்! மற்றெல்லாவற்றையும் மறந்தான். கோபம் தலைக்கேறிற்று! ஆகா! என் ஆக்கினையை மீறிய

வன் எவன், என்று அவன் மனம் பதைபதைத்தது! கண்களிலிருந்து தீச்சுடர் கோரக் கனல் வீசிப் பற்றி எரிந்தது! அரக்கிகள் நடுங்கிப் போயினர்.

கடுகடுத்த அவன் கோபப்பார்வை தட்சணமே அரக்கர் சேனைத் தலைவர்களை கண் முன் கொண்டு நிறுத்திற்று! ஒரு முறை அவர்களைப் பார்த்தான். தமக்கு ஸமமானவர்களும் சூரர்களுமான கிங்கரர்கள் என்ற பெயர் புனைத்த அரக்கர்களை, ஹநுமானைப் பிடிப்பதற்காக உடனே ஏவினான். அநேக ஆயுதங்களேந்தி அவர்கள் ஹநுமானிடம் விரைந்தனர். விட்டில் பூச்சிகள் போல் தன்னை வந்து சூழ்ந்த கிங்கரர்களை மாருதி பூமி செவிடுபடும்படி ஒரு கர்ஜனையிட்டுக் கதிகலங்க வைத்தான். வலிவைத் தன் வாலில் நிறுத்தி முறுக்கேற்றி, அதைச் சாட்டை போல் நிறுத்திச் சுற்றிக் கீழே அறைந்தான். இச்சத்தம் அவர்கள் ஆவியை குலைய வைத்தது. தன் பெரிய உருவத்தை இன்னும் பெருக்கி நகரமே அதிரும் படி தோளைத் தட்டினான். பின்பு, இப்பேரிடி இரைச்சல் முழங்க, மாருதி கேட்போர் மனத்தைப் பிளக்கும்படி பின்வருமாறு கர்ஜித்தான்.

''மகாபலவான்களான ஸ்ரீ ராம லக்ஷ்மணர்களுக்கு வெற்றியுண்டு''! ஸ்ரீராகவர் ஆதரவிலிருக்கும் ஸுக்கிரீவமகாராஜவிற்கு ஜேய்! சத்துருவைச் சிதறவடிக்கும் வாயு குமாரனான ஹநுமான் என்றவன் நான். அபாரச் செயல்களை வெற்றியுடன் முடித்துக் காட்டும் கோசலைக் குமாரனான ஸ்ரீ ராமனுடைய தாஸன் நான். எனக்கெதிரே எவன் வந்தாலும் வரட்டும். ஆயிரம் ராவணனானாலும் முறியடித்து மாய்க்கத்தயார். ராட்சதர்கள் கண் முன்னே லங்கையைச் சிதற அடித்து மைதிலியைப் பணிந்து மனோரதம் நிறைவேறப் பெற்றவனாக செல்லப்போகிறேன்.'' ராட்சதர்கள் இக் கர்ஜனையைக் கேட்டு மனமுடைந்தனர். அப்போது தோரணத்தைத் தாங்கிய ஓர் இரும்புத் தடியை பிடுங்கி எடுத்து கிங்கரர்களை நையப் புடைத்து நசுக்கிக் கொன்றான் ஆஞ்ஜநேயன். கிங்கரர்கள் அனைவரும் மாண்டார்கள் என்று ராவணனிடம் முறையிட்டார்கள்.

[இந்த அஞ்ஜனைச் செல்வன் கர்ஜனை செய்து தான் யாரென்று எல்லோருமறிய பகிரங்கப்படுத்தியதின் கருத்தென்ன? அட்டவணையி வில்லா ஓர் நிகழ்ச்சி நடத்துவதால் அன்னை ஜானகி மனம் தளர்ந்து ஏக்கங் கொண்டனளோ? சந்தேகங் கொண்டு பயத்தால் பதறுவாளே? அவளுக்கு உடனே ஆறுதலளிப்பது அத்தியாவச்யம் என்று எண்ண மிட்டானோ என்னவோ. மாருதி வீரகர்ஜனையிட்டு தான் யாரென்றும் எதற்காக, யாரிடத்திலிருந்து வந்ததென்றும் பகிரங்கமாக—ஜானகியும் கேட்டுத் தெளியுமாறு—தன்னைப் பற்றிப் பிரகடனம் பண்ணுகிறான்.'' கட்டாயம், ஓர் தடையுமின்றி ராமபிரானிடம் திரும்பிச் செல்வேன் என்று கூறுவதும் ஸீதாபிராட்டியின் சந்தேகம் ஒழிய வேண்டுமென்று உரைத்த தாக விளக்கிக் காட்டுகிறது. ஆகவே, ஸீதை ஒருக்கால் அச்சமுற்றிருக்க வேண்டும் என்று ஆஞ்ஜநேயனுக்கும் எண்ணமிருக்கிறது. அதாவது, ''இவன் யாரென்று அறிகிலேன்'' என்ற அவள் அரக்கிகளுக்களித்த விடை உண்மைதான்; பொய்யல்லவென்று ஆணித்தரமாய் அத்தாட்சியளிக்கின்றது ஹநுமானின் பிரகடனம்.]

———

# 43. ஹநுமானின் வீரகர்ஜனை

தன்னை எதிர்த்து வந்த கிங்கரர்களை இருப்புலக்கையால் அடித்து மாய்த்து, வெற்றி வீரத்தில் திளைத்துத் திகழ்ந்த வாயு குமாரன், மேல் நடக்க வேண்டியதைச் சிந்தனை செய்தான்.

[ஆம்! அன்னை வைதேகியிடம் சொல்லாமல் இக்காரியத்தைச் செய்தேன். இங்கு இன்னும் காத்திருக்கிறேன். இதனால் அவள் சந்தேக முறுவளோ, என்னவோ. அதைத் தீர்க்க நாம் ராமதூதனே, சந்தேகம் வேண்டாமென்று பகிரங்கமாகப் பிரகடனஞ் செய்தேன். அவள் கவலை யொழிந்தவளாக ஆவாள், என்றும் சிந்தனை செய்தானோ என்னவோ.]

சிறிது நேரஞ் சென்றதும் அருகில் கண்ணைப் பறித்து வான ளாவித் திகழும் வசந்த மண்டபத்தில் தாவிக்குதித்தான் ஆஞ்ஜநேயன். அசோகவனம் ஒழிந்தது; இவ்வசந்த மண்டபமும் தரைமட்ட மாகட்டு மென்று தீர்மானித்து, ஊற்றெடுத்துப் பெருகும் ஆற்றலை அம்மண்ட பத்தை உடைப்பதில் புகுத்தினன். அரைக்கணத்தில் அப்பளிங்கு மண்ட பம் பொடிப் பொடியாயிற்று. சிதைந்து விழுந்த குவியலின் மேல் ஏறி நின்று வெற்றி முழக்கமிட்டு வாலைச் சாட்டை போல் அடித்துக் காண் போரைக் கதிகலங்க வைத்தான். வாய் ராமநாமஜபம் செய்த வண்ண மிருக்கிறது; பலமும் உற்சாகமும் ஆற்றலும் வீரமும் மேன்மேலும் பொங்கிச் சுரக்கலாயின. அவன் ஸ்ரீ ராகவனின் பிராபவமல்லவா இது என்றுணர்ந்ததும் புளகாங்கிதனுனன்.

“அஸ்திரவித்தை வல்லுனரான ஸ்ரீ ராகவரும் மகாபலவானுன லக்ஷ்மணரும் வெற்றி வீரத்தில் விளங்குகிருர்கள். ஸ்ரீ ரகுநாதன் ஆதரவு பூண்ட வானர அரசர் ஸுக்கிரீவரும் வெற்றியுருவாராக!” என்று முழங்குகிருன்.

ராமதூதன், “அரக்கர்களைப் புடைத்துத் தேவியைத் தரிசனஞ் செய்து போக வந்தவன் என்ற” ஜயபேரிகை விடுத்தான். மண்டபத் தைக் காத்து நின்றவர்களை ஓர் தூணைப் பிடுங்கி அடித்து மோதி மாய்த் தான். மேலும் மேலும் வெற்றியின், வீரா வேசம் பொங்கி எழ, திரும்ப வும் பேரிடி போன்று முழக்கமிடுகிருன். “என்னைப் போன்ற பலவான் களும் வானரவீரர்களும் ஆயிரமாயிரமாகப் பூமி முழுவதும் ஸுக்கிரீவரால் அனுப்பப்பட்டிருக்கிருர்கள். அவர்கள் வலிவை ஒப்பிட முடியாது, மதிப் பிட முடியாத வீரர்கள். தீரர்கள், சூரர்கள், பல்லாயிரக்கணக்கான, அடக்க வும், ஜயிக்கவும் முடியாத, ஈடு இணையற்ற மாபெரும் வானரச் சேனை யுடன், அரக்கரை யொழிக்க, லங்கையைப் பொடியாக்க, ஸுக்கிரீவ மகா ராஜர் நேரில் இங்கு வரப்போகிருர். ஒழிந்தீர்கள் நீங்கள் அனைவரும்! என்று எண்ணுங்கள்; மூவுலகிலும் நிகரற்றவரான கோசலைக் கோமானை என்று சீண்டினீர்களோ, அவன் சினத்தை என்று பெற்றீர்களோ அன்றே நீங்கள் ஒழிந்தீர்கள். இந்த லங்கை நகரும் ஒழியப் போகிறது. ராவணனும் ஒழியப் போகிருன். ராம கோபாக்கினியின் வேகத்தில் இதோ பெரும் சாம்பற் குவியல் லங்கையிருந்தவிடத்தில் மேலெழப் போகிறது” என்று சிம்ம நாதஞ் செய்தான்.

———

## 44. ஜம்புமாலி வதம்.

கிங்கரர்கள் என்ற அரக்கர்கள் அரவே ஒழிந்தனர் என்று கேட்ட ராவணனின் கோபா வேசம் அடங்காது மேலெழுந்தது. மந்திரி பிரகஸ்த னுடைய குமாரனன ஜம்புமாலி என்பவனை "இக்குரங்கின் கொட்டத்தை அடக்கிவா"வென்று அனுப்பினன் ராவணன். வில்லுங்கையுமாய் அவனும் ஹனுமானிடம் விரைந்து வந்தான். கோரப்பற்கள்; மலை போன்ற உருவம்; அஞ்சா நெஞ்சம்; தன் கையில் இரும்புலக்கை போன்ற வில்லின் நாணெலியை இடிமுழக்கமாய்ச் செய்து கொண்டே வந்து சேர்ந்தான் ஜம்புமாலி.

கோவேறு கழுதைகள் பூட்டிய இரதத்தில் தாமிரக்கவசம் பூண்டு வந்து சேர்ந்த ஜம்புமாலியைக்கண்டு ஹநுமான், 'ஆம், இவன் சரி யானவன்: இப்படி மலை போன்றவனையன்றோ வெட்டிச் சாய்க்க வேண்டு' மென்று குதூகலம் கொண்டான், மாருதி போரின் வெற்றி யில் பொலிந்து திகழ்ந்தான், ஸ்ரீ ராம பிராபவம் எத்தகைய பாவிகளை எல்லாம் வெளிக்கிளப்புகின்றது என்று எண்ணினன் போலும்!

ஜம்புமாலி வில் வளைத்துச் சரமாரி பொழிந்தான். ஹநுமான் முகத் திலும் மார்பிலும் கூரிய பாணங்கள் தைத்து குருதிபடிய வைத்தான். மாருதி சினங்கொண்டான். அவ்வளவு தான்! கற்பாறை யொன்றைப் பிடுங்கி எறிந்தான், ஜம்புமாலி அதைத் தன் பாணங்களால் துண்டித் தான். ஹநுமான் அடுத்தபடி ஓர் ஆச்சாமரத்தை எறிந்தான். அது வும் வீணாயிற்று. உடனே தோரணவாயில் இரும்புத் தடியைப் பிடுங்கி கரகர வென்று அதிக வேகமாய் கழற்றி அரக்கன் மேல் வீசினன்! அவ்வளவுதான். அடுத்த நிமிஷம் ஜம்புமாலி தலையும், அவன் ரதமும், குதிரைகளும் நசுக்குண்டு பூமியில் புதைந்தன! இதைப் பார்த்தவர்கள் அப்படியே கதிகலங்கி மதியிழந்தனர்! சிலர் ராவணனிடம் விரைந் தோடினர்!

---

## 45. மந்திரி குமாரர்கள் மறைவு

பிரகஸ்த புத்திரனை ஜம்புமாலி குரங்கினல் வதைக்கப் பட்டு உயிர் துறந்தான் என்பது கேட்டு ராவணன் அடங்காக் கோபங் கொண்டான். முதலில் கிங்கரர்கள், பின் ஜம்புமாலி! என்ன இது? என்ன விசித்திரமான வலிவு கொண்ட குரங்கு இது! ஜம்புமாலிக்கு அடுத்த படி வலிமையும் வீரமும் பெற்ற ஏழு மந்திரி குமாரர்களை, ஹனுமானைப் பிடித்துக் கொணருமாறு விடுத்தான். பெரும் வில்லா ளிகளும், மிக்க பலவான்களும், அஸ்திர வித்தையில் நிபுணர்களுமான அவர்கள் பெரும் படையுடன் ரதமேறி அரண்மனையை விட்டுக் கிளம் பினர்கள்.

வெளியில் திரள் திரளாகக் கூட்டம், அக் கூட்டத்தினர், 'கிங்கரர் கள் மடிந்தனர்' ஜம்புமாலி மாண்டான்; சூரர்களான இவ்வேழு மந்திரி குமாரர்கள் இப்பொழுது பெரும்படைசூழக் குரங்கை எதிர்க்கப்

போகின்றனர். இவர்கள் கதி யாதாகுமோ !' வென்று பார்த்துக் காத்திருந்தனர். இடையிடையே குரங்கினால் மாண்ட வீரர்களின் தாய்மார்களும் மனைவிகளும் சோகத்தால் அழுதவண்ண மிருந்தனர். இவ்வழுகை குரலை அபசகுனமாய்க் கருதிச் சற்று கலக்க முற்று, பின்பு ஒருவரை யொருவர் பார்த்துத் தேறி உற்சாகத்துடன் ஹநுமானை அணுகினார்கள் அம்மந்திரி குமாரர்கள்.

ஹநுமானும் இவர்களைக் கண்ணுற்று அப்படியே அசையாது தோரண வாயிலில் நின்றான். வந்தவர்கள் மாருதியின் மேல் அதிவேகமாகத் தங்கள் பாணங்களை மாரி போல் பொழிந்து, மாருதியின் மாபெரும் உருவத்தையே மறைத்து விட்டனர். பெரிய மலை போன்ற சரக் குவியலைக் கண்டு எல்லோரும் ஆச்சரியமடைந்தனர். அதே நிமிஷத்தில் ஹநுமான், மரம் சருகுகளை உதிர்ப்பது போல் தன் மேற்படிந்த பாணங்களை உதறித் தள்ளி, வானில் துள்ளி எழுந்தான். அக் கணமே அவர்கள் தேர் ஒடிந்தன; வில்லுகளும் கை நழுவின. அவன் பாய்ச்சலின் அதிர்ச்சி, பல அரக்கர்களை மாய்த்தது. சிறிது நேரத்திற்குள் வாயுகுமரன் கோரமான ஓர் கர்ஜனையால் சேனையைச் சிதறவடித்து லங்கையையே கிடுகிடுக்க வைத்தான். கைகளால் சிலரைத் தலையைப் பிசைந்தான். சிலரை மார்பினாலும், சிலரைத் துடைகளாலும் மற்றும் சிலரைக் கால்களாலும் நசுக்கி வீழ்த்தி மற்றவரை முட்டி நகங்களால் கிழித்தெறிந்தான். யானைகள் வீறின; குதிரைகள் சாய்ந்தன; ரதங்கள் நொறுங்கிப் பாழாயின; அநேகர் நசுக்குண்டிறந்தனர்; எஞ்சியோர், பிசைந்து புதைந்து போயினர். அந்நகரம் முற்றும் இரத்த வெள்ளம், கோரக் கூக்குரலை எழுப்பியது. தனிப் பெரும் வீரனும், அசகாய சூரனுமான ஆஞ்ஜநேயன் மந்திரி மக்களை முற்றும் மடித்து, சேனா வெள்ளத்தையும் ஒழித்து, மறுபடியும் கோபுர வாயிலையடைந்து, வெற்றி விலாசத்தில் சிம்ம நாதஞ் செய்தான்; இலங்கை முழுவதும் கிடு கிடுத்தது.

---

## 46. ஐந்து சேனைத் தலைவர்களின் வதம்

மந்திரி குமாரர்களும் அவர்களுடன் சென்ற சேனாவெள்ளமும் மாருதியால் மாய்க்கப்பட்டார்களென வறிந்த அரக்க வரசனின் கோபம் மேலும் பொங்கி எழுந்தது. அதை அவன் ஒருவாறு அடக்கிக் கொண்டு சிந்தனை செய்து ஓர் முடிவிற்கு வந்தான். உடனே தன் சேனைத் தலைவர்களான விரூபாக்ஷன், யூபாக்ஷன், துர்த்தரன், பிரகஸன், பாஸகர்ணன் என்பவர்களை அழைத்தான். "சேனைத் தலைவர்களே ! நீங்கள் சிறந்த போர் வீரர்கள்; நீங்கள் ஆபத்தில் மதியிழக்காதவர்கள்; மனவலிமையுடையவர்கள்; வாயு வேகங் கொண்டவர்கள்; நீங்கள் இன்னமொரு பெருஞ் சேனை திரட்டி அக்குரங்கை அடக்குங்கள். அதனுடன் ஜாக்கிரதையோடு முனைந்து வெற்றி காணுங்கள். அது ஒரு சாதாரணமான குரங்கல்ல; அளவு கடந்த வலிவுற்ற பெரும் பூதம். தவத்தின் பயனால் நம்மை வெல்வதற்காக இது இந்திரனால் அனுப்பட்டிருக்க வேண்டும். நாகர்கள், யட்சர்கள், கந்தர்வர்கள், தேவர்

கள், அசுரர்கள், மஹரிஷிகள், அவர்களின் கொட்டத்தை அடக்கியிருந்தேன். இக்காரணம் பற்றியே அவர்கள் என் மேல் வைரம் வைத்து இதை உருவாக்கி இங்கனுப்பி யிருக்க வேண்டும். அதை எப்படியாவது நீங்கள் கட்டிப் பிடித்துக் கொண்டு வரவேண்டும். அது வெறும் குரங்கென்று அலட்சியம் செய்ய வேண்டாம். முன்பு நான் ஸுக்கிரீவன், வாலி, ஜாம்பவான், நளன், நீலன் என்ற வானர வீரர்களைக் கண்டிருக்கிறேன். அவர்கள் சேனாதிபதியான த்விவிதன் முதலியோரையும் எனக்குத் தெரியும். அவர்களுக்கு இப்பயங்கரமான வேகமும் வலிமையும் இல்லை. இதன் காந்தியும், ஆற்றலும், பராக்கிரமும், தைரியமும், பலமும், புத்தியும், உற்சாகமும், இஷ்டமான உருவெடுக்கும் சக்தியும், அனாயாசமாய் வெற்றி காணும் வீரமும், அவர்களிடம் இல்லை. ஒரு பெரும் பூதம் குரங்குருவங் கொண்டு நம்மை வேதனை செய்ய வந்திருக்கிறதென நினைக்கிறேன். மகத்தான பிரயாசத்தால் நீங்கள் இதன் விஷமத்தை அடக்கவேண்டும். இதை நன்றாய் உணருங்கள். இந்திரன் முதல் எந்தத் தேவர்களும், அசுரர்களும், மானிடர்களும் உங்கள் முன் நின்று போரிடமாட்டார்களென்பதை அறிவேன். ஆகையால் தக்கபடி யோசித்துச் செயலாற்றுங்கள்! ஜாக்கிரதை!'' என்று எச்சரித்து அனுப்பினான். அவர்களும் தகுந்த சேனா பலத்துடன் வெளிக்கிளம்பினர்.

அவர்கள் ஹனுமானை அணுகினர். அவனைக் கண்டதும், தனது சுய தேஜஸ்ஸில் அவன் ஜொலித்துத் துலங்கும் இளஞ் சிங்கம் போல் உருமிக் கொண்டிருப்பதைக் கண்டு பிரமித்துப் போயினர். உடனே நாலு பக்கங்களிலும் ஹநுமானை வளைத்த வண்ணம் அணி வகுத்து வில்லில் நாணேற்றினர். அப்போது துர்த்தரன் என்பான் எஃகில் வார்த்தெடுத்த கூரிய ஐந்து பாணங்களை ஆஞ்ஜநேயன் தலையை இலக்காக வைத்து எய்தான். அவைகள் வந்து மாருதியின் சிரத்தில் தைத்ததும், எட்டு திக்குகளும் நிலை குலையும்படி பயங்கரமாய்க் கர்ஜனை செய்து உயரக் கிளம்பினான் மாருதி. துர்த்தரன் ஹநுமான் எதிரிற் சென்று பின்னும் பாணங்களை அடுக்கித் தாக்கினான். ஆகாயத்தில் தாவிக் கொண்டே அச்சரங்களை வீணாக்கினான் வாயுகுமாரன் உடனே ஓங்கி வளர்ந்தான். வெகு தூரம் வானில் விரைந்து பேரிடி போல் கர்ஜனை செய்துகொண்டே மகா வேகத்துடன் துர்த்தரன் ரதத்தில் மலை விழுவது போல் குதித்தான். அவ்வளவுதான்! அந்த வேகம் தாங்காது ரதம் முறிந்தது; துர்த்தரனும் கீழே வீழ்ந்து மாய்ந்தான்; குதிரைகளும் நசுங்கி உயிர் துறந்தன. ரதம் அச்சுமுறிந்து மண்ணில் புதைந்தது. உடனே, உயரத் தாவிப் பறந்து கடும்போர் புரியும் கவியை இலக்கு வைத்து, விருபாக்ஷனும் யூபாக்ஷனும் ரோஷம் தலைக்கேறி உரம் கொண்ட பெரிய சம்மட்டிகளை வீசித் தாக்கினர். கருட வேகங்கொண்ட கவிச்சிங்கன் சடக்கென்று ஒரு ஆச்சா மரத்தை அலட்சியமாய் பிடுங்கி, உயரக் கிளம்பி அவ்விரு ராட்சதர்கள் மேல் மோதி மாய்த்து வீழ்த்தினான். பின்பு ப்ரகஸன் என்பவன் தன் மூன்று சகாக்களை நாசமாக்கிய ஆஞ்ஜநேயனை வலுக்கொண்டு தாக்கினான். பாஸகர்ணன் என்பவனும் மிக்கக் கூறிய சூலத்தை ஹநுமான் மேல் வீசினான். மாருதியின் உடலிலிருந்து குருதி கிளம்பிற்று. அதை லக்ஷ்யம் பண்ணாமல் வாயு குமாரன் உயரக் கிளம்பி ஓர் மலைச் சிகரத்தைப் பிடுங்கி இவர்கள் மீது வீசி மோதிக் கொன்

றுன். பின்பு சேனையைச் சிதற அடித்து, ஒப்பிலா வேகங்கொண்டு வதைத்து மாய்த்தான். திரும்பியும் தோரணவாயிலில் யமன் போல் வந்து நின்றுன் வெற்றிவீரன்.

———

## 47. அக்ஷகுமாரன் வதம்

லங்காதிபதி சபா மண்டபத்தில் வீற்றிருந்தான். அன்று காலை லங்கை நகரம் முழுவதும் அலங்கோலமான அமளி கொண்டது. பூகம்பம் போல் அடிக்கடி அதிர்ச்சி; இடையிடையே அவ்வப்போது திரண்டு வந்த படையின் பேரிரைச்சல்; போர் முழக்கம்; அதற்கு மாருக கதிகலக்கும் வீர கர்ஜனை; அவற்றைத் தொடர்ந்து அரக்கர் அபஜயத்தை விளைவிக்கும் அவய ஒலி. இவற்றையெல்லாம் கேட்கக் கேட்க அரக்கவரசின் ஆணி வேர் ஆட்டங் கொண்டதைக் கண்டு அனைவரும் அச்சமுற்றனர். உள்ளம் அச்சமுற்றிருந்தும், அதை லட்சியஞ் செய்யாத ராவணேச்வரன் உணர்ச்சிகளை உள்ளடக்கி ஒவ்வொரு தடவையும் மாருதியின் வெற்றியைத் தூதர்கள் வந்து சொல்லச் சொல்ல, அந்தந்த சமயத்தில் சபையிலிருந்த போர் வீரர்களை ஒருவர் பின் ஒருவராக உற்று நோக்கிக் குரங்கைக் கட்டிப்பிடித்து வருமாறு நியமித்தவண்ணமிருந்தான்.

அரசன் பார்வை விழுவதன் முன்பே 'நான் முன்னே, நான் முன்னே' என்று அரக்கப் போர் வீரர்களும், அநேக நாள் உழைப்பின்றி ஓய்வுகொண்டிருந்த சேனைத் தலைவர்களும் அன்று புதிதாய் உதித்த ஓர் சூரியன் போன்ற குரங்கினுல் உண்டாகும் ஆபத்தை யுணர்ந்து, அதை அடக்கித் தங்கள் திறனை வெளிப்படுத்த ஆற்றல் கொண்டு முன் வந்த வண்ணமிருந்தனர். அவ்வாறு அவர்களுள் இப்போது முன்வந்தவன் தான் அரசனுடைய செல்வக் குமரன் அக்ஷன் என்பவன்.

உற்சாகத்தில் கண் முன் குதித்த தனயனை அன்புடன் வர வழைத்தான் தந்தை ராவணன். பொன்னுற் செய்த அற்புதமான அழகிய வில்லைக் கையிற்கொண்டு, வெற்றி காண ஆற்றல் கொண்ட பார்வையால் அரசனின் அனுமதியைப் பெற்று வானரனை நோக்கிபோகத் துடித்து நின்றுன். அனுமதியும் வரவே, அக்ஷன் பால சூரியனைப் போல் ஒளி வீசும் வனப்பு கொண்டு இரதத்தில் தாவிக் குதித்து, ஹநுமனிடம் விரைந்து வந்தான். அவன் துல்லியமான பராக்கிரமமுள்ளவன். தவப் பயனுலடைந்த தங்கக் கவசத்தைத் தாங்கியுள்ளவன்; சிங்க நோக்குடையவன்; மணி ரத்தினங்களிழைத்த பெருமை வாய்ந்த இரதம். அதன் உச்சியில் கதிரவன் கிரணங்களைக் கூசச் செய்யும் கொடி மரங்கள். மனோ வேகமாய்ச் செல்லும் எட்டு உயர்ந்த ராசிக் குதிரைகள் பூட்டப்பட்ட திவ்வியமான பொற்றேர்! இவனைக் கண்ட அரக்கர் குழாம் வாய் மூடாது அவனையே உற்றுக் கவனித்த வண்ணம் வழி நெடுக நின்று விட்டனர். 'அக்ஷகுமரனே வருகிருன்; இனி வெற்றி நமதே' யென்று அநேகர் உறுதி கொண்டனர். வழி நெடுக குதிரைகளின் கனைப்பு, யானைகளின் பிளிறல், இரதங்களின் ஆரவாரம், அரக்கர்களின் போர் முழக்கம், இவ்

வளவு கோலாகலங்களுடன் அக்ஷகுமரன் தோரண வாயிலருகில் வந்து சேர்ந்தான். சேர்ந்ததும் அவன் பிரளயகால அக்கினி போல் பிரகாசிக்கும் மாருதியைக் கண்டான். கண்டதும் பிரமித்துப்போனன்.

"என்ன ரூபம்! என்ன வலிமை! என்ன பராக்கிரமம்!' என்று ஆச்சரியங்கொண்டு வீரமே உருவெடுத்த வானரோத்தமனது வலிமையை மதித்து அவனைக் கௌரவத்துடன் பார்த்தான். வானரனின் வேகத்தையும், பராக்கிரமத்தையும் தனது வலிமையையும் ஆண்மையையும் ஆராய்ந்து திடப்படுத்திக் கொண்டு தனது தேகச்சக்தியைப் பெருக்கினன் அரசகுமரன். உடனே நாணேற்றி சீறும்பாம்பு போன்ற மூன்று பாணங்களை ஹநுமான் மீது எய்து அவனைச்சண்டைக்குத் தூண்டினன். பயனில்லை. வானர உருவம் வாளாவிருந்தது. அக்ஷன் மிகுந்த கோபமூண்டவனுய் ஹனுமான் மேல் விழுந்து அவனைத் தாக்கிப் போர் புரியலானன். இருவர்க்கும் பயங்கரமான போர் மூண்டது. கடைசியில் ஹநுமான் அக்ஷனை விளையாட்டாய் ஆகாயத்தில் தூக்கி எறிந்தான். மறுபடியும் இருவரும் கைகலந்தனர். இருவரும் சூரர்கள், தீரர்கள், வீரர்கள், இவர்களின் மல்யுத்தம் பூமி, கடல், ஆகாயம் இவைகளைக் கலங்கவைத்தது. அவர்களின் வீராவேசம் சூரியனையும், வாயுவையும் மங்கச்செய்தது. பின்பு மின்னல் போல் பாய்ந்து அக்ஷன் வில்லெடுத்து, விஷசர்ப்பங்களுக்கு நிகரான மூன்று பாணங்களை ஆஞ்ஜநேயன் மேல் விடுத்தான். மறுபடியும் சிரம், முகம், மார்பு இவைகளை இலக்காகக் கொண்டு சரமாரி பொழிந்தான்! சிறுவனென்றும், பேராற்றல் கொண்டு போர் புரிய வந்தவனென்றும் கண்டு மாருதி அக்ஷனை உற்சாகம் குன்ருதிருக்குமாறு அவனிடம் விளையாட்டாக யுத்தம் செய்து கொண்டிருந்தான். இவ்விதம் தயாதாட்சணிய முறையோடு மாருதி போர் புரிவதையறியாமல் அக்ஷன் ஹநுமானிடம் விரோத எண்ணம் வைத்து அரக்க புத்தியை வெளிக்காட்டி, மேன்மேலும் பாணங்களைத் தொடுத்துத் துன்புறுத்தவே, ஆஞ்ஜநேயன், "சரி இனி இச்சனியனை விட்டு வைப்பது ஆபத்தே; சிறுவன் விளையாடட்டும் என்று விட்டுக் கொடுத்தால், இக்கொடிய அரக்கனின் வலிவு ஏறிக்கொண்டே போகிறது. பரவி வரும் நெருப்பைத் தடுப்பதே உசிதமானது" என்று தீர்மானித்து, பறவைகள் தங்கள் மேல் விழுந்த நீர்த்துளிகளை உடல் சிலிர்த்தி உதறுவது போல் தன் உடம்பில் தைத்த பாணங்களை உதறி எறிந்துவிட்டுப் பயங்கரமான முழக்கத்துடன் உயரக் கிளம்பினன். மின்னல் கொடிபோல் அக்ஷனது ரதத்தின் மேல் பாய்ந்து அவன் இரதத்தையும் அதில் பூட்டிய குதிரைகளையும் மோதி அறைந்து மண்ணில் வீழ்த்தினன். மகாரதனை அக்ஷன் இதை சிறிதும் பொருட்படுததாது, முறிந்த ரதத்தை விட்டு ஆயுதங்கள் தாங்கி உயரக் கிளம்பி ஹநுமானைத் தொடர்ந்தான். மாருதி கடுங்கோபங் கொண்டு ஆகாயத்தில் ஒடித்திரியும் அவனைத் தாக்கி, கருடன் பெரும் பாம்பை பிடிப்பது போல் அவன் காலைப்பற்றி தலைகீழாகக் கரகர வென்று சுழற்றி விசையுடன் பூமியில் வீசி எறிந்தான். அவ்வளவு தான்! அக்ஷகுமாரன் அவயவங்கள் சுக்கல் சுக்கலாய் முறிபட்டு, எலும்புகள் நொறுங்கிப் பொடியாகி, தட்சணமே உயிர் நீத்தான். இந்த ராட்சதனை இப்படி ஆகாயத்தில் வீசி எறிந்து தரையில் மோதி நூறு சுக்கலாக்கிய பேராண்மை கொண்டு விளங்கிய வானர வீரனைக் கண்டு இந்திராதி தேவர்கள் புகழ்ந்தனர். அரக்க இனமே அன்று நடு நடுங்கிற்று! லங்கை நகரின் முடிவையும்

ராவணன் ஆட்சியின் வீழ்ச்சியையும் அன்றே கண்டு கதி கலங்கினர். வெற்றி வீரனை ஆஞ்ஜநேயன் மீண்டும் தோரண வாயிலில் வந்து சிம்ம நாதஞ்செய்து நின்றான். எஞ்சி நின்ற அரக்கர் உடனே ஓடி மறைந்தனர்!

———

## 48. ஹநுமான் பிரும்மாஸ்த்திரத்தை ஏற்று கொள்வது

குசலவர் என்ற பால சூரிய சந்திரர்கள் ஸ்ரீ ராமச்சந்திரர் முன்னிலையில் பத்தொன்பதாம் தினத்தில் கானம் செய்து கொண்டிருக்கிறார்கள்:—

போரின் முடிவையும் அக்ஷகுமாரன் வெற்றியையும் கேட்கப் பேராவல் கொண்டு காத்திருந்தான் அரக்கர் கோன். ராஜ சபை கலையவில்லை. எல்லோரும் கவலையுற்று வெளியே பார்த்தவண்ணம் காத்திருந்தனர். ஊர் எங்கும் ஒரே குழப்பம். எங்கு பார்த்தாலும் அணி வகுத்த படைகள். முதலில் அக்ஷனது புறப்பாட்டின் போது ஒரே ஆரவாரம்; அவனுக்கு அபஜயமேது என்று மன உறுதி பரவியிருந்தது. பின்பு தடார் தடாரென்று, இடிபோல் குரங்கின் அட்டகாசப் பேரொலி கேட்கவே, ஒருவர் முகத்தை ஒருவர் பார்க்கிறார்கள். அதோ! அக்ஷன் வானில் கிளம்புகிறான்! என்று ஒரே உற்சாகம் பின்பு ஒரே நிச்சப்தம். என்ன இது? ஏன் நிச்சப்தம்? போர் என்னவாயிற்று? வானரம் பிடிபட்டதா? என்னும் இக்கேள்விகளுக்கு பதிலில்லை!

கொஞ்ச நேரஞ் சென்றது. பின்பு சேவகர்கள் அரச சபைக்கு ஓடோடியும் வந்தனர். வந்தவர் முகங்கள் தொங்கின வண்ணம் சோபையிழந்து காணப்பட்டன. அதே சமயத்தில் "ஓ!" வென்று கூக்குரல் சபையோரைத் துள்ளிக் குதிக்க வைத்தன. ஆம்! அக்ஷகுமாரன் தரையில் மோதுண்டு சுக்கல் சுக்கலாய்ச் சிதறுண்டு மடிந்தான் என்ற செய்தி ஊர்ஜிதமாயிற்று. "ஹா! அக்ஷகுமாரனா மடிந்தான்! என்ன விபரீதம்!" என்று யாவரும் பிரலாபிக்கலாயினர். சபையில் இருள் சூழ்ந்தது, நிச்சப்தம். ஓர் பீதி உணர்ச்சி பரவி அமுக்கிற்று.

தன் எண்ணங்களையும், மனவோட்டத்தையும் அதிர்ச்சி உணர்ச்சிகளையும் கட்டுப்படுத்தினான் நெஞ்சங் கலங்கா தசகண்டன். சபையைக் கவனிக்கிறான். அப்பொழுது தன் மகன் இந்திராஜித்து போர் வேகங் கொண்டு துடிப்பதையும் கண்டு தலையை யசைத்தான். இந்திரஜித்து தன் முன் தட்சணம் தோன்றவே, அவனைப் பார்த்து அரசன் மொழிகிறான்:—

"அப்பனே! நீ அஸ்திர வித்தைகளைக் கற்றுணர்ந்தவன். ஆயுத பாணிகளின் முன்னணியில் நிற்பவன். தேவர்கள், அஸுரர்களைக் கலங்க வைப்பவன். இந்திரனிடம் பராக்கிரமத்தைக் காட்டினவன். எங்கும் மாயையால் செல்ல வல்லவன். பிரம்மதேவர் அநுக்கிரகத்தால் சிறந்த அஸ்திரங்களைப் பெற்றவன். உன்னை எதிர்ப்பவர் மூவுலகிலுமில்லை. தவ மகிமையைக் கவசமாகக் கொண்டு நிகரில்லா தோள் வலியும் புத்தி சாதுரியமுள்ளவன். மனத்தினால் நினைத்ததை வெற்றியுடன் நிறை

வேற்றுபவன். உனது தவபலமும் அஸ்திர பலமும் எனக்குக் கவலை ஏன்!'' என்று யாவரும் அறியத் தன் புதல்வனைப் புகழ்ந்து கூறினன் இலங்கேச்வரன்.

சபையிலுள்ளோர் ஒருவர் முகத்தை ஒருவர் உற்று நோக்கினர். அரசன் மனப் போக்கை உணர்ந்தார்கள். இந்திரஜித்தின் அஸ்திர சக்தியைப் பற்றியும் அவனுக்களிக்கப் பட்ட பிரும்ம தேவரின் வரத்தைப் பற்றியும் அதை மகனுக்குத் தந்தை நினைப்பூட்டியதையும் கவனித்தார்கள். ஆம்; வெறும் சஸ்திரங்கள் (ஆயுதங்கள்) கொண்டு இந்திரஜித் இந்த வானரனுடன் வெற்றி காண முடியாதென்று எல்லோரும் உண்மையை உணர்ந்தார்கள். உணர்ந்ததும் தங்களுக்குக் கிட்டிய பேராபத்தை உணர்ந்தனர். இப்போதும் தங்களையணுகிய பேராபத்தினின்றும் விடுவிக்க அரசனால் முடியும். ஸ்ரீ ராம பிரானிடம் ஜானகியைத் திருப்பி விடுவது தான் ஒரேவழியென்று விபீஷணன் முன்பே அரசனை எச்சரித்ததையும் அறிந்திருந்தார்கள். இனி, ராவணன் என்ன சொல்கிறன் என்று கவனிக்கிறார்கள்.

ராட்சதராஜன் சொல்லிக் கொண்டே போகிறன், ''வீர! கிங்கரர்கள் மடிந்தார்கள்; ஜம்புமாலி மாண்டான்; வீரர்களான மந்திரி குமாரர்களும் உயிர் துறந்தார்கள்; பின்பு நம்முடைய ஐந்து சேனாதிபதிகளும் எமலோகமடைந்தனர்; குதிரைகள், யானைகள், இரதங்கள், சேனைகள் யாவும் தவிடு பொடியாயின. இப்பொழுது உன் உடன் பிறந்த, உன் அன்பால் பராமரிக்கப்பட்ட பிரிய சகோதரன் அக்ஷனும் சின்ன பின்னமாய்க் கொல்லப் பட்டான். சத்துருக்களை வேரறுப்பவனே! உன்னிடத்திலுள்ள எம் மதிப்பு எல்லையற்றது. வல்லவனே! வானரத்தின் வலிமையை மனதில் வை. அதன் பிரபாவத்தை அறிந்து கொள். அஸ்திரத்தை உபயோகிப்பவர்களுள் நீ உத்தமன் என்பதை நினை. இந்த வானரன் விஷயத்தில் உன் சேனைகள் பயன்படா. வாளிகள் வலிவற்றுப்போம். வஜ்ராயுதமும் மழுங்கி விடும். இவனுடைய கதியோ வாயு தேவனுக்கும் கிடையா. அக்னி கல்பங் கொண்டவன் இவன். கேவலம் வெறும் ஆண்மையால் இவனை அடக்க முடியாது. ஆகவே, உன் அஸ்திர பலத்தையே நம்பி அதன் பிரயோகத்தையே கைக் கொள்வாயாக. உன் முயற்சி பலனடையட்டும். உனது தந்தையான நான் உன்னை போருக்கு அனுப்பி வைப்பது என் மனதைப் பிளக்கிறது. அரசன் நேரில் ஓர் அற்பத் தூதான குரங்கினிடம் போர் புரிதல் அரச தர்மத்துக்கு விருத்தமென்று நினைத்தே உன்னை அனுப்புகிறேன். சேனைத் தலைவர்களைத் தேர்ந்தெடுத்து அனுப்புவதே அரசன் முறையாகும். போரில் வெற்றி காண்பாய்,'' என்று ஆசி வழங்கினன்.

இந்திராதி தேவர்களின் பிரபாவங் கொண்ட இந்திரஜித் போருக்குச் செல்ல விரும்பி இறைவனை வலம் வந்தான். அரசன் அருளின ஆசி மொழியையும் போருக்குகந்த மதியுரைகளையும் மனத்தில் கொண்டு தந்தையை பணிந்தான். பிறகு சபையோரின் விடையையும் ஆசிகளையும் பெற்று, பருவ காலத்தில் கொந்தளித்தெழும் கடல் போல் சீறி வெளி வந்தான். போரின் வெற்றியில் உவகை கொண்டு திடமான மனத்தினனாய், நான்கு சிங்கங்கள் பூட்டிய எங்கும் தடையின்றிச் செல்ல

வல்ப திவ்வியமான காந்தி வீசும் ரதத்தில் உற்சாகத்துடன் தாவி ஏறி வீர விலாசத்தில் அமர்ந்தான். இரதமும் கிளம்பிற்று. இந்திரஜித் தேரிலேறித் தோரண வாயிலுள்ள குரங்கினிடம் வருகிருனென்றதும் அந்த லங்கா நகரமே திரண்டு வந்தது அச்சமயம்! தோரண வாயிலோ வெற்றி கமழும் போர்க்களமாய்த் திகழ்ந்தது. ஒப்பற்ற வீரமே உருவெடுத்து எதிர்க்கும் எச் சக்தியையும் ஒடுக்க வல்ல திடத்தில், ஜயக் கொடியை நிகர்த்த கைகளை ஆட்டி கம்பீரமாக வெற்றி விலாசத்தில் அங்குமிங்கும் ஊசலாடின பேருருவத்தின் அற்புதத் தோற்றத்தைக் கண்டு அப்படியே வாய் புதைத்து திகைத்து நின்று விட்டனர் அங்கு வந்தவர்கள்.

இந்திரனுக்குச் சமானனை இந்திரஜித் ஆஞ்ஜநேயனைக்கண்ணுறுகிருன். அவனே அசைவற்று அரக்கர் வரவுக்குக் காத்து நிற்கிருன், ஒரே வீர சக்தி ஊடுருவிப் பாயும் ஹநுமானது ஆற்றல் உணர்ச்சியை அறிகிருன்! கண்ணும் கருத்தும் மற்ற அவயவங்களும் மனோவேகமும் ஹநுமானை ஓர் அற்புத சிருஷ்டியாகத் துலங்க வைத்தன. அவன் அசைவற்று ஏதோ சிந்தனையிலிருக்கிருனென்றுணர்ந்து உடனே, இந்திரஜித் வில்லில் நாணேற்றுகிருன். அவ்வொளி பேரொலியாய் முழங்க, மாருதி அதற்கு வரவேற்பாக வீர கர்ஜனையிடுகிருன்.

பரா "கால தாமதம் செய்கிறேனே! இதோ ராமனிடம் செல்கிறே ரவ ன்றி அன்னையிடம் உறுதி கூறினேனே! இந்த அரக்க வதையில் ...சை கொண்டு அவர்கள் அரசனை அதன் மூலம் நேரில் காண எண்ணி ...த்துத் தங்குகிறேனே? நான் கொடுத்த உறுதிமொழியை நிறைவேற்றிவக்காது இன்னும் காலதாமதம் செய்கிறேனே! இது அபராதமல்லவா? ...ன்றெல்லாம் எண்ணுகிறதோ என்னவோ, அவன் மனம்.

இந்திரஜித்தைக் தன்னுடன் போருக்கு வந்திருப்பதை உணர்ந்து உற்சாகங்கொண்டெழுந்தான். உடனே கருநாகங்கள் போல் பாணங்கள் மாருதிமேல் சீறிவந்தன. அவைகளின் வேகத்தையும் கூட்டத்தையும் விலகாத இலக்கையும் கண்டு ஆச்சரியமடைந்து அவைகளை வீணாக்கி வானில் கிளம்பினன் வாயு குமரன்! ராட்சத இளைஞன் மாருதி செல்லும் கதியை மதிப்பிட்டு அங்கங்கு சரக் கூடுகள் கட்டினன். அவைகளுள் அகப்படாமல், கீழும் மேலும் நாலுதிக்குகளிலும் தாவிப் பாய்ந்து, குனிந்து, மேலெழுந்து, நழுவிப் புரண்டு, நுழைந்து, நகர்ந்து பிரித்துச் சிதறி உதறி, இலக்குக் கெட்டாது வானில் ஓடி விளையாடுகிருன் மாருதி. இந்திரஜித்தும் கை சோர்ந்தவனல்ல. புதிது புதிதான, வெவ்வேறு தன்மையான பாணங்களை நூதன விசைகளில் இடைவிடாது இடைவெளியின்றி விடுத்து அவற்ருல் ஹநுமானை அடக்கப் பார்த்தான். அவனே, பாணங்கள் புறப்படும்போது காண்பித்த இலக்கை அவைகள் வந்து சேர்வதற்குள் மாற்றிவிட்டுப் புதிதுபுதிதாக இலக்கைக் காட்டியவண்ணம் அங்கும், இங்கும், எங்கும், நிரம்பியுள்ளவனைவும் அத்தட்சணமே மறைந்தவனையும் வில் பிடித்தவனை பிரமிக்க வைத்தான்! மிகவும் அற்புதமான யுத்தம், ஒரு சார்பில் வில் யுத்தம்; மற்றொருபுறம் பிரமிக்கவைக்கும் வாளிக்கிலக்காகாத தாவிக் குதிக்கும் வேகம்! தந்தையின் பார்க்கத்தில் உலவித் தந்தையின் சக்தியை நிரூபிக்கும் தனயனான ஆஞ்ஜநேயன் இந்திரஜித்தின் வில்

திறமையை முற்றும் பதம் பார்த்து வேடிக்கை காண்பித்த அபூர்வ யுத்தம் மற்றவர்களிடத்தில் உக்கிரம் காட்டிக்கடுதியில் ஒங்கியறைந்து பொடியாக்கின வகையைச் சிறிதும் நினைக்காது இந்திரஜித்தை கைசளைக்கவைப்பதிலேயே நோக்கங் கொண்டு தற்பாதுகாப்பு என்ற உயரிய போர் முறையை தீட்டிய மல்யுத்தம் அது! நாகர்கள், யட்சர்கள், தேவர்கள், வானில் சஞ்சரிக்கும் மற்றவர்களும் இவ்வற்புத யுத்தத்தைக் காண ஆகாயத்தில் கூடிவிட்டனர். ராட்சத வீரமைந்தன் ஹநுமான் மர்மத்தை அறிய அரும்பாடு பட்டான். ஹநுமானும் அரக்கனின் மர்மத்தையறிய பரீட்சையை வானில் வரைந்து காட்டினன். இரு எண்ணங்களும் பலனடைவதாகக் காணோம். குறிவைத்துப் பாண வரிசை தொடுக்கிருன் ராவணனின் மகன். ஆனால் வீண் போகாத சரங்கள் வீணய் வீழ்ந்தன! வெகு நேரம் வில்வரிசையைக் காட்டி வெற்றிக் காண விம்மினன், பயனில்லை. மின்னல்கொடிபோல் மின்னி மறைகிருன் மாருதி! கையிலிருந்து மீன் நழுவது போல் வான் நுனியிலிருந்து தாவித் தாண்டித் திரும்பித் தோன்றுகிருன். தீரவானரன் இந்திரஜித்தை எதிர்த்துத் தாக்க வரவில்லை, அவன் முன்பு வந்தவர்களின் தேரின் மேல் தாவிக்குதித்துப் பொடியாக்கினன் என்பது அரக்க இளைஞனுக்கு நன்கு தெரியும். இச்சமயம் ஹநுமான் அவ்வாறு ஆற்றலைக் காட்டவேயில்லை. இந்த யுத்தமே ஓர் தனிப்போக்கில் சென்று கொண்டிருந்தது பாணத்தை விட்டான் அரக்கன். அதிலிருந்து அப்பால் நின்ருன் ஹநுமான். இப்படி இந்திரஜித்தின் இலக்குக்குத் தப்பி, அவன் ஆத்திரத்தை அதிகப் படுத்திக் கடைசியில் இப்போரின் இறுதி லட்சியம் 'இக்குரங்கை விடு எப்படியாவது பாணங்களால் கட்டுப் படுத்துவதே' என்ற ஓர் புது யுக்தி பராதோரணையை ஊற்றுவித்தான் வாயு குமாரன். வேண்டியளவு வாளிகளைப் விடுவித்தான் அரக்கர் கோமகன். எல்லாம் வீணயின! தந்தை எச்சரித்த படி ஆயுதங்கள் இவனிடம் பயனற்றவையே என்றுணர்ந்தான். "என்னே, ஏன் இவன் தகையவில்லை ? என்னை என்ன காரணத்தால் தன் கையால் ஓரடி கூடக் கொடுக்காது பாணங்களின் எல்லையிலேயே நிற்கிருன் இவன்" என்று இந்திரஜித் தன் மனதுடன் நுண்ணறிவைத் திரட்டி துருவிப்பார்த்தான், வாயுகுமரன். வாயுவின் சக்தி கொண்டவன். இவனுக்கு வதை என்பது முற்றிலும் விலக்கானது என்று சடக்கென்று உண்மை உதித்தது ஆம்! இவன் கொல்லப்பட முடியாதவன்" என்று உணர்ந்ததும் சிந்தனையிலாழ்ந்தான். இவனே நம்மை இம்சிக்கவில்லை சேனையையும் தாக்க நெருங்கவில்லை. ஒரு பக்கமான யுத்தம் இது என்று எல்லோர்க்கும் நிரூபிக்கிருன் போலும்! என்ற எண்ணம் பிறந்ததும் "ஆஹா என்னைச் சோதிக்கிருன், இவன் பாணங்களும் வில் திறனும் எம்மாத்திரம்? என அவைகளை வீணக்கிச் செய்து காட்டுகிருன் அந்த அளவு என்னை இழிவுறச் செய்கிருன்" என்று சீற்றங் கொண்டான் இந்திரஜித்.

"சரி! சஸ்திரத்தை விட்டு அஸ்திர பலத்தைக் காட்டுகிறேன். இவனைக் கொல்லுவதென்பதில்லை. இவன்தான் வாயு குமரன் என்பதை நன்கு விளக்கிக் காட்டினன். எல்லா தேவதைகளையும் அடக்கியாளும் வலிமை பூண்ட பிரும்மதேவனுல் எனக்களிக்கப்பட்ட பிரும்மாஸ்திரத்தை இவன் மீது உபயோகிக்கிறேன்." என்று தீர்மானித்தான். மறுகணமே மந்திரத்தை உச்சரித்து பிரும்மாஸ்திரத்தை விடுத்தான். பிரும்மாஸ்திரமென்னும் சக்தி வீண் போகாததல்லவா ? உடனே அது சீறி வந்து

வானில் விளையாடும் வானர வீரனைப் பற்றியது. திடீரென்று அவன் கை கால்கள் அசையாமல் நின்றுவிட்டன. அஸ்திர சக்தியால் கட்டுண்டு அதே நிமிஷம் கீழே விழுந்தான் ஆஞ்ஜநேயன்.

அவ்வளவு தான்! விண்ணை விட்டு மண்ணை தொட்டதும், (ஆகாய மார்க்கத்தில் சஞ்சரிப்பவனைப் பூமியின் ஆகர்ஷண சக்தி பற்றியதன் விளைவோ என்னவோ) உடனே மாருதி தன் சுய நிலையையடைகிறான் ஞாபக சக்தியும் ஊற்றெடுத்தது. "ஓகோ! இது பிரம்மாஸ்திரமல்லவா? ஆம்; இதை மரியாதையுடன் ஏற்றுக்கொள்வது என் கடமையாகும் அதனால் எனக்குப் பயமோ, ஆபத்தோ ஒன்றுமில்லை. பிரம்மதேவர் 'என் அஸ்திரத்திற்குக் கூட நீ உட்பட்டிருப்பது ஒரு நொடிப் பொழுதேதான்' என்று அனுக்கிரகம் செய்திருக்கிறாரன்றோ? ஆகவே சிறிது அச்சமில்லை; கவலையுமில்லை; எனினும், இவ்வரக்கனுக்கு அது தெரியாது. எந்த அஸ்திரத்திலிருந்தும் விடுவித்துக் கொள்ளும் சக்தி என்னிடத்திலுண்டு என்று இவன் அறியாமலே இதைக் கையாண்டிருக்கிறான். ஆகையால் பிதாமகரான பிரம்மதேவரைக் கௌரவிக்க வேண்டும். மேலும், அதனால் எனக்கு நற்பயனே விளையும் என்று நினைக்கிறேன். என்னைக் கட்டுண்டவனாக மதித்து இவர்கள் என்னை ராவணனிடம் கொண்டு செல்வார்கள். அவனிடம் உரையாட வேண்டுமென்ற என் எண்ணமும் பலிதமாகும் என்று எண்ணி அப்படியே கை கால்களை ஆட்டாமல் அசைவற்றுக் [கிட]ந்தான் அஞ்ஜனைச் செல்வன். அச்சமுறுகிறவனாகவும் காட்டவேண்டி [கூச்சலிட்டு கத]றிக் கோஷமிட்டால், தன்னை அடிபட்டு விழுந்தவனாகக் கண்டு கட்டிப் [பிடி]த்து ராவணனிடம் இழுத்துச் செல்வார்கள் என்று எண்ணினான்.

[பிரும்மாஸ்திரம் என்ற மந்திர சக்தியினால் ஹநுமான் கட்டப் படுகிறான். ஆனால் அதிலிருந்தும் தனக்கு ஒன்றும் ஆபத்தில்லை என்று உணர்ந்தவன். ராவணனிடம் தன்னை இழுத்துச் செல்வதற்கு இஃதோர் நல்லுபாயம் என்று எண்ணுகிறான் எனினும் ஸ்ரீ ராகவனால் அனுப்பப் பட்ட தூதன். அதிவீரச் செயல்கலாற்றிய தீரன்; இழிவான பிராணியை இழுத்துச் செல்வது போல், தன்னை தரையில் இழுத்துச் செல்வதைச் சகித்துக் கொள்ள விருக்கிறானே தவிர இது தன் எஜமானனின் கீர்த்திக்கு கந்ததாவென்று நினைத்தவனில்லை. இவ்விதம் இழுக்கப் பட்டுப் போவது இழிவானதுதான். இத் தண்டனையை ஏன் அநுபவிக்க வேண்டும்? அன்னையிடம் சொல்லிய படி நடவாது கால தாமதஞ் செய்வதின் விளைவென்று உணருகிறானோ என்னவோ? அதைப் பொறுத்துக் கொள்ளத் தயாராகிறான். அவன் நினைத்தால் வேறு விதமாக ராவணனைக் கண்டு பேசி விட்டுப் போவது முடியாத காரியமா? ஒன்றும் செய்யாது கட்டுப் பட்டவனாக ஒரு வித சேஷ்டையு மில்லாது ஒடுங்கிக் கிடக்கிறான்.]

சத்துருக்களை ஒழிக்க வல்லவனான ஹநுமான் அப்பொழுது செயலற்றிருப்பதாக அறிந்து அரக்கர்கள் அவனைச் சணல் கயிறுகளாலும் மரப்பட்டைகளாலும் கெட்டியாகக் கட்டி விட்டார்கள். ஆனால், கயிற்றினால் கட்டப் பட்டவுடனேயே பிரமன் கட்டு அவனை விட்டகன்றுவிட்டது. அச் சிறந்த அஸ்திரம் மற்றொரு பிணிப்பை ஏற்றுக் கொள்ளாதென்பதை அறிந்தவர்களா அவ்வரக்கர்கள்? ஆனால் இந்த உண்மையை இந்திரஜித் மாத்திரம் அறிந்து கொண்டான், கயிறுகளால் கட்டிப் பட்டவுடனேயே

அஸ்திரத்தின் கட்டினின்றும் ஆஞ்ஜநேயன் விடுபட்டு விட்டான் என்று கண்ட அரக்க இளவரசன் ''ஐயோ! என் முயற்சியெல்லாம் வீணாகிவிட்டதே! பிரும்மாஸ்திரம் வேறொரு கட்டை ஏற்றுக் கொள்ளாதே. பெருங் காரியம் பழுதாகி விட்டதே! பிரும்மாஸ்திரம் பழுதாகி விட்டால் வேறோர் அஸ்திரமும் இவனைப் பிணிக்காதே. இனி, இவனிடமிருந்து நமக்கெல்லோர்க்கும் பிராணபத்தே', என்று கவலை யடைந்தான்.

மாருதியை உற்று நோக்குகிறான். அவனோ பிரும்மாஸ்திரக் கட்டினின்று விடுபட்டவனாகக் காட்டிக் கொள்ள வில்லை. இதற்குக் காரணமென்னவென்று சிந்திக்கிறான் இந்திரஜித். ஒரு வேளை ஹநுமான் இதை அறிய வில்லையா? அறிந்தும் வேண்டுமென்று கட்டுண்டவன் போல் பாசாங்கு செய்கிறானா? அதன் கருத்தை அறிய வேண்டுமென்று அவாக் கொண்டு அரக்கர்களை எச்சரிக்காது பார்த்து நிற்கிறான்.

அரக்கர்கள் அநேகர் கட்டப் பட்ட ஹநுமானை இழுத்துப் போக வாரம்பிக்கிறார்கள். அப்பொழுது இன்னுஞ் சிலர் கட்டைகளாலும் முட்டிகளாலும் கட்டுப் பட்டவனை அடித்துக் குத்தித் துன்புறுத்துகிறார்கள். கடைசியில் அவர்கள் அவனைக் கர கர வென்று இழுத்துச் சென்று அரசன் முன் கொண்டு போகிறார்கள். ''இவனைக் கொல்ல வேண்டும், கொளுத்த வேண்டும், தின்ன வேணடும்'' என்றும் இரைச்சலிட்டனர். அரச சபை முன் கொண்டு வரப் பட்ட ஆஞ்ஜநேயன் அவ்வழகிய மாளிகையையும் சபையையுங் கண்டு கம்பீரமாக அமர்ந்த அரக்க அரசனைப் பார்த்து ''வானர அரசன் ஸுக்ரீவனின் தூதன் நான்'' என்றான்.

———

## 49. ராவணன் சபையில் ஆஞ்ஜநேயன் கண்ணோட்டம்

ஸ்ரீ ராகவனிடமிருந்து வந்த தூதன் என்று தன்னை அறிமுகம் செய்து விட்டுச் சபையையும், அதன் நடுவே கம்பீரமாய் வீற்றிருந்த அரக்கர் அரசனையும் நன்கு கவனிக்கிறான் வாதாத்மஜன், பத்து மணி மகுடங்கள். விலை மதிக்க இயலாத சிம்மாசனம், வீரம் பொலிந்து செங்கோல் செலுத்தும் மேன்மை, தனிப் பெருமை வாய்ந்த சபையோர்கள், மந்திரிகள், சேனைத் தலைவர்கள். எனினும் அரக்கத் தன்மை யுற்றவர்கள். யமனும் அஞ்சத்தக்க பயங்கரத் தோற்றம். அருவருப்புக் கொள்ளத் தக்க அவயவங்கள், ராட்சஸப் பிறவிக்கு இயற்கையா யமைந்த அசூயை விளங்கும் பழக்க வழக்கங்கள். அவர்களுக்கதிபதியோ-என்ன தோற்றம்! சிவந்த தணல் கக்கும் கடுமைத் தன்மை யுற்ற அகங்காரப் பார்வை, புலியின் கோரைப் பற்கள். பருத்த கறுத்த உதடுகள், ஆலவட்டம் கையிலேந்தி நாற் புறமும் நிற்கும் மடந்தையர். துர்த்தரன், பிரஹஸ்தன், மகாபார்ச்வன் நிகும்பன் எனும் நான்கு மெய்க்காப்பாளர், இவர்களையெல்லாம் நன்கு கவனித்தான் மாருதி பின்பு அமைச்சர்களைக் கண்ணுற்றான். இவர்களோ மகா மந்திரிகள். ஏன் இப்படி அரசனிடம் பயங் கொண்டிருக்க வேண்டுமென்று மறுபடியும் ராவணனைக் கவனித்தான் வாயு குமாரன். ''ஆஹா! என்ன ரூபம்! என்ன வீரியம்! என்ன ஆற்றல்! என்ன பராக்கிரமம! இந்த அரக்க வரசன் திறத்தில் நல்லிலக்கணங்கள்

யாவும் எவ்வாறு பொருந்தியிருக்கின்றன. எனினும் எல்லாவற்றையும் அடக்கி மேலோங்கி விளங்கியது அவன் மூர்க்கத் தனம், பிடிவாதம். அதற்கு உயிரையே விடுபவன். அதருமத்திலிறங்காது நன்னெறியிலிருந்தால் தேவ லோகமே இவனதாகி விடும். ஆனால் இவன் கொடுமைச் செயல்கள், இரக்க மற்ற நடவடிக்கைகள், அதருமமான தீத் தொழில்கள் இவை யாவும் இவனை உலக விரோதிகளில் முதல்வனாக்கி வைத்தன. இப்பாவி என்றழிவனோ வென்றல்லவா உலகமே ஒடுங்கி அஞ்சிப் பதை பதைத்துக் கிடக்கிறது? இவனை எதிர்க்க எவரும் எண்ணங் கொள்ளக் கூட தைரிய மில்லாதிருக்கின்றனர்.'' என்று பரித வித்தான் கவிய மைச்சன். ''ஆம், இவனையும் ஒழிக்க, இவன் ஓர் அற்பத் துரும்பு போல் அறவே பூண்டோடு களைந்து விட, ஒர் மானிடன், உயர் திரு ஒப்பற்ற மானிடன் தீர்மானித்து விட்டான். இனி அவ் வீரப் பிரபுவினி மிருந்து இவன் மீள்வதேது?'' என்று ஸ்ரீ ராமனை நினைத்தான் ராம தூதன்.

---

## 50. அரக்கரரசனுக்கு ஹநுமானின் அறிவுரை

எதிரில் நின்று அஞ்சா நெஞ்சத்துடன் தன்னை ஏறிட்டுப் பார்க்கும் [illegible]ங்குருவத்தைக் கண்டு அடங்காச் சீற்றங்கொண்டான் இராவணேச்[illegible]ன். இவனுக்குத்தான் என்ன வீரம்? மனக் கணக்கில் என்னை வரை[illegible]டுகிற இவன் யார்? என்ன திமிர் படைத்த ஆணவப் பெருக்கு! என்று [illegible]தறுகிறான். மாருதியின் உற்சாகத் தோற்றமும் சிறு மன அமைதியும் [illegible]ர் அரும் பெருங் கருமத்தை சிறப்பாய்ச் சாதித்து முடித்த வெற்றி விலாசமும் அவனை மனங் கலக்க வைத்தன. ''இவன் யார்? என்ன அற்புத வீர உருவம்! ஒரு வேளை இவன் நந்தி பகவானோ? முன்பு, கைலாசத்தை கலக்கிய போது எவரால் சபிக்கப்பட்டேனோ அவரே இவ்வுருவம் கொண்டு வந்தவரா? அல்லது, கையிலையில் பிரமத கணங்களில் ஒருவனை, நான் அம்மலையை அசைத்த போது, 'உன்னைப் பழி வாங்குவேன்'' என்று உறுதியிட்ட பாணாசுரனோ இவன்?'' என்று பலவாறு எண்ணிப் பிரகஸ்தனை நோக்கி ''இவன் விருத்தாந்தங்கள் கேட்கப் படட்டும். இவன் எங்கிருந்து வந்தவன்? வந்த கருத்தென்ன? வனத்தை அழித்ததேன்? அரக்கிகளை வெருட்டியதேன்? சேனைத் தலைவர்களை மாய்த்த காரணம் என்ன? இவ்யுத்தத்தால் இவனுக்கு ஆக வேண்டியதென்ன? எல்லாம் நன்கு விசாரிப்பாயாக'' என்றான். அரசன் ஆக்கினியைக் கேட்ட பிரகஸ்தனும் ஹநுமானை நோக்கி, ''கவியே! உனக்கு மங்களம். கவலையுற வேண்டாம். உண்மையையுரை, நீ இந்திரன் தூதனோ? குபேரன், யமன், வருணன் முதலிய தேவர்கள் உன்னை வேவு பார்க்க அனுப்பினார்களா? அல்லது எங்களை வெல்ல நினைத்து, திறலமைந்த திருமாலால் அனுப்பப்பட்ட தூதனோ? இந்த உன் குரங்குருவம் மாய ரூபம் தான் என்று புலனாகிறது. உனது பராக்கிரமம் ஒரு குரங்கிற்கேது? உண்மை யுரைத்தால் உயிர் தப்புவாய். ஒருவரும் புகமுடியாத இலங்கையில் நீ எவ்வாறு புகுந்தாய்? யாது காரணத்தால் அந்தப்புர வனத்தை அழித்தாய்?'' என்று சாவதானமாக வினவினான்.

ஆஞ்ஜநேயன் இவ்விறைக்களைப் பொருட்படுத்தாது ராவணனை ஏறிட்டுப் பார்த்து, "லங்காதிபதி! நான் இந்திரன் வருணன் முதலான தேவர்களின் தூதனல்லேன். குபேரனோடு எனக்குச் சிநேக மில்லை. விஷ்ணுவினாலும் நான் அனுப்பப்பட்டவனன்று. நான் வானரனே. என் பிறப்பும் அதுவே. இலங்கை அரசனை நேரில் கண்டு உரையாட வேண்டுமென்பது என் அவா. அந்நோக்கங் கொண்டே வனமழிக்கப் பட்டது. பின்பு யுத்தத்தில் ஆவேசங்கொண்டு அரக்கத் தலைவர்கள் என்னை எதிர்க்கலானார்கள். தற் பாதுகாப்பின் பொருட்டு அவர்களோடு பொருதி அவர்களை அழித்தேன். ஒன்றுரைப்பேன். இதை நன்கு கவனித்தல் வேண்டும். அசுரர்களோ, தேவர்களோ, பலவித ஆயுதங் களைக் கொண்டோ, அஸ்திரங்களாலோ என்னைக் கட்டுப்படுத்த முடியாது இது பிரும்மதேவர் எனக்களித்த வரம். அரசனை நேரில் காண இது ஓர் வாய்ப்பென்று, கட்டினின்று விடப்படினும் இன்னமும் கட்டுண்டது போலவே காட்டிக் கொண்டேன். அரச காரியமாக உம்மிடத்திற்கு வந்த வன் நான். அளவற்ற ஆணவச் சிங்கனை ஸ்ரீ ராகவரால் அனுப்பப்பட்ட தூதன் நான். உமக்கு நலன் பயக்கும் சில மொழிகளைக் கேட்பீராக" என்றான்.

---

## 51. ஆஞ்ஜநேயனின் இன்மொழி

இவ்வாறு வீரமொழி உரைத்த ஹநுமானை உற்று நோக்குகிறான் லங்கை அரசன். அம்மொழியின் உண்மையைப் பற்றிக் கவலையில்லை. தன்னைச் சூழ விருக்கும் பேராபத்தையும் உணர்ந்தவனாக வில்லை. அவனது மூர்க்கத் தனம் இயல்பான அரக்கத் தன்மை எத்தகைய மதியுரையையும் பொருட் படுத்தாது ஓர் தனிப் பிடிவாதக் குணம் ஒன்றே ஆட்சி புரிந்து கொண்டிருந்தது. இத்தகைய மனப் பான்மை கொண்டவன் எவ்வகையில் அறிந்து கொள்வானோ அவ்வித முறையிலே பேச வாரம்பிக்கிறான் வாயு குமாரன்.

"ராட்சத மன்ன! ஸுக்கிரீவன் ஆக்கினை யால் இங்கு வந்தவன் நான். சகோதர முறையிலே அவர் உங்களுக்கு க்ஷேம சமாசாரம் சொல்லச் சொன்னார். உங்கள் நலனை உத்தேசித்தும, தருமத்திற்குகந்ததும் இகத் திலும், பரத்திலும் ஹிதத்தை அளிக்கும் செய்தியை உம்மிடம் சொல்ல என்னை அனுப்பி யிருக்கிறார். கேளும் சொல்கிறேன். உலகத்துக்குத் தந்தை போன்ற பந்துவும ஏகசக்ராதிபதியாய் நல்லாட்சி செய்து வந்த வருவான தசரதர் என்ற ஓர் பிரதாப மன்னர் இருந்தார். அவருக்கு மூத்த குமாரர் ராமனெனப் படுவர். மகா காந்தி பொருந்தியவர், எல்லையற்ற தோள் வலிவு கொண்டவர், தருமப் பிரபு, அவர் தந்தையின் வார்த்தையை நிறைவேற்ற தரும வழியையே பற்றி தம்பி லட்சுமணருடனும் மனைவியுட னும் நாட்டை விட்டுத் தண்டக வனத்தில் வாசஞ் செய்து வந்தார். அவருடைய பத்தினியும், பதியையே பிராணனாகப் பின் பற்றியவளும், மகாத்மா ஜனக மகாராஜாவின் பெண்ணுமான ஸீதாதேவி ஒரு நாள் காட்டில் காணாமற் போய் விட்டாள். அவளைத் தேடி கொண்டு அந்த

ரகுநாதர் தம்பியுடன் ரிச்யமூக மலையையடைந்து அங்கு வசித்து வந்த ஸுக்கிரீவரிடம் நட்புக்கொண்டார். பின்பு ஸுக்கிரீவருக்கு வானரராஜ்ய மளிப்பதாக ஸ்ரீராகவர் வாக்களித்தார். ஸுக்கிரீவரும் ஸீதையை வானர சைனியங்களைக் கொண்டு தேடிக்கண்டு பிடித்துத் தருவதாக வாக்களித்தார். அதன் பின்பு தாசரதி வாலியைப் போரில் கொன்று ஸுக்கிரீவரை அரசராக்கினர்.''

ஹநுமான் இன்னும் சொல்கிறன்:—

''ஸுக்கிரீவர் அரசரானர், அரக்கர் மன்ன! வாலி என்ற வானர வீரரை நன்கறிவீரல்லவா? அவ்வொப்பற்ற வீரர், ஸ்ரீராகவரால் விடப்பட்ட ஒரே பாணத்தால் அடிபட்டு உயிர் துறந்தாரென்றல் ராம பாணத்தின் சக்தியைப்பற்றி நான் சொல்லவும் வேண்டுமா? பின்பு ஸுக்கிரீவர் வானர அரசரானதும் தான் ராமனுக்குக் கொடுத்த வாக்கின்படி அன்னை ஜானகியைத் தேடிக்கொடுக்க முற்பட்டு வானர சைனியங்களனைத்தையும் வரவழைத்தார். அவர்கள் வந்ததும் நான்கு திக்குகளிலும் ஸீதாபிராட்டியைத் தேடிவரும்படி கடும் உத்திரவிட்டு அனுப்பினர். அவரது கட்டளைப்படி எல்லாத் திசைகளிலும் அவர்கள் அன்னையைத் தேடி வருகிறார்கள், அவர்கள் எல்லோரும் தலை சிறந்த வீரர்கள். சிலர் மகா பலவான்கள். கருடனின் வேகங்கொண்டவர்கள். இன்னுஞ் சிலர் வாயு போல் எங்கும் தடையின்றிச் செல்ல வல்லவர்கள், வானரச் சேனைகள் ஆயிரக்கணக்கில் எல்லாத் திக்குகளிலும் விரைந்து சென்றிருக்கிறார்கள். கீழும் மேலும் குகைகளிலும், நதிகளிலும், மலையுச்சிகளிலும், வனங்களிலும், நகரங்களிலும், நாடுகளிலும் இன்னும் தேடிக்கொண்டிருக்கிறார்கள். நானும் அப்படித் தேடுபவர்களில் ஒருவன், வாயு தேவருக்கு அஞ்ஜனு தேவியினிடம் உதித்த புதல்வன் நான். ஹனுமான் என்று என்னை அழைப்பார்கள். ஸ்ரீ ராமச்சந்திரரின் மனைவியான ஸீதாதேவியின் காரணமாக, அவளைத் தரிசிக்க வேண்டி நூறு யோஜனை கொண்ட கடலைத் தாண்டி வந்தேன். இங்கு வந்து எங்கும் தேடினேன், அப்பொழுது அந்த ஜனகரின் திருமகள் உமது கிருகத்தில் காணப்பட்டாள். என்ன ஆச்சர்யம்!

'' எல்லாம் அறியும் மதிமானுகிய நீர் இதைக் கவனிக்க வேண்டும். தருமத்தையும் அதன் பயனையும் நன்கறிந்தவர் நீர். அரும் பெருந்தவம் செய்து மேன்மை பெற்றவர். ஆகவே, வேறொருவர் மனைவியை பலாத்கரித்து அடைத்துப் போட்டிருப்பது உம்மைப் போன்றவர்களுக்கு அடுக்காது. உம்மைப் போன்ற அறிவாளிகள் தரும விரோதமான காரியங்களை மனத்தினலும் நினையார்கள். இத்தகைய அதருமச் செயல் அபாயம் விளைவிக்குமென்றும் இனத்தையே வேரோடு களையவைக்குமென்றும் உணராதவரா நீர்? அறிந்தும், தரும விரோதமான காரியத்தைப் பற்றியிருப்பது முறையாமோ?

''நீதிநெறி முறையொருபக்கமிருக்க, அநுபவமுறையிலும் இதை நன்கு கவனித்தல் வேண்டும். என்னை அனுப்பி வைத்த ஸ்ரீராகவரைப் பற்றியும் அவர் தம்பியான நிகரற்ற லட்சுமணரைப் பற்றியும் நீர் அறியாதவரா? தேவர்களும், அசுரர்களும், மானிடர்களும், எவர்களும், ராம கோபத்திலிருந்தோ, லட்சுமணனின் பாணங்களிலிருந்தோ, தப்புவதென்பதுண்டோ? அரசே! நான் சொல்லவும் வேண்டுமா? ஸ்ரீ ராகவனிடத்தில் அபராதஞ்செய்தவன் மூவுலகிலும் தப்பிப்பிழைப்பதேது.

[“நான் சொல்லும் வசனத்தை வெறும் புகழுரையாகக் கொள்ளல் வேண்டாம். ஸ்ரீராகவன் ஓர் அமானுஷ்யன், தெய்வப்பிறவி, இறைவனை யொத்தவர், பரம்பொருள் சக்தி கொண்டவர் என்று நான் சொல்லவில்லை. எல்லோரையும் போல் அவர் ஒரு மானிடர். மனித குலத்திலுதித்தவர். மானிட இயற்கை கொண்டு மானிட மதியையும், மனத்தையும், மாண்பை யும், எண்ணத்தாலும், நடத்தையாலும், செயலாலும் மேன்மையுறச் செய்து, மானிட சமுதாயத்தை மேம்பட வைக்கும் உத்தம வாழ்க்கையின் வழிகாட்டி என்பதைக் கவனத்தில் வைக்க வேண்டும். பெரும் பாக்கியம் பெற்றவர். பிறப்பிலிருந்தே ஒப்பற்ற மேன்மை பயக்கும் வாய்ப்பு பெற்ற வர். ஒப்புயர்வில்லாத அதிர்ஷ்டசாலி என்று வர்ணித்துவிட்டு, சமுதாயத் தினின்று உயர் மேடையில் ஒதுங்கி நின்று எளிய வாழ்வைப் பரிகசிப்பவ ரல்லர். அதில் கலக்காது, அதன் இன்னல்களை அறியாத, அரிய பெரிய பேறுபெற்ற பிறப்பிட பாக்கியத்தின் செல்வச்சீமான் என்றும், தனக்கும், பாமர மக்களுக்கும் தொடர்பற்ற பெரிய இடத்தான் என்றும் எண்ணங் களை எழுப்புவரல்ல. நம் போன்றவர்; நம் இன்னல்களில் உழல்பவர்; நாடின்றி, வீடின்றி, சரியான உணவின்றி, காட்டில் காலங்கழித்து விஷ ஜந்துக்கள், கொடிய விலங்குகள், அரக்கர்கள், பருவகாலக் கொடுமைகள் இவைகளுக்கெல்லாம் தலை கொடுத்து, மனஞ்சிதறாது தருமத்திலும், கட மையிலும், தன்னலமற்று, பிறர் சேவையிலேயே வாழ்க்கையைப் புகுத்தி, அதன் இயல்பாகவோ, விளைவாகவோ தன் மனைவியையேப் பறிகொடுத் துத் தவிக்கநேரிடினும் திடமனதில் உறுதிகொண்டு, கைசோராமல், இடைவிடா முயற்சியில் மனைவியைத் திரும்பியடையும் பிரயாசையில் முனைந்து, ஒவ்வொரு ஜீவனுக்கும் எத்தகைய இன்னலுறும் வாழ்க்கை யிலும் தன் முயற்சியையும், கடமையையும், தருமத்தையும் கைவிடாது செய லாற்றிவரத் தலை சிறந்த துணைவனாய்த் திகழ்ந்து, நம்மைத் தன் வழியிலே அழைக்கின்றார் அப்புருஷோத்தமன் என்பதையும் மனத்தில் வைக்கவும். அத்தகைய இயல்பினருக்கு இவ்வுலகிலன்றி, எவ்வுலகத்திலும் இசை யாதது இனி இல்லையெனும் உண்மையை நிலை நிறுத்தும் மன வலிவு அமையப் பெற்றவர். அவ்வலிவே தெய்வ வலிவு, எதையும் ஆற்றியமைக் கும் அற்புத வலிவாகும். எதிர்க்க நினைக்கும் எச்சக்தியையும் அழித்து விடும், உயர் திருமானிட சக்தியே அது. இவன் திறனையும், ஆற்றலையும் ஆணவத்தையும் அளவிடற்கரியது. ஓங்கி வளர்ந்து, உயர்ந்து, வானைத் தொட்டு இறைவனையடையும் சக்தியது என்று அறிவீராக”, என்று மானிட வர்க்கத்தை உயர்த்துவதாகவும் அமைகின்றன மாருதியின் அறிவுரை.]

ஆஞ்ஜநேயன் மேலும் சொல்கிறான்:— ஆகவே நான் சொல்வது மூன்று காலத்திற்கும் உகந்த நன்மை பயக்கும் உண்மையுரை என்று கொள்ள வேண்டும். அறநெறியையொட்டிய உரை; உமக்கு நீண்ட பாக்கியத்தைத் தேடித்தரும் உரை; இதைக் கவனிப்பீராக. மானிட உலகில் தேவன் போன்றவரான ஸ்ரீ ராகவரிடத்தில் அவர் மனைவியைத் திருப்பிச் சேர்த்துவிடும். இல்லையேல் உமக்குப் பெரும் ஆபத்து நேர விருக்கிறது. தேவியைக் கண்டேன். எங்கு, எவ்வாறு, எந்நிலையில் இருக்கிறாளென்று நான் அவருக்குத் தெரிவிப்பேனாகில், பின்பு உம் ஜீவ னும், உம் நகர இருப்பும், அவர் கையிலிருப்பதென்று சொல்லவும் வேண்டுமா?

"அன்று அக்கானகத்தில் காணாமல் போனவள் இன்று உமது கிருகத்தில் சிறைபிலிருக்க என்னால் காணப்பட்டாள். இதை நான் ஸ்ரீ ராகவரிடம் தெரிவித்துவிட்டதும் மேற்கொண்டு ஆக வேண்டியதைச் செய்து முடிக்க அவர் ஒரு கணமும் தாமதியார். அரசே! ஸீதா பிராட்டி எல்லோராலும் துயரத்தில் ஆழ்ந்திருக்கிறார். இதன் விளைவு என்னவாகுமென்று சிந்தனை செய்ய வேண்டுகிறேன். அவள் ஐந்து தலையுடைய கொடும் மஹா சர்ப்பமென்று நீர் உணர்வீராக. விஷ சர்ப்பத்தை வீட்டில் வைத்துக்கொள்வது மதியுள்ளவர் செயலாகுமா? விஷங்கலந்த உணவை உண்டு உயிர் வைத்திருப்பது எளிதாகுமா? தேவர்களாயினும், அசுரர்களாயினும் பிறர் அணுக முடியா விஷசர்ப்பம் போன்ற அன்னை ஜானகியை எடுத்துக் கொண்டுவந்து வாளாவிருப்பது முடியாத காரியம். கடுந்தவமியற்றி அதன் பயனை நீர் அடைந்த இந்த பாக்கிய விசேஷத்தை இந்த உமது செயலினால் அழித்து விடுவது தக்கதன்று. உம்முடைய தவத்தின் வலிமையால் மகத்தான வரத்தைப் பெற்றிருக்கிறீர். அதாவது தேவர்களிடமிருந்தோ அசுரர்களிடமிருந்தோ மரண மின்மை என்ற வரம் பெற்றிருக்கிறீர். அப்படியிருந்தும், அழிவு காலம் அணுகுவதை அசட்டை செய்வது அறிவுடையதாகுமா? அந்த ஸுக்கிரீவர் தேவருமன்று; அசுரருமன்று; ராக்ஷதருமன்று; ஓர் வானரர். ஸ்ரீ ராகவரோ ஓர் மானிடர். மானிடரை ஓர் அல்பமாக எண்ணினீர். அம்மானிட இனத்தினரிடமிருந்தே உமக்கு பேராபத்து அணுகியிருக்கிறது அந்த மானிடன் ஓர் ஒப்பற்ற உயரிய—ஸரவும் யாவும் முறியடிக்கும்—மாசில்லா மானிடர் என்று மனதில் வையும். [illegible]ரிடமிருந்தே இப்போது உமக்கு மரணாபத்து கிட்டியிருக்கிறது. ரா[illegible]வரை அல்ப மானிடனென்று எண்ணியிருந்தீர். அதே மானிட இனத்தி[illegible] வீரபுருடரைய் விளங்கும் மானிடப் பிரபு அவர். அவரிடத்திலிருந்து நீர் தப்புவது அரிது. நீர் தவத்தாலும் தருமத்தாலும் சக்தியடைந்தவர் என்றிருக்கலாம்; அவைகளின் பயன் இதுகாறும் உம்மால் அனுபவிக்கப் பட்டது. இப்பொழுது நீர் இழைத்திருக்கும் மாபெரும் அதருமத்தின் பயனை வெகு சீக்கிரம் அனுபவிக்கப் போகிறீர் என்பதைச் சிந்தனைசெய்ய வேண்டுகிறேன். இச்செயல் உம்முடைய தருமத்தை எல்லாம் தொலைத்து விட்டதல்லவா? ஜனஸ்தானத்தில் அரக்கர் பூண்டில்லாது அறவே ஒழிந்ததை மனதில்வையும். வாலியின் வதத்தையும் நினைத்துப் பாரும். ராம ஸுக்கிரீவ சக்யத்தையும் அதன் விளைவுகளையும் சிந்தனை செய்யும். உமக்கு எது நலனளிக்க வல்லதென்பதையும் சிந்தனை செய்யும்; குதிரைப் படை, யானைப் படை, ரதங்கள், மாடமாளிகைகள், அடங்கப்பெற்ற இந்த லங்கையை மண்ணோடு மண்ணாக்க நான் ஒருவனே போதும் என்று எச்சரிக்கிறேன். ஆயினும், இதை நான் செய்யப் போவதில்லை. "எவன் ஜானகியிடத்தில் அபராதஞ் செய்தானோ அவனைக் கூண்டோடு, வேரறுத்து ஒழித்துவிடப் போகிறேன்" என்று ஸ்ரீ ராகவர் வானர கணங்கள் முன்னிலையில் பிரதிஞ்சை செய்திருக்கிறார். ஆகையால் அவரே அதை நிறைவேற்றுபவர். மகாராஜா! உமக்கு ஒன்று என் முழு மனதுடன் வலியுறுத்த வேண்டுகிறேன். ஸ்ரீ ராகவருக்கு அபராதஞ் செய்தவன் தேவேந்திரனயினும், அவன் தண்டனை அடைந்தே தீருவான், எவனாயினும் அவரிடமிருந்து தப்புவதென்பது இம்மூவுலகிலுமில்லை. உம் போன்றவரைப்பற்றிக் கேட்கவும் வேண்டுமா?

"அவர் வல்லமையைப்பற்றதுதான். அதை மாத்திரம் அறிவுறுத்துவதாக நான் சொல்வதில்லை. அவர் ஓர் தனிப் பெரும் தரும மூர்த்தி. தரும மெ தெய்வ சக்தியாய் அவரிடம் மிளிர்ந்து மலிந்து, மேன்மையுற்று, ஆத்ம சக்தியாய்த் துலங்குகின்றது. அவ்வரும்பெரும் ஆத்ம சக்தி ஒன்றே போதும் அதருமத்தை அறவே அழிக்க.

"ஆகவே, எந்த ஸீதையைக் கேவலம் ஓர் மானிடப்பெண் என்று எண்ணி எடுத்துவந்து சிறையிட்டிருக்கிறீரோ அவளை லங்கை முழுவதையும் சுட்டெரிக்கும் காளராத்திரியென்று அறிவீராக. ஆகையால் ஸீதை என்ற காம பாசத்தை கழுத்தில் மாட்டிச் சுருக்கிட்டுக்கொண்டு மடியாதீர்கள். இனியும் சுகமாய் உயிர் வாழ வழித்தேடிக் கொள்ளும்.

"ஐயனே! நீர் அற்பாயுளாகப் படு குழியில் வீழ்ந்து மடிவதைத் தவிர்த்துக் கொள்ளும். உற்று நோக்கிப் பாருங்கள்! இவ்வரண்மனையும் கூட கோபுரங்களும், மாட மாளிகைகளும், ராஜ வீதிகளும், உத்தியான வனங்களும், ஜானகியின் பதிவிரதா தருமமென்ற அக்னியால் தஹிக்கப்பட்டு, ஸ்ரீ ராகவரின் கோபாக்கினியால் ஜ்வாலை மூண்டு, எங்கும் கொழுந்து விட்டெரிவதாகக் காண்கிறேன். என் கண் முன்னே எரிந்து சாம்பலாகின்றன. நீரும் இதோ நன்றாய் பாரும்! உம் நலனைக் கோரும் ஸுக்கிரீவரின் அன்பரே! வெள்ளம் வருமுன் அணைகோலவேண்டும் என்பார் அறிஞர். உமது நண்பர்களையும், மந்திரிகளையும், பந்துக்களையும், உடன் பிறந்தவர்களையும், பிள்ளைகளையும், சந்ததி வர்க்கத்தார்களை மனைவிகளையும் எல்லோர் வாழ்க்கையையும் சுக போகங்களையும் லங்கையையும் நாசமுறச் செய்யாதீர்கள்!

"இது வெறும் குரங்கின் வார்த்தையென்று அசட்டை செய்ய வேண்டாம். காலமிருக்கையிலே காத்துக் கொள்ளுங்கள்! சத்தியமே உருவாய்த் தருமமார்க்கத்தில் திளைத்து, வெங்கதிரோன் குலத்துக்கோர் விளக்காய்த் துலங்கி வரும் ஸ்ரீ தாசரதியிடமிருந்து வந்த தூதனை என்னைத் தெரிவிக்கிறேன். இப்பெருமையின் காரணத்திற்காக என் வசனத்தைப் பொருட்படுத்துவீராக. உமக்கும், உமது அரசுக்கும், நாட்டிற்கும், மக்களுக்கும், நலன் தேடுவீராக. அந்தத் தரும தேவதையான ஸ்ரீ ரகுநாதனின் தருமமென்ற சக்தியின் வன்மை இத்தகையதென்று வரையறுக்க இயலாதது. எல்லா உலகங்களையும், பஞ்ச பூதங்களையும், சராசரங்களையும், அயாசமாய் அழித்து விட்டு, மறுபடியும் முன் போலவோ, வேறாகவோ படைத்தமைக்க வல்லதென்று எச்சரிக்கிறேன். அவர் சுயமாகவே தன் குணங்களாலும் செய்கைகளாலும், எண்ணங்களாலும் எவரும் எட்டமுடியாத உத்தம புருஷர். விஷ்ணுவின் விக்கிரமம் அமையப் பெற்றவர். அவ் வலிவு கொண்டது அன்னாரின் ஆத்ம சக்தி. அவரை எதிர்ப்பவன், தேவனோ, நாகனோ, யக்ஷனோ, வித்யாதரனோ, கந்தர்வனோ, உரகனோ, சித்தனோ, கின்னரனோ, அரக்கனோ, மிருகமோ, பட்சியோ, எல்லா பூதங்களிலும், எந்த லோகங்களிலும், எந்தக் காலத்திலும், எவ்விதத்தாலும் அவரை எதிர்த்து யுத்தம் செய்பவன் ஒருவனுமில்லை. அவன் ஸர்வ லோகங்கட்கும் நாதன். ராஜஸிம்ஹன். இத்தகையவரிடம் அபராதஞ் செய்தவன் உயிர்வாழப் போகிறான்? அரக்காதிபதியே! இதை மனத்தில் நன்கு பதியவையுங்கள். நான்முகம் படைத்த

பிரம தேவராயினும், முப்புரத்தை எரித்த முக்கண்ணாயினும், தேவேந்திரனாயினும், எவருமே ராம கோபத்தில் சிக்குண்டவனைக் காத்து ரட்சிக்கயிய லாதவர்கள் என்று நினைப்பில் வைத்துக் கொள்ளுங்கள்'' என்று மாருதி மிக்க தீரம் பொதிந்த உண்மை ததும்பும், நலன் பயக்கும் நீதி மொழிகளைச் சொல்லி முடித்தான்.

இம் மொழிகள் மிக்கச் சரியான உண்மையுரையென்றும், ஆபத்தை அகற்றும் ஆற்றலுரை என்றும், ராவணன் மதி அங்கீகரித்தது எனினும் அரக்க சுபாவமான மூர்க்கத் தன்மை விகம்பி எழுந்து கோப மூட்டியது. கண்ணில் கனல்பொறி பறக்கக் கடுங்கோபத்தில் கவியின் கொலை தண்டனையைக் கட்டளையிட்டான் அரக்க வரசன்.

## 52. அரசியல் நெறி முறை

எதிரியிடமிருந்து வந்த தூதனைக் கொலை செய்வது என்ற ஆக்ஞையைக் கேட்ட அச்சபையிலுள்ளோர் அனைவரும் மனங்கலங்கினர். ஏற்கனவே நாட்டைச் சூழ்ப்பிய அற்பக் குரங்கொன்று புகமுடியாத இலங்கையில் புகுதல், அநேகரைப் புடைத்துப் பொடியாக்கினமை, இன்னும் கொடிய ஆபத்து அந்த ராஜ்யத்தையே சூழவிருக்கிறதென்று எச்சரித்தல் இவை முதலிய விளைவுகள் அரசன் அறநெறி தவறி, அதருமத்தை இழைத்ததின் காரணம் தான் என்று நன்கு உணர்ந்து, சமயமிருக்கும் போதே அரசன் திருந்தி நேர் வழியில் வந்து விடுவானென்று எதிர் பார்த்திருந்தவர்கள் அவர்கள்.

அவர்கள் பிரதிநிதியான விபீஷணன்—ராவணன் தம்பி—சபையிலிருந்து எழுந்து அரசன் கவனத்தை இழுத்துப் பேச வாரம்பிக்கிறுன். அரசனின் ஆக்ஞை முற்றிலும் தவறு என்று எண்ணி விபீஷணன், இவ்வரசாக்ஞை இன்னும் கொடிய ஆபத்தை விளைவிக்க வல்லதென்று உணர்ந்தவனாய், அது முற்றிலும் அரசியல் முறைக்கு முரணானதென்றுணர்ந்தவனாய் நாட்டின் நலனைக் கருதியும் தான் செய்யவேண்டிய கடமையையும் மனத்திலிருத்தி தன் கருமத்தைச் செய்தே ஆகவேண்டுமென்ற துணிவுற்று அரசன் கோபத்தைத் தணித்து உண்மையை உணருமாறு பேசவாரம்பிக்கிறுன்;—

''அரசே! பொறுத்தருள்விராக! கோபத்தை அடக்கி மனந்தெளிந்து உண்மையை உணரவேண்டுமென்று பிரார்த்திக்கிறேன். இப்பொழுது தாங்கள் எதிரியிடமிருந்து வந்த தூதனுக்கு விதித்த மரண தண்டனையைப் பற்றிச் சிறிது ஆலோசிக்க வேண்டுகிறேன். அவனுக்கு இத்தண்டனை விதித்தது சரியானதா அல்லவா வென்பது நம் யோசனைக் குரியதல்ல. இத்தகைய தீர்ப்பு நமக்கும் நம் கீர்த்திக்கும் ஏற்றதா வென்பதுதான் நம் பிரச்சனையாயிருக்க வேண்டும். தூதனைப்பற்றி நமக்கு அக்கறையில்லை. எதிரியிடமிருந்துவந்த தூதனுக்கு மரண தண்டனை விதிப்பது நம் புகழுக்கு இழுக்கா? அரசியல் முறைதானு வென்று தான் நாம் கவனிக்க வேண்டும். அரசாட்சிமுறை தோன்றிய நாளிலிருந்து புகழ்பெற்ற புவிச் சக்ரவர்த்திகள், இதுகாறும் தூது வந்தவனுக்கு மரணதண்டனை விதித்ததில்லை. எதிரிபால் கொண்டுள்ள கோபத்தை அவன் சேவகனிடம்

காட்டுவது சரியல்ல. அவ்விதமுடிவு அரசியல் முறைக்கும் முரணானதென்று நான் சொல்லவும் வேண்டுமா? பண்படைந்த நம் அரசியல் நிர்வாக அனுபோகத்தில் இத்தகைய தீர்மானம், நாம் இதுவரை பின்பற்றிய உலக நியதியைச் சார்ந்ததாகுமாவென்று கவனிக்க வேண்டும். இத்தூதன் செய்த குற்றத்திற்கு மரண தண்டனை தக்கதெனினும் அது ராஜதருமம் என்ற கோட்பாட்டிற்கும் உலக நடவடிக்கைக்கும் பொருந்தாததாயும் தலைசிறந்த அரசாட்சியைக் கடைபிடித்த லங்காதிபதியான உமக்குத் தக்கதல்லதாயுமிருக்கிறதென்று தாங்களும் அறிவீர்கள். இச்சபையிலுள்ள பெரியோர்களும் அறிவர் கருமந்தெரிந்த நீங்கள், அரசியல் விதிகளைப் பின்பற்றியவர்; ராஜதருமத்தில் நிபுணர்; உலக சம்பிரதாயங்களையொட்டி அரசியல் நியதியில் ஆட்சிபுரிபவர். சமூக கலாசாரங்களுக்கு விரோதமின்றி ஒழுங்காட்சியில் மேன்மையுற்றவர்—ஆகையால் உங்களுக்குத் தெரியாததொன்றுமில்லை. உங்களைப் போன்ற அட்சிமுறை நிபுணர்கள் எளிதில் இத்தகைய கோபத்திற்காட்படுவதா? கோபத்தின் ஆக்கிரமிப்பில் அரசியல் முறையைக் கைவிடுவதா? இகழ்ச்சிச் செயலுக்கு இடங்கொடுப்பதா? எவராலும் எதிர்க்கமுடியாத சத்துருக்களைச் சிதைப்பவரான ராட்சத மன்ன! கோபாவேசத்தின் கொட்டத்தை அடக்குவீராக! எந்தத் தண்டனை நம் அரசியல் கௌரவத்திற்கு இகழ்ச்சியாயிராதோ, நம் புகழுக்கும் பெயருக்கும் பழுது நேராதிருக்குமோ, அத்தண்டனையை விதியுங்கள்.

"வீரரே! உங்களுக்கா அரசியல் முறைகளை நான் எடுத்துரைப்பது? ராஜதருமத்தைப் பற்றிப் பேசுவது? சாஸ்திர தருமங்களின் நுட்பங்களை நன்கறிந்த உத்தமராகிய உங்களுக்கு—நமக்குகந்த வகை என்னவென்றறிந்த உங்களுக்கு—இத்தகைய தண்டனை விதிப்பின் விளைவைப் பற்றி ஆலோசனையில்லாமலா போய்விடும்? இவனோ ஒரு தூதன். இவனையனுப்பினவர்களின் மேலல்லவா நம்முடைய கோபம் பிரவேசிக்க வேண்டும்! இவன் சாதுவோ, துஷ்டனோ இவனைத் தேர்ந்தெடுத்துத் தூதனாய் அனுப்பினார்களே, அவர்களையன்றோ நாம் எதிர்க்கிறோம். அவர்களுக்கு அடிமைப்பட்டவன் இவன். இவனைத் தண்டிப்பதில் பயனென்ன?

"மேலும் இன்றொன்று கவனிக்க வேண்டுகிறேன். இவன் கொலையுண்டபின் இங்கு வருபவன் யாவன்? வராவிடின் நம் சத்துருக்களை ஒழிப்பதெவ்வாறு? இவன் திரும்பிப்போய் அவர்களிடம் சொல்ல வேண்டும். என்ன செல்வான் என்பதைப் பற்றி அக்கறையில்லை. என்னசொன்னால் என்ன? அதைக் கேட்டவுடன் இவ்விடம் அவர்கள் வந்தாகவேண்டும். அப்பொழுதன்றோ நம் கோபத்தின் விசையை அவர்கள் பார்க்கப் போகிறார்கள். அவர்களை முறியடிக்க நாம் முழுக்கவனம் செலுத்துவோம். யுத்தத்தில் பற்றுடைய வீரனே! இந்தத் தூதன் மரணதண்டனை அடைந்தால் வேறு ஒருவனும் அவர்களை அழைத்து வரமுடியாதன்றோ? ஆகையால் இந்த மரண தண்டனையை விதிக்காது நம் புகழிற்கும் கீர்த்திக்கும் இகழ்ச்சியும் அபவாதமும் வாராதவண்ணம் நாம் செயலிலிறங்க வேண்டும். இந்த பொல்லாத வானரத்தை எந்த அகம்பாவங்கொண்ட மானிடர்கள் அனுப்பி வைத்தார்களோ, அவர்கள் தோல்விக்கும் அழிவிற்கும் வேண்டிய நடவடிக்கைகளில் முனைவோமாக! தேவேந்திரனையும் போரில் முறியடிக்கும் வல்லவ! தேவர்கள், தைத்தியர்கள், தானவர்கள், மானிடர்கள் பின்பற்றும் தரும

முறையில் ஆட்சிதுலங்கும் மேன்மைக்குத் தூதவதம் என்ற களங்கம் பொருத்தமாகாது ஆகவே இதைச் செவிசாற்றி அங்கீகரிப்பீராக. இவனை அனுப்பி வைத்தவர்களுடன் போர்தொடர எல்லா பிரயத்தினங்களும் இப்பொழுதே தயாராகட்டும். இதில் வெற்றி காண்பீராக. தூதனை வதை செய்தான் என்ற பழி நம்மைப் பற்ற வேண்டாம். ஆகவே ராம லட்சுமரெனும் இரு ராஜகுமாரர்களைப் போரில் வென்று எதிரிகளிடத்தில் உம்முடைய பிரபாவத்தை நிலைநாட்டி எங்கும் ஜயகொடி வானெழுந்து ஒளி வீசி பறக்கட்டும். அதுவே உத்தமமான முறையல்லவா?''

அரக்கவரசன் விபீஷணன் மதியுரையைக் கவனித்தான். அதன் உண்மையை யுணர்ந்தான். ஆம்! எதிரிகளிடம் கொண்ட கோபத்தால் அவர்கள் அனுப்பிய தூதனை வதைப்பது வீரனுக்கழகல்ல வென்பதை அவன் மதியும், போரில் வெற்றி காணும் அவாவும் ஒப்பின. எனினும் மாருதியையும் அவன் செய்து முடித்த அரிய செயல்களையும் கவனிக்க, இவன் ஸாக்ஷாத் மஹா விஷ்ணுவின் சக்தியே குரங்குருவம் பெற்று வந்ததென்று எண்ணினான். கோப முற்றான், பின்பு கோபத்தை அடக்கி, 'நல்லது இவன் தூதனென்கிறான். இவனை அனுப்பிய அவ்வல்ப மானிடர்களை ஒரு கை பார்க்கிறே' னென்று திடங் கொண்டு விபீஷணன் ஆலோசனையை அங்கீகரித்தான்.

---

## 53. ஹநுமான் வாலில் தீயிட்டது.

இலங்கை நகர் கோமான், சபைநடுவே சற்றுநேரம் யோசித்தான். தம்பியின் வசனம் நியாயமானதென்று உணர்ந்தான். 'தூதுவந்த ஒரு குரங்கினிடம் கோபங்கொண்டு அதை வதைப்பது மாட்சிமை தங்கிய என் அரசாட்சிக்கு இழிவானதுதான்' என்று கண்டு, வீபீஷணனை நோக்கி "நீ சொல்வது சரியே. தூதனைக் கொல்வதென்பது முறையாகாதுதான். எனினும் இக் குரங்கு செய்த உபத்திரவத்திற்கு மரணதண்டனை மிகையாகாது. எனினும நமக்கு அபகீர்த்தி நேரக் கூடாது. ஆகையால் வேறு ஏதாவது தண்டனை விதிக்க வேண்டும். குரங்கிற்கு அலங்காரமாய் அமைந்திருப்பது அதன் வால். ஆகையால் அதில் தீ வைத்து கொளுத்தி மொட்டையாய் வந்த வழியே விரட்டி விடுங்கள்; வாலெரிந்த குரங்கொன்று தன்னை அனுப்பியவர்களுக்கும் மற்ற குரங்குகளுக்கும், இங்கு வந்தால் தகுந்த தண்டனை யடைவானென்றும் தெரிவிக்கட்டும். தீப்பிடித்த வாலுடனே எல்லா இடங்களும் இந்நகர மெங்கும் நம்மவர் பார்த்துக் களிக்கும்படி இக் குரங்கு இழுக்கப்பட்டுச் செல்லட்டும்'' என்று கட்டளையிட்டான்,

[தன்னைக் கட்டிப் பிடித்து வாலில் நெருப்பு வைக்கட்டுமென்ற ராவணனின் உத்தரவைக் கேட்டான் மாருதி. நடு சபையில் பகிரங்கமாகத் தன்னை எவரும் கட்ட இயலாதென்றும், சணல் கயிறால் கட்டுண்டவுடன் பிரும்மாஸ்திரத்தின் கட்டு அகன்று விட்ட தென்றும் அரசனை நேரில் காண எண்ணியே கட்டுண்டவனாகக் காண்பித்து அங்கு வந்து சேர்ந்தவனென்றும் எல்லோரும் கேட்கும்படி தெரிவித்திருக்கிறான். இதை

ராவணன் முற்றிலும் மறந்து விட்டானென்று மாருதி எண்ணமிடும் போதே அரக்க அரசனின் மற்றவார்த்தைகளும் காதில் விழுந்தன. எல்லா வீதிகளிலும் சந்துகளிலும் நகரம் முழுவதும் இழுக்கப்பட்டுச் செல்லட்டும் என்றதை கேட்டதும், 'ஆம இது நல்ல சந்தர்ப்பம் தான்' என்று எண்ணி இன்னும் அச்சணல் கயிறால் கட்டுண்டவனாகவே நடித்துக்கொள்கிறான்.]

சேனைத்தலைவர்களையும் மற்றவர்களையும் இழந்து விட்ட அனேக அரக்கர்கள் ஆவேசங் கொண்டவர்களாய் அடுத்த நிமிஷத்திலேயே ஹநுமானின் வாலில் துணியைச் சுற்றினார்கள். வால் நீண்டு கொடுப்பதைக் கண்டு, மேலும் மேலும் அவர்கள் துணியைச் சுற்றிச் சுற்றி அதை எண்ணெயில் தோய்த்தார்கள். பின்பு தீயிடவே அதுவும் கொழுந்து விட்டெரியலாயிற்று. தீயின் உணர்ச்சி கண்டதும் ஆஞ்ஜநேயன் அடங்கா ரோஷங் கொண்டான்; இவர்களைச் சரியாகப் பதம் பார்த்துவிட எண்ணினான்.

"இவர்களென்ன? இந்த இலங்கையைச் சுட்டெரித்துச் சாம்பலாக்குவேன். ஆனால் அது என் ஐயனால் விளையவேண்டியது. அவர் தீர்மானத்தை நிறைவேற்றவேண்டும். ஆகையால் இவர்கள் செய்வதைச் சற்றுப் பொறுத்துக் கொள்வேன். ஏனென்றால் இந்நகரம் நேற்று இரவிலதான் என்னால் காணப்பட்டது. இப்பொழுது பகலில் எல்லா இடங்களும் நன்றாய் அறிந்து கொள்வதற்குச் சந்தர்ப்பம் கிடைக்கிறது. இந்த நகரத்தின் அமைப்பையும் சிறப்பையும் நேரில கண்டு கொண்டு திரும்பிச் செல்வது அவசியமே. ஆகையால் இவர்கள் நகரெங்கும் என்னை இழுத்துச் செல்லட்டும். எனக்கு அதனால் ஓர் குறையுமில்லை, கவலையுமில்லை என்று முடிவு செய்து கொண்டு வாளாவிருந்தான் வாயு குமாரன.

வானரவீரனின் வால் கொழுந்துவிட்டு எரிகிறதைக்கண்ட அக்ரர்களின் எக்காளம் எல்லையை கடந்தது. 'நம்மை யமன் போல் இம்சித்து வெருட்டி மாய்க்கக் காத்திருந்த இக்கடும புலியான குரங்கன் இப்போது நம் கையில் சிக்குண்டு எரிகிறான்' என்று கொக்கரித்துக் கொம்மாளமிட்டனர். பெரும் வாரை கொண்டு இருபுறமும் கட்டிப்பிடித்து நகரெங்கும் சங்கம் பேரிகை முதலிய வெற்றிவாத்தியங்கள் வானத்தைப் பிளக்க, அளவற்ற உற்சாகத்துடன், மாருதியை இழுதது்த் திரிந்தார்கள். அவனும் தன் வேதனையையும பொருட்படுத்தாது நகரத்தின் சிற்ப நுணுக்க அமைப்புகளையும், கோட்டை கொத்தளங்களின் அளவுகளையும் கவனித்து அவற்றை மனதில் வரைந்துகொண்டே சென்றான். வாலில் நெருப்பு எரிந்துகொண்டே இருக்க, அந்த அவயவத்தைப் பெருக்கிக் கொண்டே சென்றான். விசித்திரமான விமானங்களையும், மதில்களால் சூழப்பட்ட மறைவிடங்களையும், நன்கு வகுக்கப்பட்ட நாற்சந்திகளையும், வீதிகளையும், சதுக்கங்களையும, சாவடிகளையும, வேடிக்கை பார்க்க வந்தவர்கள் காண்பித்த சுரங்க வழிகளையும் கவனித்துக் கொண்டே சென்றான். ஒரு வேளை ஸ்ரீ ராகவனும், வானர சைனியங்களோடு லங்கையடைந்த போது இவர்கள் அன்னை ஜானகியை எங்கு ஒளித்து வைப்பார்கள் என்று எண்ணினானோ, என்னவோ, எல்லாவிடங்களின் நுட்ப அமைபபைப்பற்றி மனதில் ஆராய்ச்சி செய்து கொண்டே சென்றான்,

இவ்விதம் வாயு குமாரனின் ஆடம்பரமான எரிஉலா திகழ்ந்து வருகையில் சில அரக்கிகள் ஸீதையிடம் ஓடோடியும் வந்து "ஸீதே! தாமிரம் போல் செந்நிறமுள்ள முகமுடைய எந்தக் குரங்கு உன்னுடன் சம்பாஷித்துக் கொண்டிருந்ததோ அது இப்பொழுது தீப்பிடித்து எரிகின்ற வாலுடன் இதோ இழுக்கப்பட்டு வருகிறதைப் பார்" என்று தெரிவித்தார்கள். இடி விழுந்தவள்போல் இச்செய்தியைக் கேட்டு உள்ளம் பதறுகிறாள். இவன் எரிந்து போனால் நாயகன் தவணைக்குள் இங்கு வருவது அசாத்தியம்; பிராணனை மாய்த்துக்கொள்ள வேண்டியதுதான். அது ஆத்ம ஹத்தி தோஷமாகுமே என்று பாவமே செய்யாதவள் அஞ்சி நடுங்குகிறாள்.

[வாழ்க்கையின் உயர்வு ஒவ்வொரு படியும் சத்தியத்திலேயே நிலை நிற்பதென்ற அடிப்படையான நம்பிக்கை முற்றிலும் பரவியிருந்த நாள் அது. அவனவன் கடமை இன்னின்னதென வரையறுக்கப்பட்டிருந்தது. சரிவரக் கடமையைச் செய்தால் வாழ்க்கையின் லட்சியத்தை நிலைநிறுத்தினதாகும். அதன் பலன்—இவ்வுலக அடிப்படையான சத்திய அமைப்பு—வாழ்க்கை உண்மையைப் பின்பற்றுவோர்க்கு உகந்தபடி விளைந்து கொண்டிருந்தது. உண்மையாக அவனவன் தன் தன் கடமையைச் செய்து வாழ்க்கை எய்தும் எவர்க்கும் இச்சக்தியை யழைத்துச் சித்தி பெற முடியு மென்ற நம்பிக்கை ஆழ்ந்து ஊன்றியிருந்தது. ஒருவன் அபாண்டமாகக் குற்றஞ்சாட்டப்பட்டால் உடனே இச்[illegible]தியைப் பணயம் வைத்துத்தான் நிரபராதி என்று சாதிக்க முடியும். '[illegible]ன் கிரமம் தவறாது கடமையைச் செய்தவனாகில் என் குற்ற மற்ற [illegible]மை வெளியாகட்டும்' என்று பாம்புக் குடத்தில் கை விடுவதில்லையா, [illegible]னியை மிதிப்பதில்லையா? கற்பு என்ற குணத்தைக் கடமையாய்க் கைப்பற்றி வாழ்க்கை நடத்திய கற்புடைய குலவதிகள் இந்த உலக தருமத்தின் மேல் ஆணையிட்டுச் சூரியனையே உதிக்காது செய்த பண்படைந்தநாட்டின் அனுபவமாயிருந்த நாள் அது! ஆகவே, சத்தியமே தருமம், அதுவே வாழ்வு, கடமையுங் கூட. இத்தகையை பக்குவ மடைந்த மனப்பான்மையும் நம்பிக்கையும் பொலிந்து திகழ்ந்த அக்கால கலாசாரங்கள் இவை. எல்லாம்—பூதங்களும் பேய்களும், விஷஜந்துக்களும் கொடிய விலங்குகளும், தேவதைகளும், மானிடர்களும், இயற்கை நிகழ்ச்சிகளும், ஏன், இறைவனும் கூட—ஸத்தியத்திற்குட்பட்டவைதானே. இத்தகைய நீதிநெறியில் சென்று கொண்டிருந்த வாழ்வில் எவ்வாபத்திற்கும் அஞ்சியிருக்க வேண்டியதில்லை. இப்பொழுது ஸ்ரீ ராகவனிடமிருந்து வந்த தூதனென்று சூடாமணி வாங்கிப் போனவன் வாலில் தீயிடப்பட்டு எரியும் போது—தன் மனம் மேலும் மேலும் கலவர மடையும் போது—அப்பழக்கத்தையே கைக்கொள்கிறாள் கமலக்கண்ணியான ஜனக நந்தினி! சர்வமும் சத்தியத்தில் நிற்கச் செய்யும் சக்தியை அழைக்கிறாள். கடமையே உயிரென வாழ்ந்ததைப் பணயம் வைக்கிறாள். அச்சக்தியாலேயே அக்கினிதேவனை மனதில் நினைத்து தியானிக்கிறாள். அக்கினிதேவர் சத்தியத்துக்குட் பட்டவரென்பது உண்மையானால், உலகமும் வாழ்க்கையும் எல்லாம் சத்தியநிலை பெற்றதானால், தன் கடமையைச் சரிவரச் செய்ததும் அதற்கு பலனுண்டு என்பதும் உண்மையாயின் அப்பலனைத் தியாகஞ் செய்து மாருதிக்கு உதவுபுரிய எண்ணுகிறாள். கலவர மடைந்துகொண்டே போகும் முற்றிலும் மானிட இயல்பு கொண்ட மனத்தின் உண்மைகாண உந்துகிறாள்.]

ஸீதாதேவி இக்கருத்துகளை யுணர்ந்ததும் இவ் வசனங்களை வெளியிடுகிறள். "ஐயனே! அக்கினிதேவரே! நான் பதிசேவை என்ற கடமையைச் சரிவரச் செய்தவளாகில், தவத்தை நியமத்துடன் அனுஷ்டித்தவளாகில், இராமர் ஒருவருக்கே பத்தினியாய் உய்பவளாகில், நீர் ஹநுமாருக்குக் குளிர்ந்திருப்பீராக! கேவலம் கடமை என்ற உணர்வில் மாத்திரம் பதி சேவையைக் கொள்ளாது என் முழுமனத்துடனும், அன்புடனும் என் ஆவியை என் பதியிடம் அர்ப்பணஞ் செய்து, என் விருப்பம் என் எண்ணம்' என் மனம் என்ற தனித் தன்மையை யொழித்து, அவர் மனதிலேயே ஒன்றுய்க் கலந்து, அக்கால முதல் உண்மையாக என வாழ்க்கை லட்சியம் ஈடேறியதாக உணர்ந்தவளாக நான் இதுகாறும் நடந்து வந்தது உண்மையாயின், இதனுல் ஏதாவது பலனே, அதிர்ஷடமோ பெற்றவளாயின், அதன் காரணமாக அதன் தியானத்தின் பலகை, ஹநுமான் வாலிலுள்ள அக்கினி குளிர்ந்திருக்கட்டும்!" நான் உள்ளும் புறமும், நனவிலும், கனவிலும், இகத்திலும், பரத்திலும் கற்புடைய பத்தினியாக என் பதியை என் உயிராகக் கொண்டு வாழ்வது உண்மையானுல் நான் அவரைத் திரும்பி அடைவேன் என்பது உண்மையானுல், நான் அரை விநாடியும் அறநெறி தவருதவளென என் பதி என்னை அறிவர் என்பதும் உண்மையாயின், ஹநுமானைப் பற்றிய தீ அல்லித்தண்டாய் குளிர்ந்திருக்கட்டும்! இந்த மாருதி வந்து பேசினது உண்மையாகில், ஸுக்கிரீவர் என்ற வானர அரசன் என் நாதருக்குத்துணையாகச் சைனியங்களுடன் இங்கு வந்து என்னை மீட்டுப் போவது உண்மையாகுமாளுல், அக்கினியே! ஹநுமானுக்குக் குளிர்ந்தருளவேண்டும்" என்று, நடந்ததையும் நடக்கிறதையும் இனி நடக்கப் போவதையும், சத்தியம் என்ற அடிப்படையான எல்லாவற்றிற்கும் ஆதாரமான நிலையில் இழித்துப் புழு உண்மையை உணர, தியாகத்தில் நின்று, சத்திய மென்ற சக்திக்குச் சவால் கொடுக்கிருள்.

[நம் போன்ற சாதாரண மானிட உலகில் வந்து கலந்து நம்முன் புதைந்த நல்லுணர்ச்சிக்குப் புத்துயிருட்டுகிருள் நம் உண்மையான அன்னை. "ஐயனே! அப்பனே! என் முன்னேர்கள் ஏதாவது புண்ணியஞ் செய்திருந்தால், நான் பள்ளியமைத்துப் பண்டசாலை எழுப்பி, எவருக்காவது உதவி பரிந்து, புண்ணியம் பெற்றிருந்தால், சர்வேச்வரா! எளியோர்க்கிரங்கும் இறைவ! இதோ உயிருக்கு மன்றுடும் என் குழந்தையை, உனக்குகந்த பட்சத்தில் காப்பாற்றி யருளுவீராக!" என்று தினமும் நாம் வாழ்வில் கடவுள் முன் மன்றுடுவதையே படம் பிடித்துக் காட்டுகிருள் இப் பத்மலோசனி! சத்தியத்திலே நம்பி, சத்தியத்திலே நின்று—சத்திய மார்க்கத்திலேயே சென்று—அச்சத்தியத்தையே அழைத்து அதன் சக்தியையே சரனமடைந்த எந்த ஜீவனும் எவ்வாபத்திலிருந்தும் எளிதில் வெளியேறுவது அனுபவசாத்திய மென்று நிரூபிக்கிருள்.]

உடனே ஜானகியின் முறையீடு அங்கீகாரம் பெற்றது போலவும், அவள் வசனம் உண்மை வசனமென்று விளங்குவது போலவும் அவளும் உண்மையைக்காணும் பொருட்டும் கொழுந்துவிட்டெரிந்த ஹநுமான் வாலின் தீ இப்பொழுது அவனைப் பிரதட்சிணம் செய்து ஜொலித்தது. அக்கினி இவ்வாறு சத்தியத்திற்குக் கட்டுப்பட்டு வலதுபுறம் எழுவதைக்

கண்ட வாயு பகவானும் அப்புதிய அக்கினித் தன்மைக்கிசைந்து தானும் அச்சத்தியத்திற்க் கட்டுப்பட்டுக் குளிர்ந்த பனிக்காற்ருய் விசவே சட்டென்று, ஹநுமான் தீயில் எரியும் வாலினுள் இத்துப்போகும் பனிக்கட்டி போல் சீதளம் பரவக்கண்டான்.

சட்டென்று ஒரு குளிர்ச்சியை வாலில் உணர்கிருன் ஆஞ்ஜநேயன், என்ன இது? வாலில் தீ மூண்டெரிகிறது. எனினும் அவ்விடத்தில் பனிக்கட்டி போலும், அல்லித் தண்டு போலும் குளிர் உணர்ச்சி தென்படுகின்றதே; மேலும் திகு திகுவென்று ஜ்வாலை கொண்டு எரியும் இவ்வக்கினி என்னை ஏன் முற்றிலும் எரிக்கவில்லை? உடல் முழுவதும் படாமல், வாலிலேயே பனிக்கட்டி உணர்ச்சியுடன் நெருப்புப் பந்தம் சுடர் விட்டெரிகிறதே! கனல் வீசவில்லை! நெருப்புப் படர்வதில்லை! எனக்கோ ஒருவித வேதனையுமில்லை! அக்கினியின் தன்மையே மாறியிருக்கிறது. ஏன்?'' என்று சிந்தனை செய்தான். ஆம்! இது ஸ்ரீ ராம பிரபாவத்தின் விளைவே! சந்தேகமில்லை, அவர் காரியத்தைத் தலைகட்டக் கடலைத் தாண்டலானேன். இளைப்பாறும் பொருட்டுக் கடலிலிருந்து மலையொன்று கிளம்பி 'ஸ்ரீ ராகவன் பொருட்டு' என்றது. இம்மாதிரி ஓர் மலை அப்புருஷோத்தமனின் காரியத்தில் ஈடுபட முன் வர, அக்கினி பகவான் பின்வாங்குவரா? மேலும் ஜானகியின் கற்பின் திண்மை சக்தியற்றதா? அவ்வம்மையாரின் அருளும் ஸ்ரீ ரகுநாதரின் திவ்விய சக்தியும், என் தந்தையும் அக்கினி தேவனும் ராம காரியத்தில் கொண்ட ஈடுபாடும் என்னை, இத் தீ எரிக்க வொட்டாமற் செய்தன!'' என்று முடிவிற்கு வந்து, ரகு குலோத்தமனை மனத்தில் நினைத்துத் தியானித்தான் ஆஞ்ஜநேயன்.

சரி, இனி காலதாமதம் கூடாதென்றுணர்ந்து சடக்கென்று மேலே கிளம்பி வீரகர்ஜனையிட்டான். அவ்வளவுதான்! அரக்கர்கள் மூலைக்கொரு பக்கம் பயந்தோடினர். கட்டுகளைக் களைந்தெறிந்து, மதில் சுவரில் பாய்ந்து, மறுபடியும் தோரண வாயிலடைந்து, இரும்புத் தடியால் அங்கிருந்த அரக்கர்களை நையப்புடைத்துப் பொடியாக்கினுன். வாலில் தீ யிட்டனரல்லவாவென்று ரோஷங்கொண்டான். அந்த நெருப்பு இன்னும் எரிந்து கொண்டு தானிருந்தது. இதை வீணுக்குவதா? பயன்படுத்த வேண்டுமென்று தீர்மானித்தான்.

[இப்படிச் சில ருசிகரமான நிகழ்ச்சிகளில் பிரமிக்கவைக்கும் விளைவுகளைக் காண்கிருன் அஞ்ஜனையின் அரும் புதல்வன். உடனே ஸ்ரீ ராகவனைப் பற்றி நினைவிடுகிருன்; மன ஆறுதல் காண்கிருன். ராமப் பிரபாவத்தின் மேன்மையை உணர்கிருன். சிலவேளை அதை விட்டுத் தன் போக்காகப் போகிருன். அதன் விளைவுகளைக் காண்கிருன். மறுபடியும் தலைவன் தாசரதியை நினைக்கிருன். அவ்விளைவுகள் முற்றிலும் நற்பயன்களாயமைவதைக் கவனித்து அகமகிழ்கிருன். இவ்வாறு தன் வாழ்க்கை அனுபவங்களால் ஸ்ரீ ராம பக்தியையும் அதன் வலிவையும் பிரசுரிக்கிருன் இவ்வொப்பற்ற ராம பக்தன்!]

———

## 54. லங்கா தகனம்

வாலில் தீ கொழுந்து விட்டெரிகின்றது, தன்னைச் சுடாமல் காப்பாற்றும் அக்கினி தேவரை மனதில் நினைத்து நன்றி தெரிவிக்கிறான் மாருதி. பின்பு "இவருக்குகந்த காணிக்கையாக இதோ காணும் மாளிகைகளை இரையாய்க் கொடுக்கவேண்டியது நியாயமே" என்று தீர்மானித்து வில்லம்பு போல் ஒரு உப்பரிகை மேல் பாய்ந்து எரிந்து கொண்டிருக்கும் வாலின் தீயை அங்கு பரவவைத்தான். நொடிப்பொழுதில் அம்மாளிகை குபுகுபுவென்று கொழுந்துவிட்டு நாலாபக்கமும் மேலெழும் ஜ்வாலையுடன் எரியவாரம்பித்தது. அங்கிருந்த மற்றொரு மாளிகையில் தாவி அங்கு நெருப்பிட்டான். இதே வண்ணம் தாண்டித் தாண்டி, பிரகஸ்தன், மஹாபார்ச்வன், வஜ்ரதம்ஷ்ட்ரன், சுகன், சாரணன், இந்திரஜித் முதலியவர்களின் மாளிகைகளில் ஒன்றன்பின் ஒன்றாக தீயிட்டுக் கொளுத்தினான். எங்கும் ஒரே அக்கினிமயம். நகரெங்கும் காட்டுத்தீ போல் எரியவாரம்பித்தது. விபீஷணர் ஒருவர் கிருகத்தில் மாத்திரம் ஹநுமான் தீயிடவில்லை. [ஏது விபீஷணன் வீடென்று மாருதிக்கு எவ்வாறு தெரிந்தது என்ற பிரச்னை எழாமலில்லை. இதற்குச் சரியான விடை வால்மீகியின் காவியத்தில் காணப்படவில்லை. திரும்பி வந்து அங்கதன் முதலியோருக்கு தான் கண்டவிடங்களை விளக்கிக் காட்டுகிறான் மாருதி. வாலில் தீயிட்ட அரக்கர்கள் ஆஞ்ஜநேயனை எல்லாவிடங்களிலும் இழுத்துச் செல்லும் போது இவரவர்கள் மாளிகைகள் இவை என சொல்லிக் கேட்டிருக்கலாம். எல்லா மாளிகைகளின் உப்பரிகைகளில் அங்கு வசித்தவர்கள் வந்து வேடிக்கை பார்த்தனர். ஒரு மாளிகை மாத்திரம் மூடப்பட்டு உப்பரிகையும் காலியாயிருந்திருக்கலாம, ஆகையால் அது விபீஷணன் வசிக்குமிடமென்று ஹநுமான் கவனித்திருக்க வேண்டும்] வானளாவிய அக்னிச் ஜ்வாலைகள் புயல்காற்று வேகத்தில் தீப்பரவி நிமிஷத்தில் நகரிலுள்ள வீடுகளும், வாகனங்களும், மரங்களும், ஆடை ஆபரணங்களும் நீறாய்விட்டன. மணிமண்டபங்கள் சாம்பலாயின. பொன் வெள்ளிகளாலான எழில் பொழிந்த அரண்மனையும் மாளிகைகளும் எரிமலைகளாகிக் கனல் வீசி நெருப்புக் காடாகி மண்டி எரிந்தன. அநேகர் எரிந்து மாண்டுபோயினர். எஞ்சியவர் அங்குமிங்கு மோடி அலறிப் புடைத்துக்கொண்டு ஓடினர். நகரமே எரியும் இரைச்சலில் வாய் பிளந்து பிளிறிற்று. அரக்கர்களின் ஓலம் கலந்து, கோரமான சுடுகாடாய் லங்காபுரி உருகிச் சிதைந்து சாம்பல் மேடாயிற்று. வீடுவீடாகத் தாவிப்பாய்ந்து தீ மூட்டிக்கொண்டு போனான் வாயு குமாரன். எங்கும் சூழ்ந்து பரவிற்று அவனிட்ட அனல். ஜ்வாலைகளும், புகையற்ற பெருஞ்சுடர்களும் மேலெழுந்து ஆகாயத்தை செவ்வானமாக்கின நகர முழுவதும் ஒரே காலத்தில் பிரளயத்திற் கொப்பான காட்டுத் தீயில் பற்றி எரிகின்றதைப் பார்த்து ஒப்பாரியிட்ட அரக்கக் குழாங்கள், "ஐயோ! இவன் இந்திரனோ, யமனோ, வருணனோ, வாயுவோ, ருத்திரரோ, சூரியனோ, குபேரனோ தெரியவில்லையே! இது வெறும் வானரமல்ல. நம்மை ஒருங்கே அழிக்கவந்த காலனே இக்குரங்குருவத்தில் வந்திருக்கிறது. படைப்புத்தொழிற் கடவுளான பிரும்மனோ, யாவற்றையுமழிக்கும் ருத்திரனோ, முடிவிற்கெட்டாத வரையறையற்ற ஆதி மூலமான பிரணவாகாரமான மகாவிஷ்ணு சக்தியே அரக்க நாசத்தின்

பொருட்டுக் குரங்காக வந்திருக்கிறது. இனி ஒழிந்தோம்'' என்று அரக்கர்கள் பெருவாரியாகப் புலம்பிக் கூக்குரலிட்டனர், சிறந்த வன மழித்து, அரக்கர் தலைவர்களை வதைத்து, உயர்ந்த மாளிகைகளைப் பொசுக்கிச் சாம்பலாக்கிவிட்டு ஹநுமான் கடலில் வாலின் தீயை அணைத்தான்.

---

## 55. ஹநுமான் கவலை

லங்கையைச் சுட்டெரித்த வாலின் நெருப்பைக் கடலில் நனைத்து அணைத்து நிற்கையில், அந்நகர் முழுவதும் ஜ்வாலை கொழுந்து விட்டெரிவதைக் கண்ணுறுகிறான் மாருதி. அப்பொழுதுதான் சட்டென்று அவன் மனம் கருகியது.

“ஆஹா! என்ன காரியஞ் செய்தேன்! லங்கையை முழுவதும் கொளுத்தி விட்டேனே! இதன் ஆபத்தும் அச்சமும் என்னை வாட்டுகின்றன. அன்னை ஜானகிக்கு என்ன ஆபத்து நேர்ந்ததோ? ஐயோ! கோபத்திற்கிடங்கொடுத்து மதியை இழந்தேன்! சினத்தை மதியால் அடக்குபவர்களே சிரேஷ்டர்கள்; மகாத்மாக்கள். கோபத்தாலன்றோ மனிதன் பாபத்திறங்குகிறான். அல்பனாகிறான். கோபத்தை அடக்குபவனே உத்தமன், என்ன விபரீதம் விளைத்தேன்! அன்னை ஜானகியைப் பற்றி நினையாமல் எங்கும் தீயிட்டு விட்டேனே! என்ன மதியீனம்! பகுத்தறிவின்றி, நிந்திக்கப்படவேண்டிய எஜமானத் துரோகியல்லவா இத்தகைய செயலிலிறங்குவான்? இந் நகரம் முழுவதும் கொளுத்தப்பட்டு எரிகிறதே! வைதேகி என்னவானாளோ? ஐயோ! அவ்வம்மையார் விபத்துக்குள்ளாகி விட்டால் நான் எதற்காக இவ்வளவு பிரயாசை எடுத்தேனோ அக்காரியம் முழுவதும் நாசமாயிற்றே! பெருங் காரியம் அற்பகாரியமாகி விட்டதே!

நகரெங்கும் பற்றி எரியும்போது ஸீதா பிராட்டி தப்பிப் பிழைப்பளோ? தீக்கிரையாயினளோ? இப்படி என் காரியம் பாழடைந்ததால் இனி நான் உயிர் தரிப்பதில் பயனென்ன? தீயிலோ, கடலிலோ விழுந்து உயிரை மாய்ப்பதே உத்தமம். எடுத்த கருமத்தை முடிக்காது விபரீதம் விளைத்துத் திரும்பவும் அவ்விரு புருஷச் சிங்கங்களை எப்படிக் காண்பேன்? ஐயோ! குரங்கு புத்தியைக் காட்டி விட்டேனே! மதியை இழந்தேன். அன்னையை முன்பே காக்காது நகர் முழுதும் தீயிட்டு விட்டேனே! நாயகி மைதிலியாரின்றி, ஸ்ரீராகவர் உயிர் தரியார். இவரைப் பின்பற்றிய இலட்சுமணரும் உடனே மரிப்பது திண்ணம். அப்போது ஸுக்ரீவர் மாத்திரம் ஜீவித்திருக்க இசைவரா? அண்ணலிடம் அன்பு கொண்ட தர்மாத்மா, பரதனும், சத்துருக்கனும் இச்செய்தியறிந்து உயிருடனிருக்கச் சக்பரோ? தங்கள் உயிர் நிலையான அரசகுலம் மறைந்து விட, அயோத்தி மக்களா வாளாவிருப்பவர்? என்ன விபரீத விளைவை நிகழ்த்தினேன்! ஐயோ! கோபம் தலைக்கொண்டு பொறுமையிழந்து உலகத்திற் கேடு விளைவித்தவனாகி விட்டேனே!'' என்று இவ்வாறு மனம் புண் பட்டுப் பலவாறு புலம்பிப் பொருமினான்.

பின்பு, சற்றுத் தேறினன். எண்ண மிட எண்ண மிட முன் சென்ற சில நிகழ்ச்சிகள் நினைவிற்கு வந்த சிந்தனையைக் கிளப்பின. ஒரு வேளை, அம் மங்கள சொரூபியான சர்வாங்க சுந்தரி தனது தரும சக்தியால் தீயினின்று காப்பாற்றப்படாம லிருப்பளோ? கற்பென்ற நெருப்பு அந்த தரும தேவதையிடம் இருக்கையில் இந்த நெருப்பு அவளை என்ன செய்ய முடியும்? அளவிறந்த புண்ணிய பலங் கொண்ட தர்மாத்மாவின் மனைவி, சுயமாகவே தன்னுடைய நன்னெறியிலேயே நின்ற சக்தி பெற்றவள். இவ்விரு காரணங்களால் இந்த நெருப்பு அவளை அழித்திருக்க முடியாதென் றெண்ணுகிறேன் ஏனெனில், ஸ்ரீ ராம பிரபாவத்தாலும், வைதேகியின் சீலத்தாலும், இவர்கள் வாலிலிட்ட அக்கினி என்னை எரிக்கவில்லையே? தரும தேவதையாய் விளங்கும் ஸ்ரீ ராமனின் உத்தம பத்தினியான இச் சுந்தரியைத் இத் தீ எங்ஙனம் எரித்து விடும்? எக்காலத்திலும், எவ்விடத்திலும் குறையாத சக்தியுள்ள வாயுபகவான் என் வாலைக் கொளுத்தாது குளிர வைத்தாரே. அன்னை ஜானகியை அவர் காப்பார் அன்றோ? தருமத்திற்குக் கட்டுப் பட்ட தேவதையன்றோ அவர்?

இவ்வாறு மன விசாரணை செய்கையில், ஹநுமான் நினைவு கடல் தாண்டும் செயலில் நிகழ்ந்த சில நிகழ்ச்சிகளைக் கண் முன் வைத்தது. இளைப்பாறிச் செல்லும் பொருட்டு மைநாகபர்வதம் கடலிலிருந்து எழவில்லையா? தருமமும் அதிலே நிலைத்திருக்கும் உலகமும், இயற்கையும் அன்னையைக் காக்காது போய்விடுமா? கற்பென்னும் கனல் விளங்கும் இவளை இந்த நெருப்பு என்ன செய்யமுடியும்? இவ்விதம் வைதேகியின் தருமப் பிரபாவத்தை எண்ணமிடும்போதே, பெரியோர்களான சாரணர்கள் சொல்லிக்கொண்டே போகும் இவ்வார்த்தைகள் மாருதியின் காதில் விழுந்தன. "ஆஹா! இவ்வாச்சர்யத்தை என்னென்றுரைப்பது! ஹநுமானால் லங்காநகரம் முழுவதும் கொளுத்தப்பட்டது எங்கும் கொழுந்து விட்டெரியும் ஜ்வாலைகள் வானளாவி வீசுகின்றன. நகரமே தீக்கிரை; ஆனால் ஜானகியிருந்த இடம் மாத்திரம் நெருப்பால் அழியவில்லை. இது இன்னும் ஆச்சரியமே".

ஆஞ்ஜநேயன் மனத்தில் இம்மொழி அமுதைப் பொழிந்தது. "அப்பா! பிழைத்தேன்" என்று சொல்லொணு ஆறுதல் கொண்டான். ஆம்; முன் நிகழ்ந்த அநுபவங்கள், அவைகளின் காரணங்கள் உண்மையின் தத்துவம், இவை இந்தச் சாரணர் வாக்கியத்தை உண்மையென்று நிலை நிறுத்தின. உள்ளங்களித்த வாயுகுமாரன் மைதிலியை மனத்தில் நினைத்தான். உடனே திரும்பவும் அவளை ஒரு தரம் நேரில் தரிசனஞ் செய்துவிட்டு மனோரதம் நிறைவேறப் பெற்றவனாகி உற்சாகத்துடன் திரும்பிச் செல்லத் தீர்மானித்தான்.

---

## 56. ஹநுமான் அன்னை அடிபணிந்து திரும்புதல்

அன்னை ஜானகியின் சுயம் பிரபாவத்தால் தீயின் விபத்து அவளை அணுக முடியாதென்று உணர்ந்ததும் ஹநுமான் அவளை நேரில தரிசித்து விடைபெற்றுப் போக அவாக் கொண்டு அழிந்த அசோகவனத்தையடைந்து, சிம்சுபாவிருட்சத்தின் கீழ்ச் சாவதானமாய் அமர்ந்திருந்த

வைதேகியைக் கண்டு, ஆனந்தமடைந்து, கண்ணீர் சொரிந்து, சாஷ்டாங்கமாய்த் தெண்டனிட்டான். "அம்மையே! நல்ல வேளையாக, நீங்கள் க்ஷேமமாயிருக்கக் காண்கிறேன்; என் உள்ளங் குளிரக் காண்கிறேன்; நமஸ்கரிக்கிறேன், என்ருன்.

சற்று யோசித்து ஹநுமானைப் பார்த்து ஜானகி "வீரனே! காரியத்தை முடித்து வைப்பதில் நீ வருவனே சமர்த்தன். உன் ஆற்றலையும் ...ணவத்தையும் அறிவேன். கொடியவர்களைக் கதற அடிக்கும் காகுத்தர் ...ந்த லங்கையை பாண சாலங்களால் நீறாக்கிவிட்டு என்னை அழைத்துப் ...ரவதே அவருக்கு ஏற்றதாகும். போரில் ராக்கவாசனை மாய்த்து, ...சதர்களை அறவே அழிப்பதே அவர் பராக்கிரமத்திற்கு ஏற்றதாகும். ...கையால், அவர் போர்செய்வதே சிறந்தமுறை என்று அவருக்கு உணர்த்துவது உமது பொறுப்பாகும்" என்ருள்.

வீர உணர்ச்சி கொண்ட ஒரு வீராங்கனையாக மிதிலைச் செல்வி காட்சியளிப்பதைக் கண்டு மாருதி வியந்தான். "ஸ்ரீ ராகவனிடமிருந்து வ...த தூதன் சித்திர செயல்களை இயற்றினேன். அவரால் அனுப்பப்பட்ட ய...னே இவ்விதம் செய்து முடித்தால் இதைவிட அவர் குறைவாயாய் ...ற்த்துவாரா? ஆகையால் லங்கை முழுவதும் அவர் தொடுக்கும் போரில் ...ியவேண்டும். இதுதான் அவர்க்கு ஏற்றதாகும். இதைத்தான் ...னகி வலியுறுத்துகிறாள்" என்று கண்டு, "தேவியே! எவர் மாபெரும் ...கத்தில் சத்துருக்களை வென்று கொன்று உங்களது சோகத்தை ...க்கப் போகிருரோ, அவ்வில்லாதி வீரரான ராகவீரர், வானர வீரர்களால் ...டி கோடியாய் சூழப்பட்டவராய், இதோ இங்கு எழுந்தருளப்போகிருர். ...ம்மா! இது சத்தியம். இதோ வாயு வேகமாய் நேரே அவர் அடிபணிய ...ாகிறேன், விடையருள்வீர்களாக" என்று மிகவும் பயபக்தியுடன் அடிபணிந்து அன்னையின் ஆசி பெற்றவனாய் அங்கிருந்து வெளிக் கிளம்பி அரிஷ்ட மலை வந்தடைந்தான். வனவரிசைகள், கொடி முடிகள் அடர்ந்த எழிலமைந்த மலை அது. 'ஸ்ரீராகவனைக் காணப்போகிருேம், என்ற பரமானந்தத்தால் மிக்க உற்சாகத்துடன் அம்மலையின் மீது ஏறித் தேகத்தைப் பெருக்கி வலிவைத் திரட்டி கடலைப் பார்த்துவிட்டு, வானில் தாவிப்பாய்ந்தான். ஹநுமான் காலால் ஊன்றி அழுத்தப்பட்ட அம்மலைச் சிகரம் பொடியாயிற்று. மின்னல் கொடி போல் வாயு குமாரன் வானில் வரியிட்ட வண்ணம் விரைந்து சென்ருன்!

———

## 57. ஹநுமான் ராமனிடம் விரைதல்

சந்திரனுகிய ஆம்பல் பூத்து, சூரியனுகிய நீர்க் காகங்களோடு கூடி, புஷ்யம், சிரவணம் எனும் நட்சத்திரங்களாகிய அன்னங்கள் பொலிந்து, மேகங்களாகிற பசும் பாசிக் கொத்துக்கள் விரிக்கப் பெற்று, புனர்வசு அங்காரகர்களாகிய மீனும் முதலையும் விளங்க, ஐராவத மெனும் தீவுடையதாகி, காற்ருகிய அலைகளுள்ளதாய், நிலவெனும் நீர் நிறைந்து, புஜங்க

யட்ச, கந்தருவராகிய நெய்தல் மலர் மிளிரும், கரையில்லாத ஆகாய மாகிய பெருங்கடலில், பெரியதொரு மாக்கலம் அயாசமாய்க், கம்பீர மாய்ச் சமுத்திரத்தில் விரைந்து செல்வதேபோல் ஆஞ்ஜநேயன் வானில் நீந்தி ஏகினன். அடிக்கடி மேகங்களுள் மறைந்து மின்னல் போல் வெளி வந்தான்.

[அதாவது: முன் வந்தபோது எவ்வளவு உயரஞ் சென்றனனோ அவ்வுயரத்தில் திரும்பும்போது செல்லவில்லை போலும்! இப்பொழுது கடலைக் கண்ட வண்ணம் செல்கிறான். அதன் பெருமையைக் காண அவன் மனம் உற்சாகமடைகிறது. கடலின் கவர்ச்சியில் முன்பு ஆகாயத் தில் சென்றவன் இப்பொழுது கடலின் மேல் உயரத்தில் வருகிறான்.]

மகாசக்தி வாய்ந்து, அரக்கர் தலைவர்களைச் சிதைத்து வதைத்து, சேனைகளை அழித்து, லங்கை நகரைத் தீக்கிரையாக்கி, ராவணனையும் திடுக்கிடச் செய்து, வைதேகியைக் கண்டு வணங்கி, தூதன் கடமையைக் குற்றமின்றிச் செய்து, வெற்றி உணர்ச்சியும் ஐயனைக் காணும் பேராவ லும் கொண்டு, உற்சாகம் உள்ளடங்காது கர்ஜனை செய்து கொண்டே திரும்பி வருகிறான் மாருதி,

சுமார் பாதிக்கு மேல் வந்திருக்கலாம். உடனே கடலிலிருந்து திரும்பவும் எழும்பிற்று மைநாக பர்வதம். இதைக் கண்ணுற்றதும் வாயு குமாரனுக்குத்தான் முன் கொடுத்த பிரதிஞ்ஞை நினைவிற்கு வந்தது. உடனே அதைக் கௌரவித்து, அதன் வரவேற்பைப் பெற்றுக்கொண் டான். இது ஸ்ரீ ராகவனுக்கான மரியாதை. ராம காரியத்தில் மைநாக மென்ன? எவர்தான் ஈடுபடமாட்டார்கள்? தருமத்திலமைந்த இயற்கை அத்தருமமூர்த்திக்கு ஆராதனை செய்வது முற்றிலும் ஏற்றதாகுமென்று அறிந்து அதைப் பாராட்டினன். இதை யடைந்தபோதே அக்கரையில் வடக்குத் திக்கிலுள்ள மகேந்திர பர்வதம் கண்ணிற் பட்டது. 'ஆகா! இம்மலையின் கீழல்லவா கடற்கரையில் காத்துக்கொண்டிருக்கிறார்கள் ஜாம்பவான் அங்கதன் முதலிய வானரப் பெரியார்கள்' என்று அவர்களை ஆசையுடன்காணவிரைந்தான். உடனே வெற்றி முழக்கத்தில் அவர்கள் காதில் விழும்படி பேரொலியுடன் கர்ஜனையிட்டான் மாருதி.

இப்பேரொலி எங்கும் பரவிற்று. அது எதிரொலி கொண்டு பெருக் கெடுத்தது. இதைக் கேட்காதிருப்பவர்களா கடற்கரையில் காத்திருந்த அங்கதன் முதலியோர்? எங்கும் எதிரொலி உண்டாகி, அவ்வீர கர்ஜனை எழுந்து மேலும் மேலும் பரவிக்கொண்டே வந்ததைக் கவனித்தார்கள். உடனே ஜாம்பவான் உள்ளிட்ட அனைவரும் ஒன்று கூடி ஹநுமான் வரு வதைக் கண்டு மனக்களிப்புக் கொண்டவர்களாய் வானை நோக்கிப் பார்த்த வண்ணமிருந்தனர். அவர்களைப் பார்த்து ஜாம்பவான் தானும் மிக்க உற்சாகங்கொண்டு "தோழர்களே! ஹநுமான் தான் போன காரியத்தை வெற்றியில் முடித்துவிட்டான். இதில் எள்ளளவும் சந்தேகமில்லை. ஏனெனில், கருமத்தைச் செய்து முடிக்காதவன் இவ்வீர கர்ஜனை செய்ய முடியுமோ? நமக்கு இனி வெற்றி" என்று உறுதி கூறினன்,

இதற்குள் துடை புஜங்களுடைய வேகத்தால் மேலெழும் அ
ளின் சப்தமும் அதன் வரிசையும் வானில் முழங்கும் வீர கர்ஜனையு
மீபித்தன. வானரர்கள் அவற்றைக் கேட்டுக் களிப்புற்றுத் துள்ளி
தித்தனர். 'ஹநுமான் வந்துவிட்டான், நாம் பிழைத்தோ'மென்ற குதூ
த்தில் சிலர் அதி வேகமாக மரத்திலேறினார்கள், கொம்புகளில் தாவி
டினார்கள், சிலர் மலையுச்சியில் ஏறினார்கள். கிளைகளைப் பிடுங்கி வெற்றிக்
காடி வீசினார்கள். அதே சமயத்தில் காளமேகத்தையொத்துப் பாய்ந்து
ருகிற அந்தப் பெருங்கவியைக் கண்ணுற்றார்கள். கண்ணுற்றுக் கைக்
ட்பினார்கள், அப்பொழுது பர்வதம் போன்ற ஆஞ்ஜநேயனும் மஹேந்திர
லைச் சிகரத்தில் வந்து குதித்தான். ஆநந்தத்தால் அவன் உடம்பு பூரித்
திருந்தது. உடனே எல்லோரும் அவனைச் சூழ்ந்துகொண்டார்கள்,
ழங்குகளையும் பழங்களையும் ஏராளமாய்க்கொண்டு கொடுத்து பரிவுடன்
அவனைக் கௌரவித்தார்கள்.

ஆஞ்ஜநேயன் முறையே ஜாம்பவான் முதலிய பெரியோர்களையும்
அங்கதனையும் பணிவுடன் பணிந்தான். கண்ணைக் கொட்டாது வெகு
வலுடன் காத்திருந்தவர்களின் பேரவாவைக் கண்ட ஹநுமான்,
அன்னை வைதேகியைக் கண்டேன்' என்று சுருக்கமாகச் சொன்னான்,
அவ்வளவுதான்! அமிழ்தினும் இனிய இம்மொழியைக் கேட்ட வானரர்கள்
அடக்க முடியாத ஆநந்தங் கொண்டார்கள். அங்கதன் முன் எழுந்தான்.
அவன் உள்ளக்களிப்பு கண்ணிலும் முகத்திலும் மிளிர்ந்து விளங்கிற்று,
அவனைக் கரத்தினால் பற்றி அவன் ஆநந்தத்தைக் கௌரவித்து, அவனி
ம் தனி அன்புகொண்டு அவனை அண்மையிலமர்த்திக் கொண்டு, நிரம்
பின மதியுடையவனாய்ப் பேசவாரம்பித்தான் அஞ்ஜனைச் செல்வன்.

"அன்பர்களே! கேளுங்கள். பச்சிளங் குழந்தையின் மேனியுடை
யாள்; வனஜம் போன்ற விசால நேத்திரமுடையாள், ஜனகரின் செல்வத்
திருமகள், ஸ்ரீ ராகவரின் முழு அன்புக்கும் பாத்திரமுடைய பதிவிரதா
சிரோமணியாகிய ஸீதாதேவி அரக்கிகளின் காவலிலிருக்கிறாள். பதியை
அடையும் நிமித்தம் கொடுந் தவசி போல் ஒரேயாடையுடுத்திச் சடைமுடி
தரித்துப் புழுதிபடிந்த உடலுடன் உபவாசத்தில் இளைத்துத் துரும்பாய்
ராமதியானத்தில் உருகிக் கரைகிறாள்.'' என்று வைதேகியின் நிலையை
வரைந்தான்.

ஜானகியின் வரலாற்றை யறிந்ததாலான பரமானந்தம்; அன்னை
கணவனைக் காணாத வாடி வதங்குகிறாள்; அவள் சிறைப் பட்டிருக்கிறாள்
என்பதைக் கேட்ட சீற்றம்; இவ்வாறு வானரர்களின் உணர்ச்சி வித வித
மாய்ச் செயலில் பரிணமித்தன. ஹநுமானுக்கு அவள் தரிசனம் கிடைத்த
தில் எல்லோரும் களித்து அகமகிழ்ந்தனர். அவளைக் காணவேணுமென்று
எல்லோரும் ஆத்திரங் கொண்டு துடி துடித்தனர். அங்கதன் ஹநுமானை
நோக்கி 'ஐயனே! இனிக் கவலை ஏன்? அன்னையின் சோகத்தை அரை
விநாடியில் அறவே ஒழித்து விடுபவன் ரகுகுலோத்தமன். அன்னையைத்
தேடிச் சென்ற உம்முடைய வீரமும் ராம பக்தியும் சொல்லுக் கடங்கா.
கடலைக் கடந்து, தேவியையும் தரிசித்து நிரபாயமாய்த் திரும்பவும் வீர
விலாசத்தில் வந்தடைந்தீர்! உமக்கு இணையற்றவர் உலகில் எவருளர்!
உம்முடைய பேருபகாரத்தை என்னென்றுரைப்பது ?'' என்று ஹநுமானை

பாற்றிப் பாராட்டினுன் அங்கதன். மற்ற வானரத் தலைவர்களும் தங்கள் தங்கள் மனதிக்கெட்டியபடி ஹநுமானைப் போற்றிக் கௌரவித்தார்கள். விசாலமான ஒரு கற்பாறை மீது ஜாம்பவானையும், அங்கதனையும் ஹநுமானையும் ஏற்றுவித்து, மகிழ்ச்சி கொண்டு அவர்களை உபசரித்துக் கொண்டாடினர். பின்னர் மாபெரும் சபை கூடிற்று. எல்லோரும் அவர்க முன் வாய் புதைத்து மிகவும் வணக்கமாய் ஹநுமான் மூலம் ஸீதையி விருத்தாந்தத்தை அறியப் பேராவல் கொண்டு, மௌனமாய் நின்று ஹநுமானை நோக்கிய வண்ணம் காத்து நின்றனர். கடல் கடத்த இலங்கையடைதல், அதன் அமைப்பு, தேவி தரிசனம் முதலிய செய் களைக் கேட்க விரும்பி அசையாது நின்றனர். அங்கதன் அச் சபை முல தேவர்கள் புடைசூழத் தேவராஜன் போல் வானரர்கள்முன் அமர் திருந்தான். அவனும் இலங்கையில் நடந்தேறிய விருத்தாந்தத்தை அறி விரும்பினுன். எல்லோர் முகத்திலும் ஒரே குறிப்பு; எல்லோர் மனத்திலு ஒரே கருத்து, ஆஞ்நேயனும் இதைக் கவனிக்கிருன்.

---

## 58. ஹநுமானின் அறிக்கை

வானரர்களின் குதூகலத்தையும் ஆஞ்ஜநேயனது ஆர்வத்தையு ஜாம்பவான் கண்டு களித்து, ''ஆஞ்சநேய! அடங்காத உள்ளக் களிப்பி நீ வெற்றி வீரனுய்த் திரும்பி வந்ததைக் கண்டு அக மகிழ்ந்தோம். உ னுடைய விருத்தாந்தத்தை அறிய உன் நண்பர்கள் பேராவல் கொண் காத்திருக்கிருர்கள். நீ ஒன்றையும் விடாமல் சொல்ல வேண்டும். லங்கை யில் என்ன நடந்தது? எவ்வாறு தேவி பார்க்கப் பட்டாள்? அவள் நிலை என்ன? அவள் விஷயத்தில் அக் கொடிய அரக்கன் எவ்வாறு நடந்து கொள்கிருன்? எல்லாவற்றையும் விஸ்தாரமாய்ச் சொல் அதன் பிற மேலே என்ன செய்ய வேண்டு மென்பதை ஆலோசிக்கலாம்'' என்ருன்

இவ்வாறு வினவப்பட்ட வாயுகுமாரன் மிகவும் மகிழ்ச்சியடைந்தான். முதலில் எழுந்து ஸீதாதேவி இருக்கும் தென்திசை நோக்கி அஞ்சலி செய்தான். பின்பு பேசவாரம்பிக்கிருன்.

''நண்பர்களே! கேளுங்கள். தெற்குக் கடலின் எல்லையிலுள்ள லங் கையில் ஸீதாதேவியைக் காணவிரும்பி உங்கள் கண்முன்னே இதே மஹேந்திர மலையிலேறி அவ்வுச்சியிலிருந்து தாவிச் சென்றேனல்லவா? அப்படியே வானவீதியில் கொஞ்சதூரம் சென்றதும் ஓர் அழகிய மலையுச்சி யைக் கண்டேன். திவ்வியமான பொற் பூச்சுக்களோடு கூடிய மனோ ரம்மியமான அம் மலையுச்சி கடலிலிருந்து என் வேகத்தைக் தடை செய்வது போல் என் முன்னே எழுந்தது. அதைத் தகைத்தெறிய எண்ணங் கொண்டு செக்கர்வானம் போல் திகழும் அம்மலை யுச்சியை ஓங்கி அறைந் தேன். அது ஆயிரம் சுக்கலாகப் பொடியாயிற்று. பின்பு அங்கு அழகிய ஓர் உருவம் தோன்றி.'' குழந்தாய் என்று என்னை அழைத்து, இனிய குரலில் மனதுருகும் வண்ணம் இப்படிச் சொல்லிற்று. ''அப்பனே! நான் மைநாகம் என்ற கடலிலிருக்கும் பர்வதராஜன். உன் தந்தையான வாயுவின் நண்பன். நீ அவ்வாயு மண்டல வீதியில் ஸ்ரீ ராம காரியமாக விரைந்து

அளவிற் கெட்டாத அற்புதச் செயலில் ஈடு பட்டிருப்பதை அறிவேன். மகனே! முன்பு சிறகுகள் கொண்டு மலைகள் எங்கும் பறக்க வல்லவைகளா யிருந்தன; அவை அப்படிப் பறந்து ஒவ்வோரிடத்திலும் தங்கி அமுக்கி ஜனங்களை துன்புறுத்தி வந்தன. அதைக் கண்டு இந்திரன் இவைகளின் சிறகுகளை வஜ்ராயுதத்தால் துண்டு துண்டாய் வெட்டிக் கொண்டே ந்தான். அப்பொழுது அந்த வஜ்ராயுதத்திலிருந்து தப்பும் பொருட்டு ன் தந்தை என்னை இக்கடலுள் அமிழ்த்து மறைத்தார், சத்துருவைச் தறவடிப்பவனே! நீ இப்போது ஸ்ரீராம காரியத்தின் பொருட்டுச் சென்று காண்டிருக்கிறாய். அம்மகத்தான கைங்கரியத்தில் நானும் பங்கெடுத்துக் காள்ள ஆசைப்படுகிறேன். உன்னை உபசரிப்பது உன் தந்தையை உபசரிப்பதையொக்கும். அன்றியும் ஸ்ரீ ராமன் மானிடர்களுள் உத்தமர். அவரைக் கௌரவிக்க எண்ணுகிறேன். ஆகையால் இங்கு சிறிது தங்கி களைப்பாறிவிட்டுச் செல்ல வேண்டும்'' என்று வற்புறுத்தினான். நான் அவருக்கு ஸ்ரீராம காரியத்தில் சித்தி பெருமல் இடையில் இளைப்பாறுதல் உற்றதாகாதென்று விளக்கிக் கூறி விடைபெற்று மறுபடியும் வேகமாய் வான்வழியே சென்று கொண்டிருந்தேன்.

கொஞ்ச தூரம் கடந்திருக்கலாம், சுரசை என்ற நாகமாது அரக்கி டிவங்கொண்டு திடீரென்று என் வழியை மறித்தாள். தான் வெகு நாள் ட்டினி என்றும், என்னை அவள் தன் ஆகாரத்தின் பொருட்டுத் தேவர் ள் அவளிருக்குமிடம் அனுப்பியிருக்கிறார்களென்றும் உரைத்தாள். நான் அவளுக்கு அஞ்சலி செய்து, 'ஸ்ரீ ராம காரியத்திற்காக அனுப்பப்பட்ட ாதன் நான். என் காரியம் முடிந்தவுடன் உன் வாயை அடைவேன்; அதுவரை எனக்கு வழி விட்டுப் பொறுத்திருக்க வேண்டும்' என்று வண்டினேன். அவள் அதற்கு இசையவில்லை. என்னை விழுங்க வாயைத் றந்தாள். அதைக் கண்டு என் உடலைப் பெருக்கினேன். அவளும் தன் ாயை அதைவிட அதிகமாகப் பெருக்கினாள். இவ்வாறு ஒருவர்க்கொருவர் றையே உடம்பையும் வாயையும் பெருக்கிக் கொண்டே போனோம். சடக் கென்று என் உடலைச் சிறிய ஓர் அணுவாகச் சுருக்கி, அகண்டமான அவள் ாயில் புகுந்து காதின் வழியே வெளி வந்து விட்டேன், அத் தெய்வப் பெண் உடனே தன் சுயரூபங்கொண்டு "வீரனே! வெற்றி பெறுவாய், வைதேகியை ராகவரிடம் சேர்த்துவைப்பாய்; உனக்கு மங்களமுண்டாகுக'' யென்று வாழ்த்திப் போனாள், இதைப் பார்த்தவர்கள் வியப்புற்றனர்.

''மறுபடியும் நான் ஆகாயமார்க்கமாய் விரைந்து சென்று கொண் டிருக்கையில், திடீரென்று என் நிழலை யாரோ பிடித்திழுப்பதாகக் கண் டேன். என்ன விநோதமான நிகழ்ச்சியென்று கீழே கூர்ந்து கவனிக் கையில், பயங்கரமான ராட்சதி ஒருத்தி வாயைப் பிளந்து கொண்டு கடல் மேல் பரந்து கிடந்ததைக் கண்டேன். அவள் என்னைப் புசிக்க எண்ணங் கொண்டாள். அவள் வாயளவிற்கு என் உடலைப் பெருக்கிக் கொண் டேன். அவளும் அதைவிடம் பெரிதாகத் தன் வாயைப் பெருக்கிக் கொண்டே போனாள். சடக்கென்று என் உடலை அணுவாகச் சுருக்கி அவள் வாயில் புகுந்து இருதயத்தைக் கிழித்தெறிந்து வெளிக் கிளம்பி னேன், அவளும் உயிர் நீத்துக் கடலில் மூழ்கினாள். 'எப்பொழுதும் மேலே பறந்து செல்லும் பறவைகளின் நிழலைப் பற்றி இழுத்து அவைகளை

பிடித்து உயிர் வாழ்ந்த கோர அரக்கி சிம்ஹிகை என்பாள் தொலைந்தாள் என்று வான்வழியே சென்று கொண்டிருந்தவர்களின் வசனத்தைக் கேட்டேன்.

"பின்பு மறுபடியும் தாவி விரைந்தேன். கடைசியில் கடலின் அ கரையைக் கண்டேன். மலைகளாலும் மதிள்களாலும் சூழப்பட்ட ரம்மியமான லங்காபுரியைக் கண்டேன். அங்கிருந்த ஒரு மலையுச்சியை யடைந்து இறங்கிச் சூரியன் அஸ்தமித்த பிறகு எவர் கண்ணிலும் படா லங்கையுட் புகுந்தேன். புகும்பொழுதே அட்டகாசஞ் செய்துகொண் ஓர் அரக்கி என்னை எதிர்த்துத் தடுத்தாள். பார்க்கப் பயங்கரமானவள் செம்பட்டை மயிரும், தீயைக் கக்கும் கண்ணுமுடையவள். அவளை என் இடது கையால் குத்தினேன். அது தாங்காது கீழே விழுந்த அவள், தான் அந்த லங்காபுரியை காக்கும் அரக்கி லங்கிணி என்றும், தான் அடிபட்டு கீழ் விழுந்தது லங்கை நகர் அழிவுக்குச் சூசகமென்றும், இனித் தாராள மாய் லங்கையில் உட்புகுந்து அன்னை ஜானகியைத் தடையின்றித்தேடலா மென்றும் சொல்லித் தன் வழியே சென்றாள். பின்னர் நான் நகரம் புகுந்து இரவு முழுவதும் ஜனகர் திருமகளைத் தேடினேன். ராவணன் அந்தப் புரத்தில் அவளைக் காணவில்லை. அவன் அரன்மனையிலும் அவள் இல்லை. எங்குத் தேடியும் அவள் காணப்படவில்லையே என்று கவலையுற்றிருக்கையில் விசித்திரமான பொன்னிழைத்த மதிள் சூழ்ந்த உத்தமமான பூங்காவன மொன்று கண்ணில் பட்டது. அம் மதிலைத் தாண்டினதும் அநேக மரங்கள டர்ந்த ஒரு சோலையைக் கண்டேன். அது அந்நகருக்கே அழகூட்டும் அசோகவனம். அதில் ஒரு பெரிய சிம்சுபாமரம். அதில் ஏறினதும் பொன் னிறமான ஓர் வாழைத் தோட்டம் கண்டேன். அப்போதே கண்டேன் அன்னையை! ஆகா! என்ன காட்சி அது? உயர் பெரும் உன்னதக் காட்சி எனினும் உயிரையே உருக்கி உறிஞ்சும் சோகக் காட்சி! ஓர் எளிய மான் பேடை பெண்புலிகளால் சூழப்பட்டு பரிதவிக்கும் காட்சி! ஆகா! என்ன கண் கொண்ட காட்சி அன்னையின் தரிசனம்! உருக்கி வார்த்த சொர்ண திருமேனி அவ்வம்மையின் சோபை வருணிப்பதற்கு நிலமல்ல. கமலக் கண்கள் குளிர்ந்த அருள் மாரிபொழிகின்றன. மெல்லிடையாள்; துவண்டு வாடிச் சுருங்கி, உபவாசத்தால் உலர்ந்து புழுதிபடிந்து; தரையில் கிடந்து, கணவனை யடையத் தவங் கிடக்கிறாள் அவ்வுத்தமி. அடிக்கடி கோர அரக்கிகளால் மிரட்டப் படுகிறாள். தன்னினமற்றுத் தனிமையில் பேய் பிசாசுகள் கையிலகப் பட்ட அந்நாரீமணி வலையிலகப் பட்ட மான் போல் திகிலடைந்து துள்ளித் தத்தளிக்கிறாள். பர்த்தாவான ரகுகுலதிலகனையே தியானித்துக் கொண்டிருக்கிறாள். நான் காணும் போது துக்கம் மேலிட்டு உயிரை மாய்க்கத் துணிவடைந்தாள். அவள் அத்தசையிலிருந்தும் அவளது கற்புத் தூய்மை பன்மடங்கு பரிமளித்து விளங்கிற்று."

"விடியுங்காலம் லங்கை அரசன் கண்விழித்து ஆத்திரங் கொண்டு அரண்மனையை விட்டு அசோக வனம் வந்தான். அதைக் கண்டு என் உடலைச் சுருக்கிக் கிளையோடு கிளையாய் மறைந்து என்ன நடக்கிறதென்பதைக் கவனித்தேன். அரக்கவரசன் அணுகுவதை அறிந்த அவ்வசோகவனத்து ஆரணங்கு அழகுற்ற அவயவங்களை பிறர் கண்படாது அடக்கி ஒடுக்கி மறைத்து அவனைக் கண்ணெடுத்தும் பாராது பூமியை நோக்கி முகத்தையும் மறைத்துக்கொண்டாள். அந்த சுந்தர தேவதையான தபஸ்வினியின் மன

நிலையைக் கண்டு தான் பேசினதெல்லாம் துரும்புபோல், மதிக்கப்படாது வீணனதைக் கண்டு ராவணன் மனம் கடிந்து இரண்டு மாதத்திற்குள் அவள் இசைய வில்லையாயின் காலை போஜனத்திற்காக வேலையாட்கள் அவளை வெட்டித் துண்டாக்கிக் கறி சமைப்பார்களென்று கெடு கொடுத்தான். அதை இன்னும் துரும்பாக மதித்துப் பொருட் படுத்தாது புதிதாக வீரா கொண்ட அவ் வீராங்கனை ராட்சதனை அரட்டி மிரட்டினாள். ராட் பதரே ஸ்ரீராகவர்—உலகிலேயே—எவ்வுலகிலும் இணையற்ற தனிப் ம வீர வள்ளல். அவர் மனைவியிடமா இவ்வாறு பேசுவது? உன் த இன்னும் அறுந்து விழவில்லையா? அல்பனே! அதருமஞ் செய்யும் ! அம் மகான் தலை மறைவில் என்னைத் திருடிக் கொண்டு வந்த உன் யத்தை என்னென்றுரைப்பது? சத்தியவான், தருமதேவதை, உண் ப் பராக்கிரமம் சொரியும் உலக உத்தமன் அவரெங்கே, திகில்கொண்டு யையினுல் ஓடி ஒளியும் அற்பனான நீ எங்கே!'' என்று திரஸ்கரித்தாள்.

"இக் கடின மொழி நாரசம்போல் பாயவே அரக்கவரசன் அடங்காக் ாபங்கொண்டான். கத்தியை ஓங்கி அவளை அப்போதே கொன்று விட வந்தான் அப்பொழுது அவனைச் சூழ்ந்து வந்த மாதர்களுள் ஒருவ ன அவன் மனைவி மண்டோதரி என்பாள் சடக்கென்று அவன் முன் து வழிமறித்து அவனைத்தடுத்து ''நாதா! ஸீதையால் உங்களுக்கு ஆக ன்டியது என்ன? இதோ இங்குள்ள தேவ மாதர்களுடனும் கந்தர்வக் னிகைகளுடனும் களித்து இன்புறுங்கள்'' என்றாள். உடனேயே கிருந்த பெண்மணிகள் முன் வந்து அவனைச் சூழ்ந்து மகிழ்வித்து னை விரைவில் அரண்மனைக்கு அழைத்துச் சென்றனர்.

[இவ்விடத்தில் சில பெரியோர்கள் ஹநுமானின் மொழியை விசா ன செய்கிறார்கள். முன்பு, இந்நிகழ்ச்சி நடந்த போது, தான்யமாலினி பவள் காம பரவசங் கொண்ட ராவணனைக் கட்டியணைத்து, அவள் ப உரையால் அவனைத் தன் வசப்படுத்தி அங்கிருந்து அழைத்துச் ன்றாள். இப்பொழுது ஹநுமான் அவ்விருத்தாந்தத்தை வானரர்களுக் ரைக்கும் போது தான்யமாலினி என்ற பெயரைவிட்டு மண்டோதரி என் ன் என்று கொள்கிறார்கள். இங்கு கூர்ந்து கவனிக்க வேண்டும். நுமான் நடந்ததைக் கூறுகிறான். ராவணன் கோபங்கொண்டு சீறி ரும் போது மண்டோதரி தடுக்கிறாள் என்கிறான். இதற்குப் பின் அங்குக் டியிருந்த பெண்மணிகள் அவனைச் சமாதானஞ் செய்து கூட்டிச் சென்ற ர் என்கிறான். இதில் சந்தேகம் வேண்டுமா? மண்டோதரி தடுக்கிறாள். ட இருந்த மங்கையர்களில் ஒருத்தி தான்யமாலினி என்பாள். முன் ந்து ராவணனைத் தழுவிக் கொண்டு அழைத்துச் சென்றாள், ஆகையால் திதில் கவனக்குறைவோ, நினைவுப் பிசகோவென்ற பிரச்னை ஹனுமா துக்கு எழுவதற்கே இடமில்லையல்லவா? அடாது செய்யச் செல்லும் அரக்கனை அவன் மனைவி ஒருவளால் தான் தைரியமாக முன் வந்து தடுக்க டியும். அவ்விதமே தடுக்கிறாள். உடனே தான்யமாலினி எனும் இன் னொரு மாதுகாமுகியாகிய அவன் மனத்தைத் தன்னிடம் இழுத்துத் தக்கக் ரணஞ் சொல்லி அழைத்துச் செல்கிறாள். பகிரங்கமாகக் கணவனைக் ட்டி அணைத்து இன்ப உரையாடுபவள் அரசன் மனைவியின் முறையல்ல. ண்டோதரியும் அப்படி செய்பவளல்ல. மனைவி கணவனின் கோர எண்

ணத்தைத் தடுக்கிருள். அதை காம எண்ணமாக்கித் தான்யமாலினி அவனே அழைத்துச் செல்கிருள். ஆகவே, இங்கு சந்தேகத்திற்கு இட மேது ? ஆஞ்ஜநேயன் இதைத் தெளிவுபடுத்துகிருன் போலும்.]

மாருதி சொல்லிக்கொண்டே போகிருன் :—

"அந்த தசக்கிரீவன் சாந்தப்படுத்தப்பட்டு காமத்திலிழுக்கப் அழைத்துக் கொண்டு போகப்பட்ட உடனே காவலிலிருந்த அரக் கொடூரமாக நமது அன்னேயை மிரட்டினர்கள். ஜானகி அவர்கள் வச களேப் பொருட்படுத்தாது இருந்து விடவே, அவளே அவன் கணவ மிருந்து பிரிக்கமுடியாதவள், அவள் மனேதிடம் மகத்தானது என ராவணனுக்கு அறிவித்து பிணந்தின்னும் ராட்சதிகள் பின்பு களேப்புற் தூங்கிவிட்டார்கள். அவர்கள் உறங்கவே வைதேகி தன் சோகத்தை தாங்க முடியாது புலம்பி அழுதாள். சற்று நேரஞ் சென்றதும் சில அ கிகள் கண்ணே மூடிக்கொண்டே மறுபடியும் ஜானகியைத் தின்று விடு தாக மிரட்டினர்கள். அப்பொழுது திரிசடை என்பவள் சரேலென் வாரிச் சுருட்டிக் கொண்டு "அடி ! வேண்டுமென்ருல் என்னேத் தின்னு களடி கற்பரசி ராஜகன்னிகையான களங்கமற்ற கமலக் கண்ணியி அருகே அணுகாதீர்கள். இதைக் கேளுங்கள், அரக்கர் அடியோடு ந மடைவதும் ஸ்ரீ ராகவர் முற்றிலும் வெற்றி பெற்று இம் மங்கை திரும்பி அழைத்துப் போவதுமான கோர சொப்பனங் கண்டேன்," என சொல்லி அவள் கனவை விஸ்தரித்தாள். அவள், அச்சமயம் ஸ்ரீ ரகு ரைச் சாட்சாத் சங்கு சக்கர கதாதாரியான, சர்வேச்வரனை ஸ்ரீ நாராயண மூர்த்தியாகவே கண்டு வெளியிட்டாள்; தங்கள் முன் அம திருக்கும் ஜனகர் திருமகள் ஸாட்சாத் மகாலட்சுமி யென்றும் அவளுடை அருளேப் பெற்றுத் தங்கள் அபராதங்களேப் பொறுக்குமாறு பிரார்த்த செய்யவேண்டுமென்றும் புத்தி கூறினுள்; இதைச் செவிக்கினியதா கேட்ட தாசரதியின் தனிப் பெரும் தடங்கண்ணுள், 'இக் கனவு உண் யானல் நீங்கள் விரும்பியபடி கோபங்கொள்ளாது பொறுத்திருப்பே என்றுரைத்தாள்.

"அரக்கிகளோ ஆறுதலடைந்து மறுபடியும் உறக்கமுறவே இ தான் சமயமென்று அன்னேயிடம் உரையாடவேண்டி இக்ஷ்வாகு வ பரம்பரையைப் பற்றியும், ஸ்ரீ ராகவனின் பெருமையைப் பற்றியும் புகழ வாரம்பித்தேன். இவ்வசனங்களேக் கேட்டாள் மைதிலி. ஆச்சரியமடைந் தாள்; கண்ணில் ஆநந்த வாரிதியுடன் மேலே பார்த்தாள். நான் உடனே மரத்தைவிட்டுக் கீழே குதித்து அன்னேமுன் பணிந்தேன்; நான் இன்னு னென்றும் ஸ்ரீ ராமசந்திரருடன் எவ்வாறு பரிசயமென்றும் ஸுக்கிரீவ ரைப் பற்றியும் ராமலட்சுமணர்களுடைய அடையாளங்களேப் பற்றியும், ராம ஸுக்கிரீவ நட்பைப் பற்றியும் விவரமாகத் தெரிவிக்க மொழிந்தாள். நானும் விஸ்தாரமாக எல்லாவற்றையும் எடுத்துரைத்து ஸ்ரீ ராகவரிட மிருந்து வந்த தூதனென்றும் அவர் அந்தக் கணயாழியை உங்களிடம் கொடுக்குமாறு கொடுத்தனுப்பினரென்றும் அவள் சந்தேகத்தைத் தீர்த்து அருளேப் பெற, கணவரிடம் கொண்டு சேர்ப்பதாகவும், என்ன அபிப்பி ராயமோ அதைச் செய்து முடிக்கக் காத்திருக்கிறேனென்றும் உறுதி கூறினேன். அந்த ஜனகநந்தினி எல்லாவற்றையும் நன்று ஆலோசனே

செய்தவளாய், “ஸ்ரீராகவரே இங்கு வந்து ராவணனைப் போரில் கொன்று என்னை அழைத்துச் செல்லட்டும்” என்று மொழிந்தாள். அப்படியே என்றுரைத்து தன் கணவருக்கிசைந்த ஓர் அடையாளத்தைக் கொடுத்தனுப்பும்படி வேண்டினேன். அதற்கு அவள், ‘எதைக்கண்டால் உம்மை அந்த மகாபாகு கொண்டாடுவரோ, அந்த இவ்வுத்தமமான மணியைப் பற்றுக் கொண்டுபோம்” என்று திவ்வியமான தன் சூடாமணியைத் தந் ளினாள். பின்பு அன்னையிடம் விடைபெற்று அவளை வலம்வந்தேன். பொழுது அந்த அம்மையார் என்னைப் பார்த்து “ஹநுமானே! என் த்தாந்தத்தை ஸ்ரீ ராகவர் அறியட்டும். எதைக் கேட்டவுடன் அவ்விரு ர்களும் ஸுக்கிரீவருடன் இங்கு விரைந்து வருவார்களோ அவ்விதமே ர்களுக்குச் செய்தி தெரிவிக்க வேண்டும். நான் இன்னும் உயிர்த ப்பது இரண்டே மாதந்தான், அதற்குள் ரகுநாதர் இங்கு வரவில்லை ன்றால் என்னை உயிருடன் காணமுடியாது” என்று வருத்தம் பொழியும் லில் மொழிந்தாள்.

“அதைக் கண்டு அவளை இத்தகைய சோகத்திலுட்படுத்திய ராவ ன் மேல் அடங்காக் கோபம் வந்தது. உடனே என் உடலைப் பெருக்கிப் ார் புரிய ஆத்திரங்கொண்டு அவ்வனத்தை அழித்து முறித்தேன். விகார ள அவ்வரக்கிகள் அப்பொழுது உறக்கம்விட்டொழிந்து வனம் அழிந் தக்கண்டு என்னைப் பார்த்துத் திக்பிரமை கொண்டு அரக்க அரசனிடம் என்னைப் பற்றி அறிவித்தார்கள். அவனும் சீற்றங்கொண்டு கிங்கரர் எனும் அரக்கர்களை என்னிடம் ஏவினான். அங்கிருந்த ஓர் இருப்புலக் க் கொண்டு அவர்களைப் பொடியாக்கினேன். அதன் பின்பு என்னைப் க்குமாறு மந்திரி குமாரர்களை அனுப்பினான் ராவணன். அவர்களை யமன் உடகனுப்பினேன். பின்பு ஐந்து சேனைத் தலைவர்களையும் பெரும்சேனை பும் அனுப்பினான். அவர்களுக்கு முன் சென்றவர்களிடத்திற்கே இவர் ம் சென்று விட்டதைக் கேட்டு ராவணன் தன் குமாரன் அக்ஷன் என் னை அனுப்பினான். அவனை வானில் காலைபற்றி இழுத்து அறைந்து ான்றேன். அப்பொழுது கடுஞ்சினங் கொண்டான் லங்காதிபதி. தன் ற்றொரு குமாரனான இந்திரஜித்தை ஏவினான். இவனும் என்னிடம் கடும் ார் இயற்றினான். அவன் சேனைமுழுவதும் அழிந்தது. இனி ஆயுதங்கள் ிக்கமாட்டாவென்று கண்டு என்னை பிரும்மாஸ்திரத்தால் கட்டினான். ப்பொழுது அருகிலிருந்த அரக்கர்கள் அது போதாதென்றுமற்றும் பல யிறுகளால் என்னைக் கட்டி ராவணனிடம் இழுத்துக்கொண்டு சென்றார் ள். நான் கட்டுண்டிருக்கிறதாகவே நடித்து அரக்கவரசன் முன் சென் றன். அப்போது அவன் நான் வந்த சமாசாரத்தைக் கேட்டான். ரணத்தை விளக்கி ராம ஸுக்கிரீவ சக்கியத்தைப் பற்றியும், வாலி தத்தைப் பற்றியும், ஸுக்கிரீவரின் பிரதிக்ஞையைப் பற்றியும் விரித் துரைத்தேன். ராமதூதனென்றும் லங்கையின் க்ஷேமத்தைக் குறித்தும் ாவணன் நலனைக் குறித்தும் ஜானகியை உடனே ராகவரிடம் சேர்ப்பிக் ும் படி அவனை வேண்டினேன். வானரர்களின் வலிவைபற்றியும் எடுத் துரைத்தனே். என் வசனங்களைப் பொருட்படுத்தாது, கோபாவேசங் காண்டு அவன் என்னைக் கொலை செய்யுமாறு கட்டளையிட்டான். அப் பாது உத்தமகுணங்கள் வாய்ந்த அவன் தம்பி விபீஷணர் என்பார், திரியிடமிருந்து வந்த தூதனை வதைப்பது ராஜ தருமத்திற்கும் அரசியல் திக்கும் ஒவ்வாதென்று எடுத்துக் காட்டவே, அதை அங்கீகரித்து, என்

வாலில் தீயிட்டுக் கொளுத்தி, அங்கஹீனஞ் செய்யுமாறு ஆஜ்ஞாபித்தான். உடனே அரக்கர்கள் என் வாலில் துணிப்பந்தம் சுருட்டி நெருப்பு வைத்தார்கள். அப்பட்டணத்தைப் பகலில் முழுவதும் பார்க்க எண்ணி அவர்கள் என்னை அட்டகாசத்துடன் இழுத்துச் சென்றதை நான் பொறுத்திருந்து நகரெங்கும் சுற்றினவுடன் என் கட்டுகளை முறித்து கோட்டை வாசல் மேல் தாவினேன். என் வால் சுடர் விட்டு எரிந்து கொண்டிரு ததது. அதனால் அப்பட்டணமெல்லாம்—மாளிகைகள், கோபுரங் வீடுகள்—எல்லாவற்றையும் கொளுத்தி தீக்கிரையாக்கினேன்.

''அப்பொழுது சடக்கென்று என் மனதில் பயங்கொண்டது. ஐ பட்டணம் முற்றும் சாம்பலாயிற்று! அதில் அன்னை ஜானகியும் தீக்கி யாயினளோ? ஸ்ரீராமகாரியம் வீணாயிற்றேவென்று இடிந்துபோனேன். பொழுது வானில் நகர் முற்றும் தீக்கிரையாயிற்றென்றும், ஜனகர் திரு ளான ஸீதை மாத்திரம் இவவக்கினியால் பாதிக்கப்படவில்லை யென் சாரணர்கள் சொல்லிக்கொண்டு போனதைக் கேட்டு ஆறுதலடைந்தே அது மிகவும் உண்மைதான் என்று பலகாரணங்களால் உணர்ந்து திரு யடைந்தேன். முதலில் என் வால் தீப்பற்றிகொழுந்து விட்டெரிந்தது, எ னும் எனக்கு அதனால் வேதனையொன்றுமில்லை. தவிர அது குளிர்ந் காணப்பட்டது. ஸ்ரீராகவருடைய பிரபாவமென்றும் அன்னை வைதேகி கற்புடைமையின் பலனென்றுமுணர்ந்து திருப்தியடைந்தேன். இன் தரம் தேவியை நேரில் காண எண்ணி அழிந்து போன அசோகவனத் தனியே நிற்கும் சிம்சுபா மரத்தினடியில் அன்னையையுங் கண்டு மனந் அகமகிழ்ந்து தெண்டனிட்டேன். அம்மாசிலாத் தேவியின் விடைபெ உடனே அங்குள்ள அரிஷ்டமென்ற மலையிலேறி உங்களைக்காண அ கொண்டு அவ்வுச்சியிலிருந்து திரும்பித் தாவி இங்கு வந்து உங்களைக் டேன். ஸ்ரீராகவப் பிரபாவத்தாலும் உங்களுடைய ஆசியின் பலனு ஸுக்ரீவரின் ஆக்கினை-நிறைவேறப் பெற்றது. அதற்குப் பின்பு எ நடக்க வேண்டுமோ அது உங்களுடைய ஆலோசனையிலிருப்பது'' என சொல்லி முடித்தான் வெற்றி வீரனான மாருதி!

---

## 59. மாருதியின் பக்திப் பரவசம்

ஆஞ்ஜநேயனின் விருத்தாந்தத்தைக் கவனமாகக் கேட்டார்க வானரர்கள். அவர்கள் கவனத்தைக் கண்டு மாருதி அன்னையின் கற்ப தூய்மையை வேண்டிய அளவு விவரிக்க வில்லை என்றும் தன் பிரபாவ தையே விளக்கி விட்டதாகவும் எண்ணினான். இயற்கையிலேயே எளிமை பூண்டவன், ஸ்ரீ ராகவனைத் தரிசித்தும் அவன் உலகத்தை உஜ்ஜீவக் வந்த மானிட உத்தமனென்று அவன் திறத்தில் மனம் வாக்கு காயங்க எல்லாம் அவனுக்கே அர்ப்பணஞ் செய்து அவன் பணிவிடையே தன வாழ்க்கையென்று கொண்டு மனந்தேறினன் இப்பொழுது லங்கையி அன்னை ஜானகியைக் கண்டான். உடனே வாழ்க்கை லட்சியத்தில் பு துயிர் கண்டான். ஐயனுக்கேற்ற அன்னை, அன்னைக்கேற்ற ஐயன். அ னின்றி அவளில்லை. அவளின்றி அவன் இல்லை. உயிரும், உடலு

டரும், சோதியுமாக இருவரும் மாருதியின் மனத்தில் இடம் பெற்றமர்ந் னர். இப் புத்துணர்ச்சியில் அன்னையைப் பற்றி இன்னும் உரைக்க வண்டு மென்று மனதில் பட்டதும் மேலும் சொல்லிக் கொண்டே பாகிருன்:—

"நண்பர்களே! கேளுங்கள். இவ்விதம் என் லங்கைச் செயல்கள் ந்தேறின. ஸ்ரீ ராகவரின் ஆக்ஞைக் கிணங்கியும் ஸுக்கிரீவர் முயற்சி தி பெறவும் வைதேகியின் சீலத் தன்மைக்கு ஏற்றதாயும் நிகழ்ச்சிகள் ய்ந்திருந்தன. நான் இவைகளில் வெறும் கருவியே யன்றி. இவ் வற்றிச் செயல்கள் யாவும் அவனருளால் நடந்தேறின. ஆகவே, வைகள் என் சாமர்த்தியத்தின் செயல்களென்று கொள்வதற்கில்லை. ன்னையின் பிரபாவத்தாலேயே எனக்கு இவைகள் சாத்தியமாயின வென் ரைப்பது மிகையாகாது. ராவணன் மகத்தான தவ வலிமை பூண்டவன் ான். உலகத்தை ஒழிக்க வல்லவன் தான். எனினும் அன்னையின் திண் ்பின் முன் அவன் தவ வலிமை எம்மாத்திரம்? நெருப்பில் எரியாதது வள் கற்புக் கனலால் எரிந்துபோம். எனினும் அவளைப் பிடித்து சிறை ட்டிருக்கிருன் இவ்வரக்கன். அவள் சினமடைந்தால், அக் கோபத் தீயால் வன் எரியுண்டு போக வேணடியவன். எல்லையற்ற அன்னையின் கருனை ் அவன் பிழைத்திருக்கிருன். அவளோ, நாதனையே நினைந்து ாறுத்துப் பொறுத்து அசோகவனத்தில் அமர்ந்திருக்கிருள். மேகங்கள் ைந்த சந்திரக் கலை போல் அரக்கிகளால் சூழப்பட்டு ஒளி மங்கி சோகத் ் வாடியிருக்கிருள். ராவணனைப் பொருட்படுத்தாது நாயகனை யடையும் த்தில் முனைந்திருக்கிருள். தன் முழுமனதையும் ஆத்மாவையும் உயி ும் கணவரிடத்தில் அர்ப்பணஞ் செய்தவள். இந்திரனிடத்தில் சேர்ந்த திராணி போல் ராமனையே அடையத் தவம் கிடக்கிருள். ஆகையால் ன் அவள் தன் தவமகிமையை உபயோகப் படுத்தாமையே இவ்வரக்கன் ுருப்புக்குக் காரணம். தன்னைப் பற்றியும், தன் சக்தியைப் பற்றியும், ன் மேன்மையைப் பற்றியும் நினைத்தவளில்லை அவள். அப்போது டுத்திய ஒரே ஆடையுடன் மேனி புழுதி படிய உபவாசங்கொண்டு ணவனை யடையக் கடுந்தவம் புரிகிருள். அத்தகைய அம்மையைக் ண்டு தரிசித்தேன். ஸ்ரீராம பிரபாவத்தை எடுத்துரைத்து அவளை உற்சாக ூட்டினேன். தன் நம்பிக்கையடைய பலவாறு முனைந்தேன். கடைசியில் அவள் ஒருவாறு மனந்தேறினாள். என்னுடன் உரையாடினாள். எல்லா வற்றையும் சாவதானமாய்ச் செவி சாத்தினாள். ராம ஸுக்கிரீவ சக்கியத் தில் மகிழ்ச்சியும் தைரியமுமடைந்தாள். தன் பர்த்தாவையே தன் உயி ாய்க் கொண்ட இம்மகா பதிவிரதையிடத்திலன்ரோ இக்கொடிய ராட்சதன் அபராதஞ் செய்திருக்கிருன்? ஆகவே அவள் சக்தி தர்மானுஷ்டான முடையவரான மகாத்மா ஸ்ரீராமச்சந்திரன்—அவள் பதியின்—மூலம் அவ் ரக்கனை ஒழிக்கவிருக்கிறது. இக்காரணமாகவே ஸ்ரீ ராம காரியமும் ுலனடையவிருக்கக் காத்திருக்கிறது. அன்னையை நினைக்கும்போதும் அவள் பரிதாபமான நிலையை எண்ணும்போதும் இதையிழைத்த அப்பாவி யைப் பழிக்கு பழி வாங்கத் துடிக்கிறது என் ஆவி. இதன் விஷயமாகவே நாம் மேற்கொண்டு செய்யவேண்டியதைப் பற்றி ஆலோசனை செய்ய வேண்டுமென்பது என் அபிப்பிராயம்" என்று கூறி முடித்தான் ஆஞ்ஜ நேயன்.

———

# 60. வானரப் பெரியாரின் ஆலோசனை

அன்னை ஜானகியின் பிரதாபத்தையும் அரக்கர்களின் அட்டகாச
த்தையும், ராம தூதன் அங்கு ஆற்றிய அரும்பெரும் செயல்களையும் வி
மாகக் கேட்ட வானரத் தலைவர்கள், மேலும் மேலும் உற்சாகங்கொண்
னர். இந்த விருத்தாந்தம் வாலியின் குமாரனுன அங்கதனை ஓர் தனி 
விலாசத்தில் கொண்டு சேர்த்தது.

ஹநுமான் லங்கையில் இவற்றையெல்லாம் செய்துமுடித்
னென்று ராமனிடம் சொல்வது போதாது. ஒருவன் செய்ததைக்கொண்
மற்றவர்கள் திருப்தியடைந்து தங்கள் கடமையைச் செய்யச் செயலாற்
வதும் அவசியம். நல்லது. ஹநுமான் சென்று இவைகளை முடித்தா
தானே சென்று எக்காரியங்களை சாதிக்கலாம் என்று காட்டவேண்டு
என்று தானும் மிக்க ஆற்றல் கொண்டான் அங்கதன். அவன் சொ
கிருன்.

"வானர வீரர்களே! ஹநுமான் இவ்வாறு நற்காரியத்தைச் செ
முடித்தான். அன்னையின் நிலையைப் பற்றிக் கேட்கும் போது மனம் ப
குகிறதல்லவா? ஆகையால் வைதேகியைக் விரைவிலேயே ஸ்ரீ ராக
டன் சேர்ப்பதற்குரிய முயற்சியை நாம் தீர்மானிக்க வேண்டும். அ
கேற்ப காரியத்தை உடனே கைக்கொள்வோமாக!

"நான் ஒருவனே அந்த ராவணனையும், மற்றெல்லா அரக்கர்
யும், அந்த லங்கையையும் நொடிப் பொழுதில் அழித்துவிட முடி
மேலும் உங்களைப் போன்ற பிரமுகர்களும் ஆற்றலுடையவர்களும் அஸ்
வித்தைகளை நன்கறிந்தவர்களும், வெற்றியையே காண வேண்டி செ
லாற்றுபவர்களும் என்னுடன் இருக்கிருர்களென்ருல், பலனைப் பற்றி
கேட்கவும் வேண்டுமா? போரில் அரக்கவரசன் முதல் எல்லோரைய
யுத்தத்தில் தோற்கடிக்க முடியும். அஸ்திரங்களைப் பற்றி எனக்கு அக்க
யில்லை; உங்களுடைய ஆசியையும் ஒற்றுமையையும் பெற்ற நான் இ
வரக்கர்களை ஓயாத கல்மாரி பெய்து விரைவில் மாய்த்துவிடுவேன். இதி
சந்தேகம் வேண்டாம். ஒருவேளை கடல்கரை புரண்டாலும் புரளலாம்
மந்தர மலை அசைந்தாடினும் அசையலாம். நம்மைச் சேனையாய்
கொண்ட தலைவர் ஜாம்பவந்தரை பிறர் ஜயிப்பதென்பது ஆகாத காரியம்
அரக்கர்களில் முக்கியமானவர்கள் எமனிடம் அனுப்ப ஹநுமான் ஒருவனே
போதும். செல்லும் வேகத்திலும் எல்லையற்ற கதியிலும் மலைகளையு
பொடியாக்க வல்ல பனஸன், நீலன் முதலிய தலைவர்களைப்பற்றிச் சொல்
வும் வேண்டுமா? மேலும், தேவர்களோ, அசுரர்களோ, எவர்களாயினு
மைந்தன், த்விவிதன் இவர்களுடன் யுத்தஞ் செய்து பிழைப்பார்களா
இவ்வச்வினி குமாரர்களை வெல்லுபவர்கள் எங்குளர்? மேலும் அவர்க
பிரும்ம தேவரின் அருள் பெற்றவர்கள்; அமுதம் உண்டவர்கள்; வானர
களுக்கெல்லாம் மேலானவர்கள்; எவராலும் அழிக்கப்படாத வரம் பெற்ற
வர்கள். இவ்விருவர் மாத்திரம் லங்கையை முழுவதும் தரைமட்டஞ்
செய்யப் போதுமே! ஆகையால், வானர வீரர்களே! இத்தகைய வல்
வர்கள் அடங்கிய நாம் ஸீதையை அழைத்துப் போகாது ராமனிட

தனியே செல்லுதல் தகுந்ததாகுமோ ? தேவி காணப்பட்டாள், ஆனால் அழைத்துவரப்படவில்லை'' என்று நம் போன்ற சூரர்கள் அத் தனிப்பெரும் நரர் முன் உரைப்பது நமக்குத் தகுதியாகுமோ ?

அன்பர்களே ! வானரர்கள் செல்லாத விட மென்று எங்குண்டு ? யார் நம்மைத் தடுப்பவர்? ஆகவே, இப்போதே லங்கை செல்வோம்; ஹநுமானால் விடப்பட்ட எஞ்சியிருக்கும் அரக்கர்களை மாய்த்து அன்னையை அழைத்துக் கொண்டு வருவோம்'' என்றான்.

ஆலோசனையில் நிபுணரான ஜாம்பவான் அங்கதனது வீரமொழியைக் கேட்டு பரம உற்சாக மடைந்து அவனை நோக்கி ''ராஜ புத்திரா ! நீர் என்ன குறிப்பிடுகிறீரோ அதை நாம் செய்து முடிப்பது அசாத்திய மென்பதல்ல எனினும் இவ்விஷயமாய் நம்மை அனுப்பிவைத்த ஸ்ரீ ராகவருடைய ஆலோசனையும் அபிப்ராயமும் அங்கீகாரமும் என்னவென்பதை நாம் அறிய வேண்டாமா?'' என்று சாவதானமாக உரைத்து ராமனிடம் அவர்கள் கவனத்தை இழுத்தான்,

---

## 61. மது வனத்தில் குதூகலம்

ஜாம்பவான் மொழிந்த மதியுரைகளைக் கேட்ட வானர வீரர் 'ஆம் அவன்படி நடப்பதே ஏற்றதாகும் என்று உணர்ந்து அவன் சொற்படி ராம லட்சுமணர்களைக் கண்டு 'ஸீதையைக் கண்டோம்' என்று மொழிந்து, பின்பு அவர்கள் ஆலோசனைப் படி செய்யலாம் என்று தீர் மானித்து அவ்விடத்தை விட்டு விரைந்து சென்றனர், எல்லோரும் ராம கைங்கர்யத்தில் ஈடுபட ஆற்றல்கொண்டனர். ஹநுமானுடைய வீரச் செயல்கள் எல்லாம் வானரர்களையும் செயலிலிறங்கத் தூண்டின.

நொடிப் பொழுதில் மகேந்திர மலையை விட்டு நேரே விரைந்து பறந்து கிழக்கு நோக்கிப் பாய்ந்தனர். ஒருவர்க்கொருவர் மேலெழுந்து பொங்கி வரும் உற்சாகத்தில் போட்டியிட்டு அதிவிரைவில் கிஷ்கிந்தை அணுகினர்.

அந்நகரத்தின் எல்லையிலுள்ளது மனத்தை வசீகரிக்கும் மதுவனம். அது யாவராலும் உட்புக முடியாது அமையப் பெற்றது. நன்கு பரிபாலிக்கப்பட்ட ஸுக்கிரீவனின் மதுவனமது. ஸுக்கிரீவனின் மாமனாகிய ததிமுகன் என்பான் இமை கண்ணைக் காப்பதுபோல் இடைவிடாது அதைக் காத்துவந்தான். அவ்வனத்தைக் கண்டதும் திரும்பிவரும் வானரர்களின் வேகம் அதனிடம் சற்றுத் தடைபட்டது. மனத்தில் பூரித்து வரும் உற்சாகம் இம்மதுவனத்தைக் கண்ணுற்றதும் அவர்கள் நாக்கில் நீர் ஊறிற்று. ஒருவர்க்கொருவர் ஜாடையிட்டு எல்லோரும் ஏதோ எதிர் பார்க்கும் முறையில் தலைவர்களைப் பார்த்து நின்றனர். அம் மதுவனத்தி லுள்ள தேனைப் பருக எண்ணி அதற்காகத் தலைவர்களை யாசிக்கும் வண்ணம் பார்த்து நின்றனர், இவர்களுக்குத் தலைமை வகித்த அங்கதன்

அவர்கள் எண்ணத்தைக் கவனித்து மதுவனம் புகுந்து தேனைக் குடித்து திருப்தியடையலாமென்று அநுமதித்தான். அவ்வளவுதான். ஏற்கனவே உற்சாகத்திலிருந்த அவ்வானரர்கள் இவ்வாறு அனுமதிக்கப்பட்டவுடன் அளவற்ற ஆநந்த மடைந்தனர். சிலர் ஆடினர், பாடினர், துள்ளிக் குதித்தனர், இங்குமங்கும் ஓடித் தாவினர். எல்லோரும் ஒவென்று கோஷமிட்டுக் கொண்டே மதுவனத்தில் புகுந்தனர். மது உண்டனர். அவர்கள் பேரானந்தம் பொங்கி எழுந்து பரவிற்று ! என்ன குதூகலம் ! மரம்விட் மரம் தாவியும், தாண்டியும், பாய்ந்தும், துள்ளி எழுந்தும் கிளைகளை பிடித்து ஊஞ்சலாடியும் மெய் மறந்து இன்புற்றனர். அவர்களுள் க புருதவன் எவனுமில்லை. வனம் அழிந்து, மது மறைந்தது. காப்பாள ததிமுகன் வாளாவிருப்பனே ? வீறுகொண்டு அவர்களை எதிர்க்கலானா ஆனால் பயமின்றி மதுவுண்டவர்களிடம் இவன் வீராவேசம் பலிக்கவில்லை அவர்களின் அடியும் உதையும் பெற்றான்.

---

## 62. ததிமுகன் ஸுக்கிரீவனிடம் செல்லுதல்

ததிமுகன் மீண்டும் தன் ஆட்களுடன் இப்படி எதேச்சைய மதுவைக் குடிக்கும் வானரர்களைத் தடுக்க முனைந்தான். அதைக் கண் அவர்கள் எல்லோரும் ஹநுமானைச் சரணமடைந்தனர். அவனும் அ களைப் பார்த்து, ''வானரர்களே ! உங்களுக்குக் கவலை வேண்டா உங்களைத் தடுக்கும் இவர்களை நான் என்ன செய்கிறேன் பாருங்கள் என்று உறுதி கூறினான். இதற்கு அங்கதனும் இசைந்தான். ''ஆ மதுவை மனமாரக் குடியுங்கள், ஹநுமானே உங்களுக்கு அநுமதியளி விட்ட பின்பு நான் அதைத் தடுப்பேனோ ?'' என்றதும் 'சபாஷ்' எங் அரசனே அரசன், என்று அவனைப் புகழ்ந்து திரும்பவும் வனத்தினு புகுந்தனர், தேவியைக் கண்டுவிட்ட களிப்பு, காரியத்தை முடித்துக்காட்டி வெற்றி உணர்ச்சி ! ஹநுமானின் அநுமதியைப் பெற்றவுடன் அவர்கள் ஆனந்தத்திற்கு எல்லையேயில்லை. மேன்மேலும் சலிக்காது தேனை உண்டனர். பழங்களைப் பற்றி இழுத்துப் பறித்து ரசத்தை உறிஞ்சினர் ! அவர்களைத் தடுக்க வந்தவர்களை நையப் புடைத்தனர்.

மது உண்டு உன்மத்தர்களாய்க் கூத்தாடிக் கொம்மாளமடித்தனர். ததிமுகன் காவலர்கள் இப்படி மதுவனம் ஆக்கிரமிக்கப்பட்டதையும் எதையுங் கவனியாது எல்லா வானரர்களும் மது குடித்துக் காவலர்களை அசட்டை செய்ததையும் ததிமுகனிடம் முறையிட்டார்கள். உடனே ததிமுகன் ஒரு பெரிய மரத்தைப் பிடுங்கிக் கொண்டு காவலாளர்களுடன் வானரர்களை விரட்டியடிக்க விரைந்தோடி வந்தான். மற்றவர்கள் கற்களாலும் மட்டைகளாலும் உற்சாகத்துடன் களியாட்டத்திலிருந்து வானரர்களைத் தாக்கினார்கள். இதைக் கண்ட ஹநுமானும் அங்கதனும் அவனை எதிர்த்து வந்தனர். அங்கதன் கவனிக்கிறான். ததிமுகன் மிகச் சினங்கொண்டிருக்கிறான். விபரீதம் விளைவதற்குள் இவனைத் தடுக்க வேண்டுமென்று நினைத்து அதிவேகமாய் வானரர்களைத் தகைக்கும் ததிமுகனை அறைந்தான், அவனும் அவ்வடி தாங்காது தரையில் சாய்ந்தான். பின்பு எழுந்து, ''நான் அரசனுக்கு மாமன் மரியாதை செய்யப்பட வேண்டிய

வன். வனமோ மிகவும் அபூர்வமான மதுவனம், அரசனுல் பிரத்தியேகமான பாதுகாப்பிலிருப்பது. ஒன்றையும் கவனியாது மது உண்டு விளையாடுகிருர்கள் இவர்கள். என்னையே இவர்கள் தலைவன் அங்கதன் அடித்துக் கீழே தள்ளினுன். சரி! இவர்களிடம் நாம் ஏன் சண்டையிட வேண்டும்? எவ்விடம் ஸ்ரீராகவருடன் நம் எஜமானரான ஸுக்கிரீவர் இருக்கின்ருரோ அங்கு போய் நடந்ததைச் சொல்வோம். எல்லோருடைய குற்றத்தைக் காட்டிலும் அங்கதன் அதிகமாக அரசனிடத்தில் அபராதஞ் செய்தவன் என்று காட்டுவோம். அவரும் அவனைத் தகுந்தபடி தண்டிப்பார். தேவர்களும் அடைய முடியாத தலைமுறை தலைமுறையாய் வளர்த்து போஷித்து வரப்பட்ட, திவ்வியமான இந்த மதுவனம் ஸுக்கிரீவருக்கு மிகவும் அருமையானது. அவருடையபெருஞ் செல்வமாயிருப்பது; இதை நாசஞ் செய்தார்களென்று கேட்டால் அரசர் வாளாவிருப்பரா? இதோ இவர்களை வதைக்கப் போகிருர்'' என்று தன்னுடனிருந்தவர்களுடன் சட்டென்று வெளிக்கிளம்பினுன். வெளிக் கிளம்பிச் ஸுக்கிரீவனிருக்குமிடத்தை அடைந்தான். அவர் ஸ்ரீராகவர் லட்சுமணர்களுடனிருந்தார். உடனே வானிலிருந்து கீழிறங்கி ததிமுகன் தீனமுகனுய்க் கைகூப்பி ஏதோ பெரும் ஆபத்து கிட்டியவன் போல் ஸுக்கிரீவரிடம் தாவி அவன் பாதங்களைப் பற்றி சரணடைந்து பணிந்தான்.

---

## 63. செய்தி அறிவிக்கும் சிறப்பு !

[''லங்கையில் தேவியைக் கண்டோம்; தரிசித்தோம், அவளுக்கு ஒரு குறையுமில்லை. தனது தவத்தின் தூய்மையில் துலங்குகிருள். கவலை வேண்டாம். அரக்கர்களைப் போரில் மாய்த்து அன்னையை உடனே மீட்க வேண்டும்'' என்ற நற்செய்தியை ஸ்ரீ ராம லட்சுமண ஸுக்கிரீவர்கள் அறியவேண்டும். இதற்குச் சிறந்த முறை என்ன? அதியாச்சரியமான உயர்ந்த ஒரு முறை இங்கு கையாளப்படுகிறது. வேண்டுமென்று செய்த தல்ல; யோசனையின் பேரிலும் செய்ததல்ல; இயற்கையாக அத் தலைசிறந்த முறை அமையப் பெறுகிறது. ஆயிரமாயிரமாண்டுகள் முன் கவிதையின் முக்கிய அம்சமான தொடர்ந்த போக்கு என்பதை எத்தகைய நூதனமான பிரமிக்க வைக்கும் நுண்ணிய முறைகளில் மூலகவி கையாண்டிருக்கிருர்? ஸ்ரீ ராமாயணத்தில் இந்த அம்சம் எப்படிப் பரிணமித்து விளங்கு கிறது என்பதே இச் சுந்தர காண்டத்து மென்மையை விளக்குகிறது! அன்றியும் எத்தகைய தூதன் அமைப்பு நம் கவனத்தைப் பற்றி இழுத்து கண்ணில் ஆனந்தக் கண்ணீரைக் கொண்டுவிடுகிறது.! இவ்வபூர்வ சூழ் நிலையைக் கவனிக்க வேண்டும். மனைவியை விட்டுப் பிரிந்து பத்துமாதங் களாயின. அவளைப் பற்றி ஒரு தகவலையும் காணும். மூன்று திசையிலிருந்து வந்த வானர வீரர் யாவரும் அன்னையைக் காணுமென்று கை விரித்து விட்டார்கள். இன்னும் ஒரு திசையிலிருந்து மாத்திரம் அனுப்பித் தவைத்தவர்கள் வந்து சேரவில்லை. தவணையும் கடந்தாய் விட்டது. கணவன் மனம்பட்டபாடு கடவுளுக்குத்தான் தெரியும். வெளியில் காட்டவும் வாய்விட்டு அரற்றவும் இடமிலலை, மனம் குமுறுகிறது. வேதனையில் கிடந்து தவிக்கும் நிலையை விவரிக்க முடியாது என்ன செய்வதென்று

தெரியவில்லை, தினமும் 'தென்திசையில் போனவர்கள் திரும்புவார்களா? நல்ல சமாசாரம் கொண்டு வருவார்களா?' என்று எதிர் பார்த்துக் காத்து நின்று நின்று மனம் சோர்வடைகிறது. இது ஒரு புறம்.

மற்றொருபுறம், அன்னையைக்கண்டு தரிசித்தாய் விட்டது. தூயமன முடையவளாய் அவள் கணவனை அடையும் தவத்திலிருக்கிறாள். அரக்கன் ராஜ்யத்தை பற்றியும் சேனை அமைப்பு முதலியவற்றைப் பற்றியும் செய்தி அறிந்தாய் விட்டது. விரைவில் ராகவன் வந்துமீட்டுக் கொண்டு போக காத்திருக்கிறாள். என்ற எல்லா விவரத்தையும் ஸுக்கிரீவன் முதலியோ அறிய வேண்டும். எப்படி? நேரில் தூதன் வந்து தெரிவிப்பது ஒரு முறை ஆனால் அது சாதாரண முறை. ஸுந்தர முறையாகுமோ? அன்னை உயிருட னிருக்கிறாள் என்று செய்தி அனுப்புவது சாதாரணமுறை. அன்னை தூயவ ளாய் நின்று கணவன் வரவுக்குக் காத்திருக்கிறாளென்று தெரியப் படுத்து வதற்கோ என்னவோ, அந்த மதுவனத்தை மேற்பார்வையிடும் முதல் உத்தியோகஸ்தனை—ததிமுகனே செல்லவேண்டும். சென்று சாதாரண முறையில், தென் திசையில் அனுப்பப் பட்டவர்கள் திரும்பி வந்திருக்கிறார் கள், அன்னை சௌக்கியமென்று உரைத்தால் அது ஸுந்தரமுறையாகாது. அவன் அதைச் சொல்லாமலே அவன் யாரிடத்தில் செல்கிறானோ அவன் அதனை நன்கு அறிந்துகொள்ளவேண்டும். தெற்கு திசை போனவர்கள் திரும்பி வந்து மதுவனம் புகுந்து மதுவைக் குடிக்கிறார்களென்றால் கேட்ட வர்கள் "ஓகோ! இவர்கள் போன காரியம் ஜயமாய் முடிந்தது; ஆகையா தான் மதுவைக் குடிக்கிறார்கள்" என்று நினைக்கலாம். அது நினைத்தா போதாது. அதுவும் ஸுந்தர முறையாகாது. அன்னைக்குப் பழுதில்லை என்று அவர்கள் அறிதல் வேண்டும். இதற்காகத்தான் ததிமுகனையு அவனைச் சேர்ந்த காவலாளர்களையும் அடித்துதைத்து அவமான மிழை தனர் போலும்! ததிமுகனோ, அரசனின் நெருங்கிய உறவினன். அத்தன யோனை அவமதித்து விரட்டி யடித்தது பெருங்குற்றமென்று அறியாதவ களா அவர்கள்? அதற்குத் தண்டனையையும் அறியாதவர்களா? எனினும் அதை பொருட்படுத்தவில்லை. ஏன்? அரசன் தண்டிக்க மாட்டான் என்ற திடநம்பிக்கையே அதற்குக் காரணம். அந் தம்பிக்கை உதிப்பதற்கு யாது காரணம்? அன்னை கற்பெனும் காப்பில் பரிசுத்தமாய் இருக்கிறாள் என்ற ஒரு செய்தி அறிந்தால் தான் பரிபூரணக் களிப்படைவார்கள். அப் பரிபூரணக் களிப்பில் தண்டனையென்ற எண்ணம் தோன்றாது. வந்த வான ரர்கள் எதையும் கவனியாது இவ்வளவு முழு ஆனந்தத்திலிருக்கிறார்கள். அன்னையைக் கண்டிருக்கலாம்; ஆனால் ஏதாவது ஆபத்திலிருந்தால் மது உண்டு அரசன் மாமனை ஏளனஞ்செய்து துரத்தியடித்து விட்டு மதுவனந் திலேயே தங்கி நின்று விடுவார்களா? அவர்கள் களிப்பில் கலப் பொன்று மில்லை. ஆகையால் வைதேகியைக் கண்டது மாத்திர மில்லை, களங்க மற்ற கற்பு நிலை மாசறாது காட்சி கண்டிருக்கிறார்கள் என்று அரசன் முதலியோர் அறிய வேண்டு மல்லவா? இதை ஊகமாய் அறிய வேண்டும். அதுவே ஆத்ம திருப்தி யளிக்கும் மேன்மையான செய்தி சொல்லும் முறை, அவர்கள் கொண்டிருக்கும் கவலை உண்மையாய் ஒழியும் ஸுந்தரமுறை. மன திற்கெட்டா அரும் பெரும் கவி இலக்கணத்தின் ஒப்புற்ற மாண்பும் மகிமை யும் பெருமையும் இங்கு மிளிர்கிறது.

[இவ்வெண்ணங்கள் எழுந்ததோ என்னவோ மாத்திரையற்ற மேதா ியான ஜாம்பவான் உட்பட எவரும் ததிமுகனுக்கும் அவன் வேலையாட் நக்கும் தாங்கள் ஏன் இப்படி செய்கிறார்கள் என்று சமாசாரமே சொல்ல ல்லை. உன்னதமான உள்ளக் களிப்பு அவர்களை உந்தியது. மதுவுண்டு ளியாட்டஞ் செய்தனர். ததிமுகனையும் அவனைச் சார்ந்தவரையும் தகைத் 'த் துரத்திவிட்டனர். ததிமுகனும் அவன் ஆட்களும் ஸ்ரீ ராமாயண மன்ற தூய்மை வீசும் ரதத்தின் தேர் வடத்தைப் பிடித்து, காத்து நிற்கும் ாம லட்சுமணர்களண்டை இழுத்துச் கொண்டு வந்து முன்னிட்டனர். இவ்விடத்துக்கவிதையின் ஸுந்தர அமைப்பு ஒன்றே இச்சுந்தர காண்டத் தைப் பசும் பொன்னால் வார்த்தெடுத்து மெருகூட்டுகிறதென்பது மிகை பாகாது. இரத்தினம் போன்ற இக் கருத்துக்களை நன்றாய் எடுத்துக் காட் டுகிறான் ஸுக்கிரீவன், பின்னர் ராம லட்சுமணர்கள் இந் நிகழ்ச்சியைக் கேட்டறிந்து ரகுநாதனின் மனம் ஆறுதல் அடைகிறது. பின்பு பண்படை கிறது. அப்போது ஹநுமானும் வந்து தாழப் பணிந்து அன்னை இருக்கும் திக்கு நோக்கித் தண்டனிட்டு "அன்னையைக் கண்டேன், குறையாக் குண வதியாய்த் தூய்மையில் துலங்குகிறாள்" என்ற செய்தி அவன் மனத்தில் தேனும் பாலும் கலந்து அமுது பாய்ந்து இனிதூட்டி, அவன் காதில் என் றும் கேட்டிராத தெவிட்டா வீணாகானமாய் ஒலிக்கிறது! ஒப்பற்ற கவிதை யின் ஸுந்தரத் தன்மையும் பூர்த்தியாகிப் பரிணமித்து வெள்ளோட்டம் 'காண்டு கவனத்தை இழுத்துக் கொண்டு செல்கிறது. இச் சொல்லொணு ப்பும் இச் சுந்தர காண்டத்திற்கே என்று நம் தலை அசைகிறது. இல் ா வென்றும் மற்றவரையும் கேட்க ஆசை கொள்கின்றது].

தலை சாய்ந்து தாள் பிடித்துத் தரையில் கிடக்கிறான் ததிமுகன். ரென்று இவன் வந்து விழுந்ததும், தொழில்களில் வேறு கவனத் ச்செலுத்தியிருந்த ஸுக்கிரீவன் முதலியோர் இதைக் கண்டுபிரமித்துப் பாயினர். என்ன இது? மதுவனத்தை பரிபாலிக்கும் அரசனின் மாமனே நேரில் வந்து விழுந்து அபயம் வேண்டுகிறான். என்ன ஆபத்து இவ னுக்கு? என்று கவலைகொண்டு ததிமுகனைப் பார்த்து பேசவாரம்பித்தான். "ததிமுகரே! எழுந்திரும், எழுந்திரும். வீரரே ஏன் நீர் இப்படி தலை குனிந்தீர்? உமக்கு என்ன அபாயம் நேர்ந்தது? பயமின்றிச் சொல்லும் அபயம்" என்றான் ஸுக்கிரீவன்.

உடனே ததிமுகன் பயந்தெளிந்தவனாய் "அரசே! உங்கள் மூதாதையரிடமிருந்து இணையற்ற, வரப் பிரசாதமாய் பெறப்பட்டது உத்தமமான மதுவனம். இது வரை தேவர்கள், மனிதர்கள், மிருகங்கள், ஏன், வாலி உட்பட, எவரும் அதில் உட்புகுந்தது கிடையாது. இப் பொழுது அது உருக்குலைந்து போயிற்று! நீங்கள் தெற்கு திசை விடுத்த வானரர்கள் இப்பொழுது திரும்பி விட்டார்கள். இதுவே அதன் அழிவிற்கு காரணம்.

"ஹா! திரும்பி விட்டார்களா?"

"ஆம்; திரும்பினது மாத்திரமல்ல. அவர்கள் மதுவனத்தில் புகுந்து விட்டனர். புகுந்து மதுவெல்லாம் உண்டுவிட்டதுமன்றி காவல்காரர்களை யும், ஏன், என்னையுங்கூட அடித்துத் துரத்திவிட்டனர். சாதாரண வான

ரர்கள் மாத்திரமல்ல. அங்கதன் முதலிய தலைவர்களே இதில் அநுமதித்த வர்களாய்க் களிப்புற்றுக் காண்கிறார்கள். மற்றவர்களோ! அப்பா! அவ கள் களியாட்டத்தை என்னென்றுரைப்பது! எல்லோருக்கும் நாதன் உம்முடைய அபூர்வச் செல்வம் அம்மதுவனம். அரும் பெரும் அழியாத அம்மது. அது யாவும் அறவே அழிந்தது. நாங்களும் புடைக்கப்ப டோம்; ஆகையால் அவர்களைத் தகுந்தபடி—''

இதற்குள் இவ் விருத்தாந்தத்தைக் கேட்டுக் கொண்டிருந்த லட் மணன் குறுக்கிட்டான்.

''என்ன இது, ஸுக்கிரீவா? ஏன் இவன் முறையிடுகிறான் இவனுக்கு என்ன நேர்ந்தது? வருந்துகிறானே என்ன காரணம்—''?

''ஆர்ய! லட்சுமணா! அங்கதன் முதலிய (தென் திசை சென்ற வானர வீரர்கள் திரும்பி வந்து விட்டார்கள், வழியில் மதுவனத்தை கண்டு அதினுட் புகுந்து தேனையெல்லாம் உண்டுகளித்துவிட்டு பெரும உற்சாகத்திலிருக்கிறார்கள் என்று தெரிவிக்கிறான் இவன். அப்பனே வானரர்கள் மதுவனமடைந்தார்கள் என்றதால் அவர்கள் கைக்கொண்ட காரியத்தைச் சாதித்து விட்டார்கள்! ஹநுமான் தேவியைக் கண்டு வி டான். இதில் சந்தேகமில்லை. வேறு எவராலும் முடியாத காரியம் இது எடுத்த காரியத்தை வெற்றியுடன் முடிப்பது, முடிப்பதில் மதியுட மதியைச் செயலில் காட்டுவது, அதை நிறைவேற்றும் திடமும் வாதமும் பராக்கிரமும் கொள்வது, இவையாவும் ஹநுமானுடைய கு கள். தவிர, எந்த இயக்கம் அங்கதனைத் தலைவனாகவும், ஜாம்பவ ஆலோசனையாளனாகவும், ஹநுமானைச் செயலாளனாகவும்கொண்டு இ கிறதோ, அது வெற்றி பெறுதிருக்க முடியாதென்பது பிரத்தியட்சம்.''

ஸுக்கிரீவன் இன்னும் சொல்கிறான். ''ஐயனே! நன்கு கவனிக்க வேண்டும். அருமையான மதுவனம் அழிந்தால் அதைப் பிழையாகக் கரு தப்படாதென்று உறுதி கொண்டிருக்கிறார்கள். அப்படியானால், இது எவ் வளவுக்கெவ்வளவு பிழையாகாதோ அவ்வளவுக்கவ்வளவு அவர்கள் செய்து முடித்த காரியம் சிறந்த தன்மையிலிருக்க வேண்டும். தேவி கண்டுபிடிக் கப்பட்டாள் என்ற ஒரு வெறும் நிகழ்ச்சி மாத்திரம் தனியாக இவ்வளவு சிறந்த தன்மை பெற்றிருக்க முடியாது. தேவிக்கு யாதொரு குறைவுமில்லை அவள் தேக அசௌக்கியமோ மனக்குறையோ கீர்த்திக் குறைவோ, தூய் மைக் குறைவோ, எக் குறைவுமின்றியிருத்தலாலல்லவா இவர்கள் இத் தகைய பரிபூர்ண ஆனந்தங்கொண்டு, மது குடித்தாலும், வனமழிந்தாலும், ஒன்றையும் பொருட்படுத்தாது உள்ளக்களிப்புற்றுக் கவலையற்றுக் களி நடம் புரிந்து மகிழ்ந்து கொண்டிருக்கிறார்கள்! இல்லையேல், இம்மதிவல் லோர்களா வனம் புகுவார்கள்? மது உண்பார்கள்? வனமழிப்பார்கள்? இது தான் உண்மையான கருத்து. அளவிடற்கரிய மதுரமான இன்பச்செய் தியை இவ்வண்ணம் நமக்கு விளங்கச் செய்யும் மேலான இலட்சியத்தைக் கொண்டு வந்தவனே இத்ததிமுகன். இம்முறையில் உண்மையை நமக் குணர்த்தவே அம்மேதாவிகள் இச்செயலை இழைத்திருக்கிறார்கள்! மகா பாகுவே! சுமித்திரைச் செல்வனே! உண்மையை யோசிக்க வேண்டு கிறேன். அனாவசியமாய் வனமழிக்கமாட்டார்கள், கவிச்சிரேஷ்டர்கள்,

சிறந்தகாரணமின்றி மதுவை அரசர்களுக்கே உரித்தான பானத்தைத் தாங்களே பருகமாட்டார்கள். அனுமதியின்றி படை வீரரான ததி முகனையே அவமதித்துத் துரத்திவிட இசையார்கள். அபூர்வமான மிக்க ...பரிய காரணங்களின்றி இத்தகைய சம்பவத்தை இழைக்கத் துணியார் ...ர். இவ்வுயர்ந்த காரணத்தை நாம் இந் நிகழ்ச்சியின் மூலம் கண்டறிய ...ண்டுமென்பதே அவர்கள் கருத்து போலும்!'' என்று கருத்தை உணர்த் ...கொண்டே போகிறுன் வானரர் கோமான்.

இதை லட்சுமணனுடனிருந்த ராமச்சந்திரனும் கேட்கிறுன். கேட் ...கேட்கத் தெவிட்டாத இன்னிசைவிருந்தாக அச்சொற்கள் செவியில் ...ழகின்றன: பாலைவனமாய்ப் பற்றியெரிந்து தகித்து, உயிரினுமினிய ...ன்சொலாளான உத்தம மனைவியைப்பிரிந்து, தனியே தவிக்கும் கட்டாந் ...ரயான அவன் மனம் நீர்ச்சுனையையும் சோலை நிழலையும், காண்கின்றது! ...துண்டு ஆறுதல் காண்கிறது அவன் ஆத்மா. உடனே அவன் ...ற்றம் மிகவும் ரம்மியமாக மிளிர்ந்தது, பார்ப்போரை மகிழவைத்தது.

இதைக் கண்ணுறுகிறுன் ஸுக்கிரீவன்! ''நல்லது! ததிமுகரே! ...மழியட்டும், மதுவை வேண்டிய மட்டும் உண்ணட்டும், களிபுரியட்டும். ...க்குத் திருப்திதான். ஸ்ரீராமரும் நானும் அவ்வானரர்களை இங்கு எதிர் ...ப்பதாகச் சொல்லும்'' என்று அவர்களை உடனே இங்கு அனுப்பும்படி ...ண்டினுன் ஸுக்கிரீவன்!

---

## 64. வானர வீரர்களின் வெற்றி வருகை!

மகாராஜரின் வசனங்களைக் கேட்ட ததிமுகன் பிரமிப்படைந்தான். '...வனமழிந்தும் மது ஒழிந்தும் வாளாவிருக்கிறுனே இவன்! ஆமோதித்த ...ன் போல் அகமகிழ்ந்து அவ்வானரர்களை ராமனிடம் உடனே அனுப்பச் ...சால்கிறுனே! ஆகையால் வானரர்கள் காரியத்தை இனிது முடித்து வந் திருக்கிறுர்கள் என்று உணர்ந்து, தானும் அபராதஞ் செய்துவிட்டோமே'' என்று பயந்து, ராமலட்சுமணர்களைப் பணிவுடன் பணிந்தான், பின்பு தன் ஆட்களுடன் மதுவனம் நோக்கி உயரக் கிளம்பி விரைந்தான்.

வனம் புகுந்து மதுவுண்டு மகிழ்ந்திருக்கும் வானரவீரர்களிடையில் அங்கதனைக் கண்டு அஞ்சலி செய்தான் ததிமுகன். பின்பு தாழ்மையுடன் ''சௌம்யனே! யுவ ராஜவாகிய நீ இவ்வனத்திற்கு எஜமானன். இதை யறியாது நான் முன்பு உனக்குக் கோபத்தை விளைவித்தேன். தப்பிதஞ் செய்தேன். அதைப் பொறுத்தருள வேண்டும். சிறந்த குணங்கள் நிறைந் தவனே! நீங்கள் இவ்வனமடைந்த விஷயத்தைச் ஸுக்கிரீவனுக்குத் தெரியப்படுத்தினேம். நீங்கள் திரும்பி வந்ததைக் கேட்டு அவர் மிகக் களிப்படைந்தார். வனமழிந்ததைப் பற்றியும் நீங்கள் மது உண்டதைப் பற்றியும் அவர் பொருட்படுத்தவில்லை. உங்களைப் பற்றிக் கேட்கக் கேட்கக் மேன்மேலும் ஆனந்தங் கொண்டவராய் உங்களைத் தம்மிடம் சீக்கிரம் அனுப்பிவைக்கும்படி சொல்லி அனுப்பினுர்'' என்றுன்.

இதைக் கேட்ட அங்கதன், தன்னுடனிருக்கும், வானரத் தலைவர் களை நோக்கி "நண்பர்களே நாம் திரும்பி விட்டோம் என்பதை இப் பொழுது ஸ்ரீ ராமலட்சுமணர்கள் அறிந்துவிட்டார்கள் என்பது நிச்சயம் ஆகையால் இனி இங்குத் தாமதிப்பதற்கில்லை. அன்பர்களே! வேண்ட வரையில் தடையின்றி மது உண்டு களைப்பாறினீர்களென்று எண் கிறேன். நம் தலைவர் நமக்காகக் காத்திருக்கிறார்கள். அவரை உட நாம் அடைய வேண்டும். அறிஞர்கள் நீங்கள். எல்லோரும் யோசி என்ன முடிவு செய்கிறீர்களோ அதை நிறைவேற்றக் கடமைப்பட்ட நான். ஸ்ரீ ராம காரியத்தையும் ஸுக்கிரீவர் ஆக்ஞையையும் குறைவ நிறைவேற்றும் அபிப்பிராயமே எனதாகும். கட்டளையிட வேண் இளவரசனல்ல நான். உங்கள் இஷ்டம் போல் நடக்கக் காத்திருப்பவ நான்" என்றான். இத்தகைய கௌரமான பேருரையைக் கேட்ட வான கள் அடங்கா மகிழ்ச்சியடைந்து "ஐயனே! இளவரசே! எங்கள் யுவரா எந்த எஜமானன் தங்கள் வேலையாட்களைக் கௌரவ மொழிகளால் இப் உணர்த்துவான்? செல்வச் செருக்கிலும், பதவித் திமிரிலும் "எல்ல நானே" என்றல்லவோ செருக்கடைந்து சீறிவிழுவான். ஆகவே தகைய வார்த்தை உங்களுக்கே ஏற்றதாகும். இது உங்கள் பெருமை யும் வரவிருக்கும் பாக்கியத்தையும் நன்கு சூசிக்கின்றது. நம் அரச அவசரமாக அடைவது இப்பொழுது அத்தியாவசியம். உங்கள் உத் வையே காத்திருக்கிறோம். உங்கள் அநுமதியின்றி எதையும் செ விரும்பினவர்களல்ல நாங்கள்; ஆகையால் நீங்கள் உத்தரவிட்டீர்களா இதோ நம்மிறைவனிடம் விரைந்து செல்வோம்" என்றார்கள். அங்கதன் "நல்லது நாம் ஸுக்கிரீவரிடம் செல்வோம்" என்றதும் எல்லோ நொடிப் பொழுதில் மதுவனத்தைவிட்டு ஆகாயத்தில் கிளம்பிவிட்டார்க காரியஞ் சித்தி பெற்றதால் புதுசக்தியும் உற்சாகமும் பெற்று வாயு வேக தில் கம்பீரமாக முழக்கமிட்டு விரைந்து சென்றனர்.

வானில் ஒலிக்கும் கம்பீரமான கோஷத்தை வெகு தூரத்திலிருந்து கேட்ட ஸுக்கிரீவன், அருகில் நின்ற ராகவனைக் கண்ணுறுகிறான் சோகத்தில் வாடிவதங்கிய முகபாவம் அவன் மனநிலையை பிரதி பலித்துக் காட்டியது. உடனே அவன் ராமனைப் பார்த்து "ஐயனே! ரகுவீரா! மனந் தேறும்! உமக்கு மங்களமுண்டு! தேவிகாணப்பட்டாள், சந்தேகமில்லை. சற்றுக் கவனிக்க வேண்டுகின்றேன். தவனை கடந்தபின் இவர்கள் இப்படித் திரும்பி வர தைரியங் கொள்வார்களா? காரியம் கைகூடா விட்டால் அங்கதன் திரும்புபவனல்லன். தலைமுறை தலைமுறையாப் பெருந்தனம் போல் போற்றப்பட்டு, முன்னோர்களால் கண்ணிமைபோல் காக்கப்பட்டு வந்த இந்த மது வனத்தை இப்படி அழித்து விடத்துணியார்கள். கோசலை யின் கோமளச் செல்வனே! ராம! நன்னடத்தை விரதம் பூண்டவனே! மனந்தேறுவீராக! ஹநுமானால் தேவி காணப்பட்டாள். இதில் சிறிதளவும் சந்தேகமில்லை. மதிவாணனே! ஹநுமான் எடுத்த காரியத்தைச் செய்து முடித்தே தீர்ப்பவன். அவனிடத்தில் தான் வெற்றி பெறும் சக்தியும், மதியும், ஆற்றலும் ஆணவமும், கதிரவனை ஒளி பற்றியிருப்பதுபோல் பற்றி இருக்கின்றன. அதுவும் அங்கதனையும் ஜாம்பவானையும் தலைவர்க ளாய் கொண்ட இயக்கம் வெற்றி காணுதிருக்க முடியாது. ஆகையால் உண்மை வீரரே! கவலையை ஒழியும்" என்று உறுதி கூறினான்.

அதே சமயத்தில் வானில் பறந்துவந்த முழக்க ஒலி ஓங்கிவளர்ந்து கிட்ட நெருங்கிற்று. இதைக் கண்ட ஸுக்கிரீவனது மனம் மலர்ந்தது; ஆற்றல் பெருகிற்று; உள்ளக் களிப்பு கரை புரண்டது. உடனே வானில் விரைந்து வந்தார்கள் வானரர்கள்.

உற்சாக உச்சியில் அனைவரும் ராகவர் முன் குதித்தனர். ஹநுமா ரகுவீரனுக்கும் முடி தாழ்த்தி அன்புப் பெருக்கில் அடிபணிந்து கண் ன் அன்னையை! அடிபணிந்தேன்! கற்பு நியதியில் குறையாக் ஞ்சியமாய்த், துய்மைக்காந்தியில் காட்சியளிக்கிருள்'' என்று பகிரங்க உரைத்தக்குரலில் விண்ணப்ஞ் செய்தான், தேவாமிருதம் போன்ற வசனம் ராகவன் மனத்தை முழுவதும் குளிரவைத்தது.

[புது உணர்ச்சி! முகமலர்ச்சி! உண்மையான உள்ளக் களிப்பில் ள்ளோட்டம்! ஹநுமானும் ராமனை நோக்குகிருன்! ஆகா! என்ன ம்பெரும் உயரிய காட்சி காண்கிருன்! தன்னுயிரினும் இனிய ழக்கைத்துணைவியின் க்ஷேம சமாசாரத்தைக் கேட்ட அவ்வன்புக் கண , மனைவி கற்புடைமையின் காந்தியில் ஜொலித்துத் திகழ்கிருள் என் தக் கேட்டு, என்றுமில்லாத ஆனந்தமடைகிருன். அவ்வளவு பொலி ற அவன் முகமலர்ச்சியைக் கண்ட ஹநுமான் கடவுளைக் காண்கிருன். உண்மைதான் என்று நிரூபிக்கவோ என்னவோ, ஒன்றும் பேசாது ந்தரரூபன், சுப்ரதீபன், சுயம்பிரகாசன சியாமளவர்ணன், ஹநுமானை ண் குளிரக் கடாக்ஷிக்கிருன். ஆகா! என்ன உயர்பெரும் திருவிழா? ஆறுதலளிக்கும் ஆநந்தச் செய்தியைக் கேட்ட மானிடக் காதல மன்மத மங்களன், மைதிலி மணாளன் கடவுளைக் காண்கிருன்! அப் னந்த முகமலர்ச்சியையும் கண்குளிரும் கடாக்ஷத்தையும் பெறுகிருன் மான். அக்கடாக்ஷத்தில் ஹநுமான் தெய்வங் காண்கிருன்! இவன் றற பாக்கியத்தைக் கண்ட, நம் போன்ற மற்றவர்கள் ஹநுமானைக் வுளாகக் காண்கிரோம்: இத்தகைய மேன்மை கொண்ட சக்தி பொதியும் ாக்ஷ வீட்சணியம் அது! ராமனின் குளிர்ந்த பார்வை ஹநுமானை றைவனிடம் அழைத்துச் சென்றது!]

———

## 65. சூடாமணி சமர்ப்பணை

ஸீதை அழிவிலா கற்புக் கனல் வீசிக்கொண்டு காட்சியளிக்கிருள் எனும் அமுத மொழியை ஹனுமான் சாற்றவே அண்ணல் அகமகிழச் சேவை தருகிருன். அப்போது அண்மையிலிருந்த அங்கதன் முதலியோர் ரகுநாதன் இன்னும மகிழ்ச்சியுறும்படி பேசவாரம்பிக்கிருர்கள். அரக்கனுடைய அந்தப்புரத்தில் அரக்கிகளால் அதட்டப்படும் அன்னை அறநெறி தவருதிருக்கிருள், என்னும் விருத்தாந்தத்தை விவரிக்க ஆரம்பித்தார்கள்.

இவர்கள் சொல்வதைக் கேட்கக் கேட்க கோசலைச் செல்வன் களிப்புற்று பூரிக்கிருன். பின்பு நீர்த்திவலை பூத்த கண்களுடன் அவர்களை நோக்கி, "வானரர்களே! ஸீதாதேவி லங்கையில் எங்குக் காணப்பட்டாள்? என்னைப் பற்றி அவளது எண்ணங்கள் யாவை? வைதேகியைப் பற்றிய

விவரம் முழுவதும் கேட்க விரும்புகிறேன்'' என்றான். ராகவனின் மன வோட்டத்தையும் அவாவையும் கண்டு இவருக்குத் திருப்தியாய்ச் சமாதானஞ் சொல்பவன் ஹநுமானேயென்று அவனை ரகுநாதன் முன் கொண்டு வந்து விட்டனர். உடனே ஆஞ்ஜநேயன் ஸீதா தேவியிருக்கும் திக்கை நோக்கித் தண்டனிட்டுப் பேசவாரம்பித்தான்.

''ஐயனே! அன்னை ஜானகியைத்தேடிக்கான நூறுயோஜனை நீ கடலைத் தாண்டி விரைந்தேன். அத் தென் கடலின் தெற்குக் கரையி ராவணனுடைய லங்கை நகர் இருக்கக் கண்டேன். அங்குச் சென்ற அரக்கன் அரண்மனையில் அன்னையைத் தேடினேன். அங்கே அந்தப் திலுள்ள ஓர் அழகிய சோலையில் (அசோக வனிகையில்) அவள் அர களின் காவலிலிருக்கக் கண்டேன். அக்கற்பு மங்கை உங்களை இ விடாது தியானித்துக்கொண்டே உங்களை அடைய நோன்பு நோற் கொண்டிருக்கிறாள், தமது தவம் கைகூடக் காத்திருக்கிறாள். தாரக நாம அவள் உயிரைக் காத்து வருகிறது. கோர ராட்சதிகள் அவளை அடிக் மிரட்டுகிறார்கள். அதனால் அக் கற்பரசி சோர்வுற்று அஞ்சி அஞ்சித் கத்திலாழ்ந்துத் தவிக்கிறாள். என்றைக்கோ முடி போட்ட ஒற்றைப் னல்; எண்ணெய் காணாத புழுதி படிந்த பொன்மேனியாள்; தரை கிடந்து உங்கள் வரவிற்காகத் தவங்கிடக்கிறாள். பார்க்கச் சகிக்காத அரக்கிகள் கொடிய சொற்களால் வெருட்டித் துன்புறுத்துகிறார்கள். வர் வரவு காணாமலும், கொடிய அரக்கிகள் கையிற் சிக்குண்டு அ செய்யும் அல்லலுக்கு மீட்சி காணாமலும், அன்னை ஒரு சமயம் உ மாய்க்க எண்ணினாள். அன்று அவ்வளவு தூரத்தில் கொண்டு போ டது அவள் சோகத்தின் அதிர்ச்சி. ஆயினும், காகுத்தா! உங்கள் நினை தான் உயிர் வைத்திருக்கிறாள். உங்களையே இடைவிடாது அல்லு லும் சிந்தித்துத் தியானித்துத் தவம் புரிபவளாகக் கண்டேன். பரிசுத் புருஷோத்தமா! நான் அந்த சம்பவத்தைக் கண்டதும் பெயர் பெ இக்ஷ்வாகுவம்ச சரித்திரத்தையும் உங்கள் கல்யாண குணங்களையும் பற் பேசினேன். தேவியின் கவனம் இழுக்கப்பட்டது. இது காறும் அரக் யரின் தெழிப்பைக் கேட்டு உறைந்து போன செவிகள் அன்று ஸ்ரீ ரா கானம் கேட்டதும் புத்துணர்வு பெற்று என்னுடன் உரையாட இசைந்த ளினாள். அப்பொழுது ராம ஸுக்ரீவ நட்பையும், நீங்கள் படும் மனக் கவலையையும், அன்னையைத் தேடிக்கண்டுபிடிக்க நடந்தேறிவரும் முயற்சி களையும் விரிவாய் விண்ணபித்துக்கொண்டேன். அவைகளைக் கேட்டதும் அவள் மனம் சற்று ஆறுதலடைந்தது. பிறகு என்னிடம் நம்பிக்கை கொண்டாள். ஐயனே! அந்த அம்மையார் உங்களிடத்தில் வைத்துள்ள பக்தியே அவளுடைய வாழ்க்கை இலட்சியம்; அதுவே அவளது வாழ்வின் முறை; அவளது பொறையையும் கற்பையும் எவ்வாறுரைப்பேன்? புருஷோத்தமா! கணவர் பக்தியே மூர்த்திகரித்து விளங்கும் அவ்வுத்தமியைத் தங்கள் அருளால் கண்டு தரிசித்தேன். உண்மை அன்பனை உங்களிடம் இவற்றைச் சொல்லியனுப்பினாள் தேவி. அன்றொரு நாள் சித்திரக்கூடச் சாரலில் சுகமாக இருக்கும் போது ஒரு கபடக் காக்கையின் அபசாரச் செய்தியும் அதற்கு அபயமளித்த விருத்தாந்தமும் நினைவிலிருக்கிறதா? மற்றொரு நாள் உல்லாசமாயிருந்த காலத்தில் திலகமழிந்து விடக் காவிப்பொடியைக்கொண்டு திலகமிடவில்லையா? உம் கையாலேயே பல தடவைத் தன் தலையில் சூட்டிய இந்தச் சூடாமணியை அடையாள

மாகக் கொடுக்கச் சொன்னாள்; உங்கள் வரவை சதா எதிர் நோக்கி ஏங்கித் தேம்பித் துரும்பாய் இளைத்துப் போய்விட்டாள். இன்னும் ஒரு மாதமே தங்களுக்காகக் காத்து உயிர் தரிப்பாள். பின்னர் தன்னைக் காணமுடியாதென்பதை உங்களுக்கு வலியுறுத்தச் சொன்னாள். ரகுநந்தன ங்களும் தேவியைக் காணத் துடிக்கிறீர்களல்லவா? இப்பொழுதே கடலைக் கடக்கும் ஆலோசனை செய்து முடித்து அன்னையிடம் விரைந்தாக வேண்டும்'' என்று சொல்லி சூடாமணியையும் ராமனிடம் சமர்ப்பித்தான் ஆஞ்ஜநேயன்.

---

## 66. ராமனின் சோகம்

ஆஞ்ஜநேயன் வைதேகியைக் கண்டு பிடித்து அவள் நிலையையும் ஆத்மசக்தியையும் கணவனிடத்தில் வைத்த அன்பையும் விவரமாக ராம ரிடம் உரைத்துக் கடைசியில் அடையாளமாக அவள் கொடுத்தனுப்பிய ஒடை மணியையும் கொடுத்தான். அதை வாங்கினான் ரகுநாதன். கண்ணில் நீர் தாரை தாரையாக மிதந்து வழிந்தது. தன் நாயகியை நேரில் காண் தாக உணர்ச்சி கொண்டு அவ்வாபரணத்தை மார்பில் அணைத்துக் கொண்டான். அவன் அன்பு மடைதிறந்து பிரவாகமெடுத்து நெஞ்சை அடைத்தது. ஆகா! இவளை இன்னும் பிரிந்திருக்கிறேமே! ஐயோ அவள் ...யே அரக்கிகளின் நடுவே என்ன வேதனையுறுகின்றனளோ?''வென்று நினைக்க நினைக்க அவன் துயரம் உச்ச நிலையடைந்தது, துக்கம் தாங்கா ப் ஸுக்கிரீவனைப் பார்த்துப் பிரலாபிக்கிருன் உண்மைக் காதலன்.

''ஸுக்கிரீவ! இவ்வாபரணத்தைப் பார்த்தாயா? இச்சுந்தரமான ..ாமணியை என்னிடம் அனுப்பியிருக்கிருள் என் நாயகி. கன்றையிழந்த ப்போல் என் ஆவி துடிக்கிறது! இம்மணி திருமண காலத்தில் ஜனக .. கொடுக்கப்பட்டது, அதை நான் அவள் தலையில் சூட்டினேன். அவள் முடியையடைந்ததும் அது முன்னிலுமதிகமாய்ச் சோபையுற்று ஜொலித்தது. இது நீரில் உண்டான திவ்விய ரத்தினம். இதை இந்திரன் என் மாமனுருக்கு யாகத்தில் பரிசாய்க் கொடுத்தான். அத்தகைய மேன்மை பொருந்திய ஆபரணம் ஜானகியின் ஜடையிலமர்ந்து திகழ்ந்தது. இப் பொழுது இதை எனக்கு அடையாளமாக அனுப்பி வைத்திருக்கிருள். அவளுடைய அன்புருவமான அணி எனக்கு அனுப்பப்பட்டிருக்கிறது. உள்ளக் களிப்பை அள்ளி எழுப்பும் அன்புச் செய்தி இது! இதை மிகுந்த மகிழ்ச்சியுடன் பல தடவை அவள் பின்னலில் சூட்டி இருக்கிறேன். அவள் விளையாடும் சித்திரம் இதோ என் கண் முன் காணப்படுகிறது. இதைக் கண்டதும் என் பிரியையை யடைந்தவனுக எண்ணுகிறேன். ஐயோ! அவள் இங்கில்லையே! என் செய்வேன்! அவள் இன்னும் என்ன சொன் ஞள்? நெடுநாளாய்த் தாகத்தால் தவிக்கும் ஒருவன் குளிர் நீர் அருந்தி ஆறுதலடைவது போல் என் மனம அதைக் கேட்டால் சற்று ஆறு தலடையும்.

''லட்சுமண! என்ன விபரீத நிகழ்ச்சி! வைதேகியைப் பிரிந்து அவள் அணிந்து அழகூட்டிய இம்மணியைக் கண்டு ஆறுதல் காண்கிறே னென்ருல் இதைவிட வேறு துக்கமுண்டோ? சௌம்மியனே! ஜானகி இன்னும் ஒரு மாதம் பொறுத்துக் கொண்டு உயிருடனிருப்பதாகச் செய்தி

சொல்லியனுப்பியிருக்கிருள். அதுபோதும் எனக்கு, அத்தவணை தாண்டு முன் அவளை நெடுநாள் வாழ வைப்பேன். தடங்கண்ணுளான அவளை விட்டு பிரிந்து இனி ஒருகணமும் இங்குத் தாமதியேன், அவளிருக்குமிடமே எனக்கு உய்விடம். அங்கே இதோ விரைகிறேன். ஐயோ! தன்னந்தனியே கோர அரக்கிகளால் அதட்டப்பட்டு அக் கற்பரசி என்ன வேதனையுறுகின்றனளோ! அதை நினைக்க என்னுல் தாங்க முடியவில்லையே! சந்திர பிம்பம் போன்ற அவள் முகமண்டலம் இப்பொழுது அரக்கிகளான கருமேகங்களால் மறைக்கப்பட்டு எவ்விதம் வாடிவதங்கி ஒளிகுன்றி போயிற்றே! ஹநுமானே! ஸீதை இன்னும் என்ன சொன்னுள்? எப்படிச் சொன்னுள் எந்நிலையில் சொன்னுள்? என்ன செய்ய வேண்டியதென்றுரைத்தாள் எல்லாம் விவரித்துச் சொல்லக் கூடாதா? அவை யாவற்றையும் அறியத் தவிக்கிறேன். என் தவிப்பை யுணர்ந்து இம்மணியை அனுப்பினுள் போலும்! உடல் தேவனையுறும் நோயாளிக்குக் கிடைத்த சிறந்த அமிருத சஞ்சீவி. இந்த மணியை ஒரு மந்திரமாகக்கொண்டு தைரியம் பெற்று அவளிடம் விரைவேன். அமுதினிமினிய தேன் மொழியளான அச் சர்வாங்க ஸுந்தரி என்னை விட்டுத்தனியே தவிக்கும் அவ்வுத்தமச்செல்வி இன்னும் என்ன சொல்லியனுப்பினுள்? ஹநுமானே! எல்லாவற்றையும் எனக்கு விரிவாகச் சொல்ல வேண்டும். அவற்றைக் கேட்கப் பேராவல் கொண்டிருக்கிறேன்'' என்று புலம்பினுன் ஜானகி மணுளன்!

---

## 67. ஹநுமானின் விரிவுரை

தாசரதியின் அன்பு வெள்ளத்தையும் மனைவியைப் பிரிந்த துக்கத்தின் உச்ச நிலையையும் அவளைப் பற்றிய கற்பு நிலையை அறிய வேண்டிய அவாவையும் நன்குணர்கிருன் ஆஞ்ஜநேயன். அவனைத் தேற்ற எண்ணங் கொண்டு பேச வாரம்பிக்கிருன்.

''புருஷர்களில் ரிஷபம் போன்றவரே! ஸ்ரீ ஜானகி தேவியார் உங்களைப் பிரிந்த துக்கத்தை அடக்கமுடியாது வாய்விட்டு புலம்பினுள். உங்களுடன் முன்பு விளையாடின நாட்களை எண்ணி வருத்தம் மேலிட்டு, அவைகளை உங்கள் நினைவிற்குக் கொண்டுவர என்னைத் துண்டினுள். முன்பு ஒரு நாள் நீங்களிருவரும் சித்திர கூடத்தில் ஏகாந்தமாக இனிது வாழ்ந்து வந்த சமயம் இருவரும் களைப்புற்று துயிலுற்றிருந்தீர்கள். அப்பொழுது தேவி முன்னதாக கண் விழித்து உட்கார்ந்திருக்கையில், ஓர் காகம் பறந்து வந்து அவள் மார்பில் விரைந்து குத்திப் புண்படுத்தியது. நீங்கள் கண் திறந்து அவள் நிலையை பரிகசித்த வண்ணம் மறுபடியும் அவள் மடியில் துயிலமர்ந்தீர்கள். அன்னையும் சற்று கண்வளர்ந்து எழுந்தபோது அந்தப் பொல்லாக் காக்கை மறுபடியும் பறந்து வந்து தேவியைத் துன்புறுத்திற்று பல தடவை இவ்வாறு குத்திக் கிளறவே, அவள் குருதித் துளி உங்கள் மேல் விழுந்ததும் நீங்கள் கண் விழித்தீர்கள், பரந்தபரே! சினங் கொண்ட சர்ப்பம் போல் சீறி எழுந்த நீங்கள் அன்னையின் நிலையைக் கண்டு ''கண்மணி! உன்னை நகங்களால் குத்திக் கிளறினவன் யார்? ரோஷங்கொண்ட ஐந்து தலை நாகத்துடன் விளையாட எண்ணங் கொண்டவன் எவன்'' என்று சொல்லிக் கொண்டே எதி

ராக குருதி படிந்த கூறிய நகங்களுடனிருந்த அக் கொடிய காகத்தைக் ண்டு விட்டீர்கள். அக்காகமும், உங்கள் சீற்றத்தைக் கண்டு நடுங்கி டனே பாதளத்துள் மறைந்து விட்டது. இந்திரனுடைய மகனை யந்தன் என்பவனே அக் காக்கை வடிவங் கொண்டு வந்தவன். வாயு பகங் கொண்ட மாயாவிப் பிருகிருதி. மகாபாகுவே! மதிமானுகிய ங்கள் அம் மாயப் பறவையைத் தகுந்தபடி தண்டிக்கத் தீர்மானித்து ஓர் நப்பைப் புல்லையெடுத்து அதில் பிரும்மாஸ்திரத்தை உச்சரித்து அக்காக் கயைக் குறித்து விடுத்தீர்கள். அது கொழுந்துவிட்டெரியும் காலக்கினி க ஜொலித்துக் கொண்டு காக்கையைப் பின்பற்றிப் பறந்தது. அக் க்கை தன் மரணபத்தைக் கண்டு, உள்ளம் துடித்து மூன்று உலகங்களி லும் ஓடித் திரிந்து, தஞ்சங்காணுதலைந்தது மகரிஷிகளாலும், தேவர்களா ம் தகப்பன் இந்திரனுலும் அவன் காப்பாற்றப் பட முடியாமல் கைவிடப் ட்டு மிகவும் நடுநடுங்கி. "காகுத்தா! உங்கள் திருவடிகளிலேயே சரணம் ரணம் என்று அடித்துக் கொண்டு வந்துவிழுந்தது. அதற்கு மரணதண் டனை முற்றிலும் உகந்ததென்று நீங்கள் முடிவு செய்திருந்த போதிலும் அச்சமயம் கருணை கூர்ந்து அதைக் காத்தருளினீர்கள். அவன் மாயாவித் னத்தையும், கெட்ட மனப் பான்மையையும் முற்றிலும் விட்டொழித்த காசுரனைக் கவனித்து 'தொலைந்துபோ' வென்று அவனது ஒரு கண்ணை திரம் அப்பிரும்மாஸ்திரத்திற்கு இரையாகக் கொடுத்து அவனுக்கு மளித்தீர்கள். ஒரு கண்ணிழந்து உயிர் பெற்ற அக்காக்கை உங்களுக் தசரதருக்கும் தண்டனிட்டு நன்றி செலுத்தி விடைபெற்றுத் தன்னி டம் போய்ச் சேர்ந்தது, மகாஸ்திர ஸாமர்த்தியரும், கொடுமையை ற்றும் வீரரும் சீலவானுமாகிய தாங்கள் அரக்கர்கள் விஷயத்தில் ஏன் ாவிருக்கிறீர்களோவென்று என்னைக் கேட்கச் சொல்லியனுப்பினுள்.

"நாகர், கந்தர்வர், அசுரர், மருக்கணங்கள் யாவரும் ஒன்று கூடி த்தாலும் உங்களை வெல்லுபவர்களில்லையே. அத்தகைய தனிப் பெரும் வீரரான அவருக்கு என்னை மீட்கவேண்டுமென்று கொஞ்சமாயி னும் எண்ணமிருக்குமாயின், இப்போதே, விரைந்து வந்து இக்கொடிய ராவணனைப் போரில் தம் கூரிய பாணங்களுக்கு ஏன் இறையாக்கக் கூடாது என்று கேட்கச் சொன்னுள். பகைவரை முறியடிக்கும் ரகுகுலத்தி லுதித்த புருஷோத்தமனுன அந்த லட்சுமணர்தான், ஏனே தமையன் அநுமதி பெற்று இங்கு வந்து மீட்காதிருக்கிருர் என்றும் கேட்கச் சொன் ஞள். அக்கினி வாயுக்களின் சக்தியுற்ற, தேவர்களையும் திணறவைக்கும் ஆண்புலிகளான அவ்விரு பெரும்வீரர்கள் ஏன் என்னைக் கவனியாதிருக் கிருர்கள்? அம்மாபெரும் வீரர் இருவரும் இணையற்ற சமர்த்தர்களாயிருந் தும் நான் அவர்களால் அநாதரவு பண்ணப் பட்டிருப்பதற்குக் காரணம், எனது பாவம் தானே வென்று வருந்தினுள். கண்ணும் கண்ணீருமாய் இவ்விதம் புலம்பினுள்,

"அப்போது நான் அவளைத் தேற்ற முனைந்து "அம்மணி! உங் களிடம் சத்தியத்தின் பேரில், ஆணையிட்டுச் சொல்கிறேன். ஸ்ரீ ராகவர் உங்கள் பிரிவாற்ருமையைத் தாங்காது தவித்து, எதையும் வெறுத்துத் துன்புற்றிருக்கிருர். உங்கள்பாலுள்ள அன்பாலும் உங்களை விட்டுப் பிரிந்த துயரத்தாலும், மனம் துடிக்கிருர். இச் சோக நிலையைக் கவனித்த லட்சுமணரும் பரிதபித்துத் தயங்கி நிற்கிருர். அம்மையே!

நீங்கள் இருக்குமிடம் அவர் அறியார்கள். இப்பொழுது நான் உங்களைக் கண்டு தரிசித்தேன். இனி உங்கள் வருத்தம் ஒழிந்த என்று உறுதி கொள்ளுங்கள். இது சத்தியம். நான் அவர்களிட திரும்பிச் சென்று உங்கள் செய்தியைத் தெரிவிப்பது தான் தாமத உடனே அவ்விரு புருஷோத்தமர்களும் இங்குப் பறந்து வந்து, கையையே சாம்பலாக்கப் போகிறார்கள். மாதர் குலவிளக்கே! ஸ்ரீராக இப்பொழுதே ராவணனையும் அவனைச் சார்ந்த எல்லா அரக்கரைய போரில் மாய்த்து உங்களைத் திரும்பி அழைத்துச் செல்லப் போகிறார். இ நிச்சயமென்று அடித்துக் கூறுகிறேன். அன்னையே! நீங்கள் இங்கிருப் தையும் இச்சூழ்நிலைமையும் அவர்கள் அறியவேண்டும். நான் உங்களைத்த சித்ததற்கு ஓர் அடையாளமாக அவருக்குப் பிரீதி விளைத்தற்குரிய பொரு ஒன்று என்னிடம் தந்தருள்வீராக'' என்று வேண்டினேன். ஸீதாதே இதைத் திருவுள்ளம் பற்றி நாலுபக்கங்களிலும் பார்த்து, ஒருவரும் அ யாதபடி, தன் தலைப்பில் வைத்திருந்த இத்திவ்வியமான சூடாமணியை அவிழ்த்துக் கொடுத்து, உங்களிடம் சேர்க்கச் சொன்னாள்.

[யாராவது பார்க்கிறார்களாவென்று, நாலாபக்கமும் கவனித்து யாவரும் கண்டு கொள்ளாதபடி, தலைப்பில் முடிந்த சூடாமணியை ரக மாய்க் கொடுத்தாளென்பது, அவளுடைய, சகஜமான மனித இயல்பை சூசிப்பித்து, நம்மையும் அச்சூழ்நிலையில் கலந்து கொள்ள வைக்கும் சிறந்த இலக்கிய அம்சம் என்பதைத் தெளிவாக்குகிறதேயன்றி, ஏ மூடுமந்திரம் தந்திரம் செய்தாளென்பதைக் குறிப்பதல்ல.]

''அதைப் பணிவுடன் பெற்றுக் கொண்டு விரைந்து திரும்புவத ஆயத்தஞ் செய்த என்னைக் கண்டு, மைதிலி தேவி மறுபடியும் த தனியே இருக்கவேண்டுமே என்று துக்கம் மேலிட்டுக் கண்ணீர் பெரு நெஞ்சடைக்க இவ்வாறு என்னை எச்சரித்தாள்,'' ஹநுமானே! அவ் நரசிங்கர்களுக்கும், ஸுக்கிரீவ மகாராஜருக்கும் குசலம் விசாரித்தத சொல்லும். எவ்வண்ணம் ஸ்ரீராகவர் இங்கு வந்து வெற்றி பெற்று என்னைத் திரும்பவும் அழைத்துச் செல்வரோ, அவ்வண்ணம் நீர் முனைய வேண்டும். வானரத் தலைவனே! நீர் அவர்களைத் திரும்பி அடைந்ததும் எல்லாவற்றையும் நன்கு விவரித்துரைக்க வேண்டும். நீர் கண்கூடாக் கண்ட எனது நிலையும், கொடிய இவ்வரக்கிகள் என்னைப் படுத்தும் பாட்டையும் அவ்வீரர்களிடம் நன்றாய்ச் சொல்லும், தடையின்றி நீர் திரும்பிச் செல்லும் வழி இனிதாக அமையட்டும்!'' என்று கஷ்டப்பட்டு விடையளித்தாள் தேவி. ஐயனே! அரசச்சிங்கனே! இவ்விதமாக மனங் கலங்கும் அன்பும் பணிவும் செறிந்த முறையீட்டை உங்களிடம் சமர்பிக்கக் கட்டளையிட்டாள்! சிறிதும் குன்றா அளவற்ற பதிவிரதா தருமத்திருப்பவ ளாக அவளைத் திருவுள்ளம் பற்றுவீராக''! என்றான்.

---

## 68. அன்னையின் ஆலோசனையை அறிவித்தல்

ஆஞ்ஜநேயனின் அமுத மொழிகளைக் கேட்கிறான் ரகுநாதன். கேட்கக் கேட்க அன்பும், ஆற்றலும் பெருகி எழுகின்றன. இதைக் கவனித்து மாருதி இன்னும் சொல்லிக் கொண்டே போகிறான்.

"உலகோத்தமா! இவ்வாறு அன்னை விடை கொடுத்தருளினர். து திரும்புதலின் முயற்சியைக் கண்ணுற்று, தாங்கள் என்னிடத்தில் த்துள்ள அன்பினாலும் அன்னை என்னிடம் வைத்த நம்பிக்கையாலும் . பக்தியைக் கௌரவிக்கவெண்ணி பின்வருமாறு, மேல் நடக்க ண்டியதைப் பற்றிக் கட்டளையிட்டாள். "ஆஞ்ஜநேய! ஸ்ரீ ரகு ஞ்தமன், எம்முறையில் இவ்வரக்கர்களைப் பூண்டோடு ஒழித்து ற விலாசத்தில் பொலிந்து என்னை மீட்டுச் செல்வரோ அம்முறை இயக்கவைப்பது உமது கடமையாகுமென்பதைக் கவனத்தில் வையும். பனே! சிரமமாக இருந்தால், ஏதாவதொரு தனி இடத்தில் ஒரு நாள் கிப் போகலாம். இன்று களை தீர்ந்து, நாளை செல்லலாமா? வானரவீர! இருக்கும் போது சற்றுத் துயரமற்றிருப்பேன். நீர் அகன்றவுடன் முன்னிலுமதிகமாக வருந்தித் தவிக்க வேண்டியதுதான். ஞ்து ானே எவ்வளவு தூரம் கொண்டு விடுமோ! ஒரு வேளை நீர் திரும்பி நம் வரை உயிர் வைத்திருப்பேனோ என்னவோ. என்ன ஆபத்து சிடுமோ! கணவனைப் பிரிந்த துக்கம், பின்பு, அவர் மோதிரத்தைக் அவரைக் காணாத துக்கம், நீரும் போய்விட்டு, அவரும் இங்கு அரக்கர்களும் அதிகமாய்த் துன்புறுத்தும் துக்கம் ஆகிய இத்துக்க ளால் நான் துயருச்சியில் உயிர் தரிப்பதும் அரிதாகும்.

"போகட்டும், இதையெல்லாம் எப்படியோ கஷ்டப்பட்டு ஒருவாறு த்திருக்கிறேன் என்று வைத்துக் கொண்டாலும், ஒரு விஷயம் ா வேதனைப்படுத்துகிறது. அவ்விரு வீர சுத்தரர்களும் கவியரசன் ரீவனும், எல்லையற்ற வானரப் படைகளுடன், விரைவில் இங்கு ந்து லங்கையை நிர்மூலமாக்குவது நிச்சயமென்றுரைத்தீரே! களெல்லாம் இப்பெருங்கடலை எப்படிக் கடப்பார்கள்? இப்பெருங் டலைத் தாண்டுவதென்பது சாமானியமா? வாயுவும், கருடனும், நீரும் இம்மூவர் தான் கடலைத் தாண்டும் சக்தி வாய்ந்தவர்கள். மற்றவர்கள் எங்ஙனம் இதைத் தாண்டக் கூடும்? ஆம், இந்த மாபெரும் நகரையும் அதில் உற்ற அரக்கர்களையும் அரக்கவரசனையும் அடியோடு அழித்துவிட நீர் ஒருவர் போது மென்பதை உணர்வேன். வெற்றி பெற்ற நீர் என்னைத் திரும்பி அழைத்துப் போக முடியுமென்பதையும் அறிவேன். எனினும் அது ரகு வீரனுக்கேற்றதாகுமோ? வெற்றி வாகை சூடும் அத்தலை சிறந்த ஒப்பற்ற இருபோர் வீரர்களும் திரள்திரளாம் வானரப்படை எழுப்பி, அணிவகுத்து இங்கு வந்து, முற்றுகையிட்டுக் கடும் போரிழைத்து, அரக்கர் களைத் துண்டம் துண்டமாய் வெட்டி வீழ்த்தி அரக்கவரசனை வென்று கொன்று வானெழுந்து, ஒளி வீசிக் கொக்கரிக்கும் இவ்விலங்காபுரியைத் தரைமட்டமாக்கி, ரணகளத்தில் வெற்றி பெற்று, வாகைசூடிக் கம்பீரமாய் என்னை அழைத்துச் செல்வதல்லவா அவர்களின் பெருமையாகும்! அவ் வீரன் வெளியே சென்றிருக்கையில் இவ்வல்பனை அரக்கப்பதர் என்னை

மாயரூபமெடுத்துத் திருடிக்கொண்டு ஓடிஒளிந்தான்; அத்தகையோ?
புத்திரமித்திரர்களுடன் யுத்தத்தில் அறவே மாய்த்து, சீறி விசும்பும்
நாகத்தின் விஷங்கொண்ட கூறிய பாணங்களை இடைவிடாது பொழி
வானை மறைக்கும், சிரக்கூடு கட்டும், கோதண்டபாணியாய், லங்கை
வந்து, போர்க்களத்தில் அத்திருடனுக்கு மரண தண்டனையை
வேற்றி, ரகு குலகீர்த்தியை வானளாவிப் பரப்பித்து துலங்
தல்லவா ஸ்ரீ ராமபத்திரனின் மேன்மையாகும்? அதுவல்லவா அ
வீரத்திற்கு ஏற்றதாகும்? கீர்த்திக்குப் பொருத்தமாகும்? பெயரை
புகழையும் தருமத்தையும் நிலை நிறுத்தினதாகும். ஆகையால் அவர் தீர
வீரமும் என்றும், எங்கும் மங்காது பொங்கிப் பொலியும் வண்ணம், இ
கம் இயங்குவது உமது பொறுப்பாகும். இவ்வாறு பொருள் பொருந்
ஆவேசமெழுப்பும், ஆண்மையின் ஆற்றலை விரிவாக எடுத்துரைத்
தேவி. அதற்கு ஒருவாறு நானும் பதில் சொல்ல முனைந்தேன்.

'தேவி! வானர, ருக்ஷ சேனைகளுக்கு அதிபதியான, கவிக
அரசரான, சத்வசம்பன்னரான ஸுக்கிரீவர் இங்கு வந்து சேர
திட்டம் போட்டவர். அவ்வண்ணமே செய்து முடிப்பவர் என்று
போகிறீர்கள். அவருடைய ஆக்கினையை முன்னிட்டு விக்கிரமச
அஞ்சா நெஞ்சம் படைத்தவர்களும் மகாபலவான்களுமான வானர
கள் இங்கு நொடிப் பொழுதில் விரைந்து வந்திறங்குவதை வெகு சீ
பார்க்கப் போகிறீர்கள். அவர்கள் எங்கும் செல்லவல்லவர்கள்;
களைத் தடை செய்பவர்களில்லை. வானில் தாவிப் பறப்பவர்கள். அ
கரிய ஆணவங் கொண்டவர்கள்; இக்கடல் அவர்களுக்கு மான் கு
போன்றது. அவர்கள் உலகம் முற்றும் அனாயாசமாய்ச் சுற்றி
கள். யாவரும் எனக்குச் சமமானவர்களும் மேம்பட்டவர்களுமே த
எனக்குத் தாழ்ந்தவன் அந்த ஸுக்கிரீவ சன்னதியில் எவனுமில்லை.
எல்லோரைவிடத் தாழ்ந்தவனே தூதனாக அனுப்பப்படுவான். இப்படிப்
பட்ட நானே இங்கு வந்தேனென்றால், அவர்கள் இங்கு வருவதைப்பற்றிக்
கேட்பானேன்? ஆகையால், தேவீ! பரிதபிப்பது போதும்! உங்கள்
துயரம் தொலைந்துபோம். வானர வீரர்கள் ஒரே பாய்ச்சலாய் இங்கு
வந்திறங்குவதைக் காணுங்கள். காலையுதித்த கதிரவனையும், முழு மதியை
யும் போன்ற அந்த ஆண்சிங்கங்களாகிய ஸ்ரீ ராமலட்சுமணர்கள் என்
முதுகிலேறி இங்கு வந்திறங்குவதைப் பார்க்கப்போகிறீர்கள். சத்துருவை
சிதறவடிக்கும் சிங்கத்தையொத்த, அதிவீர வீரரான ரகுவீரரையும் லட்சுமண
ரையும் கோதண்டபாணிகளாய், வெற்றி வீரத்தில், லங்கை வாயிலில்
இதோ காணப்போகிறீர்கள். நகங்களையும், பற்களையும் ஆயுதமாய்க்
கொண்டு, அரக்கர்களை ஆயிரமாயிரமாய் மடியவைக்கும் வானரக் கோடி
களையும் லங்கை முழுவதும் அன்னாரது போர்க்கர்ஜ்ஜனையில் நடு நடுங்கு
வதையும் இதோ காண்பீர்கள்! ஸ்ரீ வீரராகவரை இதோ கண்டு களிக்கப்

...வரக்கப் பூண்டுகளை அடியோடு வேரறுப்பதை
...ள். அவர் கைக் கொண்ட வனவாச இலட்சியமும்
... முடித்தவராய், உங்களை வெற்றியுடன்,
... செல்லவிருக்கிறுரென்பதையும் மனத்தில்
...றதும் கண்கொள்ளாக்காட்சியாய் அப்பிரா
...டக்கவிருக்கிறது ! அதைக் கண்டு நீங்களே
...பதே எங்கள் உற்சாகத்தை வலிவூட்டுவதாகும்.
...ய ! களிப்புறுங்கள். கவலையை யொழியுங்கள், பதியுடன்
...ரையடையத் தயாராயிருங்கள்'' என்று சொன்னேன்.

...ந்தன ! அப்பொழுதுதான், வைதேகி சற்று மனந்தேறி
...ளைக் காணுது, உங்களையே நினைத்து நினைத்து துன்புறும்
... மனச் சாந்தியளிக்கும் மங்களம் காட்டும் எனது உண்மை மொழி
...கேட்டுச் சற்று சமாதானங் கண்டாள். சோகந் தணிந்து, நம்பிக்கை
...ர். உங்கள் வரவை எதிர் பார்த்து இத்திசை நோக்கிய வண்ணம்
...க் காத்திருக்கிருள்'' என்று சொல்லி முடித்து அன்னையிருந்த திக்கை
...கித் தண்டனிட்டான் ராம பக்தி செறிந்த வாயுகுமாரன்.

...கியைத் தேடி லங்கை சென்ற ஹநுமான் அவளைக் கண்டு
...ன் கணையாழியை அடையாளமாக அளித்து அவளைத்
...ின்பு அவளிடமிருந்து சூடாமணியைப் பெற்று, திரும்பிவந்து
... பணிகிருன். ஸீதையின் கற்பின் திறத்தையும் அவளது நிலை
...தரிவித்து அவள் கொடுத்தனுப்பிய ஜடை பில்லையையும் இராம
...ாடுத்து மகிழச் செய்கிருன். ''இன்னும் அவள் என்ன சொன்
...வாறிருக்கிருள், விரித்துரைப்பாய்'' என்று கோசலேந்திரன்
...வாக்கொண்டு வினவ ஆஞ்ஜநேயன் லங்கையைப் பற்றியும் தேவி
...யைப் பற்றியும் அவள் சொல்லி அனுப்பிய செய்திகளையும் ஒவ்வொன்ருய்
விளக்குகிருன். ஸீதா பிராட்டியின் உள்ளத்து அருந்தவமாகிய கற்
பொழுக்கத்தை பொருந்தச் சொல்லி புகழ்கிருன். ஆனல் தான் அரக்கர்
களோடு போர் புரிந்ததையும், லங்கையை சுட்டெரித்ததையும் சொல்லா
திருக்கிருன். ஏன் ? தற்புகழ்ச்சி சொல்வது சுத்த வீரனுக்குகந்ததல்ல
வென்றும், தன் வீரச் செயல்களைத் தானே சொல்ல வெட்கித்தான்
என்றும், எஜமானன் விடுத்தது தன் கருமத்தை முடித்து விட்டு அதிகப்
படியாய் சுயமாக செயலாற்றியது கடமையை மீறியதாகுமென்றுணர்ந்து
அவைகளைச் சொல்லவில்லை என்றும் பெரியோர்கள் விளக்கியிருக்கிருர்
கள்.

அஞ்ஜனைச் செல்வன் அன்னையின் நிலையை ஸீதாபதி முன் தன்
சொல்லின் செல்வத்தால் படம் பிடித்துக் காட்டிக் கொண்டே போகிருன்.
சட்டெ... று அவன் மனத்தே நினைவு எழுகின்றது. ஜகத்தையே இயக்கும்

சக்தி, ஆக்கி ஊக்கி, அணைத்து அழிக்கும் சக்து—தரும
சக்தி, இதன் வலிவையும் மகிமையையும் நிதரிசனம
லிடப்பட்ட வால் பனிக்கட்டியாய் உணர்ச்சி
பெரும் சக்தி மகத்தானது. வைதேகியாரிட
இப்பொழுது சக்கிரவர்த்தித் திருமகனிட
ஹநுமான் சொல்லச் சொல்ல, ரகுபதியின் மே
மிளிரும் கமலக்கண்களும், ஆற்றலும் ஆர்வமும்
திரண்டு முறுக்கேற்றும் அவனது எட்டடி உருவமும்
அவதாரமான அத்தரும மூர்த்தி அவ்வுத்தமச் சக்தியை
கொள்கிறான் என்று சூசிப்பித்தன. இதைக் கவனிக்கிறான் ப
இதன் மகிமையில் தனது செயல்கள் எம்மாத்திரம் என்று
மிக்க அற்பமாகக் கருதுகிறான் போலும்! அவ்வளவு தூரம் அ
மைக் குணம் பரந்து பரவுகின்றது! இவ்விருத்தாந்தம், அரக்
மாய்த்தல், லங்கையை எரித்தல்-கடைசி வரை மறுபடியும் எவ
இராகவனுக்கு எடுத்துரைக்காது போய் விடுகிறது. ஸுக்கிரீவனு
இதை எவரும் எடுத்துரைத்ததாகக் காணோம், பின் நடந்த மகத்
நிகழ்ச்சிகள் இதை நினைப்பூட்டுவதற்கும் இடமளிக்கவில்லை
ஆகவே ஆஞ்ஜநேயனின் கடும் எளிமைத் தன்மை இ
பொன்னால் பொறிக்கப்பட்டு, அவ்வுயரிய குணத்திற்கு ஓர் 
சிலையாய் என்றென்றும் காட்சியளிக்கின்றது. அவனது ம
கண்டோம், ஆற்றலை அறிந்தோம், வேகத்தையும் வீரியத்தை
புதைத்து திகைத்தோம், இப்பொழுது அவன் எளிமைக்குண
அவன் கடவுளைக் காணும் பக்தி அறிவும் அவனை மாத்திரம
ஜீவராசிகளையும் மேம்படச் செய்வதைக் கவனித்து மகிழ்வோ
மிகையாகுமோ? எனவே இச்சருக்கம் வாதாத்மஜனின் முக்கியமான
குணத்தை உள்ளங்கை நெல்லிக்கனிபோல் விளக்கிக் காட்டி இக்காண்
டத்தின் ஸுந்தரத்தை இன்னும் மென்மையுற செய்வது நன்கு புலனாகின்ற
தல்லவா?]

சுந்தர காண்டம் முற்றிற்று!



# ஸ்ரீராம பட்டாபிஷேகம்

—:o:—

இன்று விடியுங்காலம், வஸிஷ்டமாமுனி நீராடி பூஜைமுடித்தார். கினனும் ஸ்னானஞ் செய்து காலைக்கடன் முடித்து அரச உடை பு விரைந்து வருகிருன். புண்ணிய தீர்த்தங்கள் வந்து சேர்ந்தன. ளை வரிசையாயடுக்கிவைக்கிருன். பின்னர் ராஜகுருவினிடம் ஆயத்தம் என்று ஆர்வத்துடன் தெரிவிக்கிருன். நகரம் முழு ர்ச்சமயம் திரண்டு வந்து மொய்த்திருந்தது. ஆயிரமாயிர ளாக நடைபெருத, மிக்கப்பிரமாதமான மஹாராஜபட்டாபிஷேக லவம் அன்று அயோத்தியில் சுபமங்களமாய் துவங்கிற்று. எங்கும் திதாக பிரமிக்க வைக்கும் அலங்காரம், விதவிதமான தோரணங் ன்காட்சி, சிறப்பு செறிந்த சொல்லொணுகோலாகலம் !

பட்டாபிஷேக அரசமண்டபம் ஓர் அலாதியான தனிப்பொலிவுடன் துலங்குகிறது. இந்திர சபையையே அயோத்தியில் நிர்மாணித்தார்கள் நகர வாசிகளும் ராஜாங்க அதிகாரிகளும்! ராஜகுரு தலைமை தாங்கி மகிழ்ச்சி யூட்டினுர். அவர் முகத்தில் ஓர் புதிய ஜோதி அன்று பிரகாசித்தது! பூவுலகில் விண்ணுலகம் இயங்கப்போகும் திவ்ய சக்தி அவர் உள்ளக் களிப்பை பிரதிபலித்தது.

உடனே வைதிக ஏற்பாடுகள் வெகு மும்மரமாக ஆரம்பமாயின. வேதங்கள் ஒலிக்க வாரம்பித்தன, வாத்தியங்கள் முழங்கின.

இயற்கை ஓர் புது வனப்புகொண்டு திகழ்ந்தது! மகத்தான ஓர் திருவிழா சகல ஜீவராசிகளையும் புத்துயிரளித்துக் கூவியழைத்துக் கொண் டிருந்தது. மங்களகரமான முகூர்த்தம்! யாகசாலைவிட்டு மண்டபம் வரு கிருர் வஸிஷ்டமாமுனி. பட்டாபிஷேக மண்டபம் வைகுண்ட காட்சியாய் விளங்குவதைக்கண்டு களித்தார். ரத்னமயமான சிம்மாசனம் கதிரவன் கதிரொத்த ஜோதியுற்று ஜ்வலித்துக் கொண்டிருந்தது. வேதியர்களை அழைக்கிருர். அவர்களுடன் சென்று முதலில் ராமசந்திரனையும், ஜானகியையும் கொலுமண்டபத்திற்கு வெகு வெகு கம்பீரமாய் வேத கோஷம் முழங்க அழைத்து வருகிருர். உலகநாயகன், லோகநாயகி

இருவரையும் அப்பசும்பொன் ஆட்சி
வைக்கிறார்! பட்சிகள் வெகு வேகமாக
மிருகங்கள் தங்கள் தொழில்களை யொதுக்கி
கின்றன! அவைகளின் உள்ளக் களிப்பு அவை கண்வழி
புலர்கின்றது. வானில் கதிரவன் பொன்தூவி பவனிவ
வெப்பமில்லை, வியர்வையில்லை. மந்தமாருதம் வீச, மனம்
எங்கும் தொட்டழைக்கின்றது. கொலுவீற்றிருக்கும் கோச
கண்கவரும் காட்சியளிக்கின்றான். அதை பதின்மடங்கு பெருக்கு
வைதேகியின் தரிசனம்! வைகுண்டத்தில் அமர்ந்திருக்கும் சாட்சா
நாதரும் ஸ்ரீமகா லக்ஷ்மியும் அங்கு வந்தமர்ந்திருப்பதாக எல்லே
வும் புனித உணர்ச்சிகண்டு பெருகி வளர்ந்தது.

வஸிஷ்டபகவான் கையமர்த்தி வேத கோஷம் ஒலிக்
நிற்கிறார். அருகிலிருந்த தேஜஸ் பொலியும் சின்னஞ்சிறு
பொற்குடங்களையும் கலசங்களையும் தாங்கி வருகின்றனர். ம
மானதும், மந்திரங்களால் ஜபிக்கப்பட்டதுமான புனித தீ
அவைகளிலிருந்து பசும் பொன்னாலும் வைரத்தாலுமிழைக்க
கொப்பரையில் கொட்டுகிறார்கள். அவைகளிலிருந்த வாசனைக
கலந்து அப்புண்ணிய சேர்க்கை மண்டபம் எங்கும் அற்புதமான ப
கமழ வைக்கப் பரவியது.

நவரத்னமிழைத்த கனகக் கலசத்தைக் கையிலெடுக்கி
குரு! 'டம டம' வென்று மங்கள வாத்தியங்கள் முழங்குகி
எல்லோரும் எழுந்து நெருங்குகிறார்கள். இமைகொட்டாது இ
திருவிழாவில் மெய் சிலிர்த்து நிற்கின்றார்கள்! வானிலிருந்து
இனிமையானதேவகீதம் கேட்கின்றது. வஸிஷ்டர் கலசத்தா
தத்தைக்கொண்டு சிம்மாசனத்தில் உல்லாசமாக அமர்ந்திரு
பிரானுக்கும் ஸீதாபிராட்டிக்கும் மங்களாபிஷேகம் செய்கி
வற்புத காட்சியைத் தரிசிக்க வானில் தேவர்கள் வந்து குழுமினார்கள்.
பின்பு வாமதேவரும், ஜாபாலி, காச்யபர், காத்யாயனர், சுயக்ஞர்
கௌதமர், விஜயர் என்ற மற்ற ஏழு ராஜகுருக்களும் ஒவ்வொருவராக
வந்து முறையே அஷ்டவசுக்கள் தேவேந்திரனை அபிஷேகஞ் செய்வது
போல் ரகுகுலதிலகனையும் வைதேகியையும் அபிஷேகஞ் செய்கிறார்கள்!
வேதகோஷம் ஜீவனை இறைவனிடம் அழைத்துச் செல்கின்றது! காண்
போர் மனங்களித்துக்கொண்டிருக்கையில் ரித்விக்குகள் வருகிறார்கள்.
மனோத்தமர்கள், வானுலத் தேவதைகள், நான்கு லோகபாலர்கள், மற்
அழைக்கப்பட்டவர்கள், மக்கள் பிரதிநிதிகள், ஒருவர்பின் ஒருவராக பெ
வாக உள்ளக்களிப்புற்று அமைதியுடன் சிம்மாசனம் அருகே அணிவகுத்
தாப்போல் காத்து நிற்கின்றனர். மற்றொரு பெரும் வைரமிழைத்த கொப்
பரைமுன் நெருங்குகிறார்கள். ஊர்ந்து வந்து வாயுதேவன் குளிர்காற்று
வீசிநின்றான். திவ்விய மணங்கமழும் எல்லா ஔஷதிகளின் ரஸங்கள் அப்
பொழுது கலந்துவந்து மிதந்தன. வைடூரியம் பொதிந்த பேலாவில் அந்த
ரஸத்தை எடுத்து சக்ரவர்த்தித் திருமகனையும் மைதிலி மகாராணியையும்
மங்களாபிஷேகம் செய்கின்றனர்! சக்ருக்னன் வெண்குடைபிடிக்க: ஸுக்ரீ
வனும் விபீஷணனும் வெண்சாமரம் வீச, பெரிய மேளமொலிக்க மகுடா
பிஷேக வைபோகமே என்று நாரீமணிகளின் கீதம் கேட்க, மங்களாட்

..வகு ..ம்பீரமாக ஸ்ரீராமபட்டாபிஷேக மஹோத்
..! காணும் பாக்கியசாலிகள் தெய்வலோக அனு
..ர்ச்சிப்ப..வசம் மனிதனை தேவனுக்குகிறது!

..வே..ண்டோவென்று கேட்பது போலிருந்தது.
..யார்கள் மற்ற எல்லோர் பார்வையும், உணர்ச்சியும்!
..ரும் புனிதக் காட்சியாயமைகிறது இந்த ராமோத்ஸவம்!

இடது புறம் திருமகள் போலவே திகழ்கிருள் அயோத்தி
..! பூமியிலிருந்து தோன்றிய பொறுமை வடிவமாய் அன்னை
..ழிகிருள், தேவி பூமகள்! ராகவனைப் பார்க்கின்ருர்கள். ஆநந்த
வைதேகியை காண்கிருர்கள், பேரானந்தம் பொங்க அப்படியே
கிருர்கள். வாயுகுமாரன் கரங்குவித்தவண்ணம் நீராய் உருகு
பின்னே நின்று காட்சியளிக்கிருன் சுமித்ரைச் செல்வன்! செழுங்
..மானுன மன்னர்பிரான் மைதிலி மனுளனை இரு பக்கலிலும்
..கிருர்கள் பரத சத்ருக்னுதிகள்! மற்ற நான்கு உபதிசைகளில்
..துக் காட்சியளிக்கின்ருர்கள், ஸுக்ரீவனும், ஜாம்பவானும், விபீ
யுவராஜாவான தாரையின் புதல்வனும், நடுவே நடு நாயகமாய்
..ருன் காண்போர் மனத்தில் இன்பம் பெருக்கும் சியாமளரூபன்!
.. தனிப்பெரும் ஜோதியும் தேஜஸும் பனிபோல் மெல்லிய
..யாயெழுந்து சூரியக்காந்தியின் பல வர்ணங்களை ஜொலிக்கச்
..ரே நீல வர்ணம்போல் காட்சி! ஆனல் உற்று நோக்க
..செம்மை படிந்த ஊதாவர்ணமாகி அதிரூப அவயவங்களின்
.. அமைப்பைக் கோடிட்டு விளங்கவைக்கின்றது. அண்டை
..ங்கால் அவ்வர்ணம் காணமுடியாமல் மறைகின்றது. பஞ்சைப்
மெல்லிய மிருது தன்மையை கொண்ட ரூபந்தான் தரிசிக்கத்
தெளிவாகின்றது. இக் காட்சியைக் கண்ணுற்ற இந்திரன் நூறு
..மரை தொடுத்த, ஜ்வலித்துந் கொண்டிருந்த, ஓர் மாலையை வாயு
..லம் ஸ்ரீராமபிரானுக்கு அனுப்பிவைக்கிருன். எல்லாவித ரத்னங்
..ழைக்கப்பெற்று தூய ஒளிகொண்டு அழகுற்று விளங்கும் அவ்
ததம மு.. ..லையை கையிலேந்தி ரத்னமயமான பீடத்தில் கொலுவீற்
..ருக்கும் ந..ந்திரனிடம் வாயுபகவான் உருவாகிச் சமர்ப்பிக்கிருன்.

அந்த நற்சமயத்திலே, அச்சுபவிழாவிலே தேவர்களும் கந்தர்வர்
களும் கானம் செய்கின்ருர்கள். வானிலே அப்ஸரஸ்திரீகளின் நர்த்தனம்
நடைபெறுகின்றது! அச் சுபத்தினத்திலே பூமி யெங்கும் செழித்துக்
..ழித்தது! மரங்களில் கனிகள் செரிந்து அழைக்கின்றன. புஷ்பங்கள்—
எல்லாப் புஷ்பங்களும்—நறுமனம் கமழ்ந்து எங்கும் எவர்க்கும் மலர்கின்
றன! அப்புனித திருவிழாவில் எங்கும் மங்களம் பொங்கித் தங்கித் திளைத்
துத் திகழ்ந்தது! மானிடத்தும் தெய்வீக உணர்ச்சிததும்பித் தவழ்ந்தது!

அத்திவ்யபட்டாபிஷேகமகோத்ஸவத்தில்ஸ்ரீராகவன்லக்ஷம் குதிரை
களையும், அப்போதீன்ற பசுக்களையும், எருதுகளையும், தானமாக முதலில்
வேதியருக்கு வழங்கினுன். முப்பது கோடி பொன் நாணயங்களும் ஆபர
ணங்களும் ஆடைகளும் தானம் வழங்கப்பட்டன, கதிரவன் கிரணங்களை
நிகர்த்த மணி ரத்தினங்களிழைத்த காஞ்சன ஹாரத்தை புருஷோத்தமன்

ஸுக்கிரீவனுக்குத் தன் கையால் ஈந்தார். ைை
மிழைத்த இரு அழகிய தோள்வளைகளை அங்க
திரிகை சோபையுற்ற திவ்ய முத்துமாலையை
அன்னை ஜானகி ஹனுமானைக் கண்குளிரக் க
வஸ்திரங்களையும் ஆபரணங்களையும் பிரியமா
தென்று கண்டு தன் கழுத்திலிருந்த மேன்மையா
எடுத்து கணவரை நோக்குகிருள்.

இங்கிதங்களின் கருத்தை அறியும் கலாவல்லவன
திருமகளை நோக்கி புன்னகை அரும்பி உவகையுடன் பே
''அன்பார்ந்த ஸுந்தரி! எவனிடத்தில் நீ அதிகமாக கடமைப
எவனிடத்தில் பக்தி ஒன்றுதான் மேலிட்டு வாழ்க்கை லட்சி
கிறதோ, வீரியமும், விடாமுயற்சியும், புகழும், உண்மையும், ச
மும், மரியாதையும, நயமும், ஆற்றலும், தாளாண்மையும், முன்ஜ
யும், எல்லாம் பரிபூர்ணமாயமயப்பெற்ற அவனுக்கு அந்த
வழங்குவாயாக'' என்ருன். உடனே அந்த மான் விழியாள் அ
குமாரனுக்கு கொடுத்தாள்.

வானரோத்தமன் அந்த நில ஒளி விளங்கும் மாலையை
யுடன் வாங்கி பயபக்தியாய்க் கண்ணில் அமர்த்தி அதை தரிக்
அப்போது வெண்மேகங்கள் சூட்டிய மலைச்சிகரம் போல் விளா
மாருதி! அதன் பின்னர் த்விவிதன், மைந்தன், நீலன், ஆகிய
வானரத் தலைவர்கள் தனித்தனியே தகுந்தபடி பரிசு பெ
கலையும்போது விபீஷணனும் ஸுக்ரீவனும் அங்கதனும்
மற்ற எல்லோரும் ஒரு குறைவுமின்றி ராகவனுல் கௌர
உள்ளம் பூரித்தவர்களாய் விடைபெற்று வெளிப்பட்டார்கள்
மன்னரையும் பட்டமகிஷி பிராட்டியையும் வலம்வந்து பணிந்து
ளனைவரும் கிஷ்கிந்தைக்குப் பிரயாணமாயினர். அவர்கள் ம
ஸுக்ரீவனும் பிரத்தியேகமாக கௌரவிக்கப்பெற்று விடைபெ
நகரம் சென்ருன். பெரும் புகழுடைந்த தருமாத்மா விபீஷண
நாயகனிடம குலதனம் பெற்றுக்கொண்டு லங்கை சென்ருன்.

எல்லோரும் அவரவரிடம் சென்றபின்னர், வீரா
முறைப்படி அரசசபை கூட்டி, சிம்மாசனமேறி, செங்கோ
கிரீடம் புனைந்து, அரசு புரிந்தான்! அயோத்தி ராஜ்யம் உ
தத்தில் ஆழ்ந்தது! அப்பொழுது அயோத்தி ஈசனுன சர்வ
யனுன ஸுந்தர புருஷனுன ஸீதாராமன் முன்னர் லட்சுமண
ைக முடி சூட்டி தன்னுடன் அரசுபுரியுமாறு தன் அன்பை வெ
ஞன். ஆனுல் அண்ணல் அடிகளில் பணி செய்வதே வாழ்க்கை லட்சிய
மென்றும் அரசுபுரிவது அவனுக்கு வெகுதூரமென்றும் அதை அறவே
மறுத்துவிட்டு அவனும் தன் அன்பை வெளியிட்டான். பின்பு கோசலேந்
திரன் பரதனைக் கண்ணுற்ருன். அங்கும் மறுப்பின் சின்னங்களைக் கண்
டான். எனினும் அவைகளை பொருட்படுத்தாது, அரசன் முறையில்
ஆக்கினையிடவே, அவனும் அப்படியே என்று அடிபணிந்தான். மகாத்மா
பரதனுக்கு தருமாத்மாத்மா தாசரதி இளவரசு பட்டாபிஷேகம் செய்து
வைத்தான்.